உ

கடவுள் துணை.

பெரியபுராணம்

அறுபத்துமூன்று நாயன்மார்களில்

ஒருவராகிய

திருநாளைப் போவாரென்னும்

# நந்தனார் சரித்திரக்

## கீர்த்தனையும்

## சிதம்பரக்கும்மியும்

அடங்கியிருக்கின்றன.

இஃது,

மணிமங்கலம்.

வடிவேலுமுதலியார் அவர்களால்

பார்வையிடப்பட்டு.

---

மதுரை புதுமண்டபம் புஸ்தகஷாப்.

P. N. C. கடைகாரியம்

N. குருசாமிநாயுடு அவர்களால்

---

பிடாரித்தாங்கல்,

நாராயணசாமிமுதலியார் குமாரர்

சிதம்பரமுதலியாரவர்களது

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1905.

---

சென்னை பிரம்பூர் குயப்பேட்டை 65-வது நெம்பர் வீடு.

# விளம்பரம்.

## சீர்மையிலிருந்து வரவழைக்கப்பட்ட

எங்களுடைய

ரோஜாப்பு மொட்டை

பரிட்சித்துப் பாருங்கள்

ரோஜாப்பு மொட்டு என்பது

# ஒருஷோக்மோதிரம்.

இந்தமோதிரமானது அன்றுஅரும்பி இதழ்மலர்ந்த மொட்டை நடுவில் உடையதுபோல பிரகாசிக்கும் பார்வைக்குமிக்கபகட்டாயும் சோபிதமாயுமிருக்கப்பட்ட 9-போலி ரவைகள்வைத்து இழைத்தது இதுஇங்லாண்டு கெமிகல்கோள்டு யென்னும் ஒருவித லோகத்தாற்செய்து விராகனிடை 8-ரூபா விலையுடைய சுயத்தங்கத்தினால் மேற்பூசனும் பூசப்பட்டது. இந்தமோதிரத்தில் எண்ணை பட்டாலும் ஜலம்பட்டாலும்பளபளப்பு மங்குகிறதில்லை கொஞ்சம் காந்தி குறைந்தபோதிலும் சீமை சுண்ணாம்பு பூசிவைத்து புருஷினால் துடைத்து விட்டால் மறுபடியும் பிரகாசிக்கும் இந்தமோதிரத்திற்கும் ஜெனங்கள் 2,000 ரூபாய் விலையிருக்குமேயென்று மதிப்பிடுவதற்கு அஞ்சமாட்டார்கள்.—இதன் விலை 2 - ரூபாய்தான் வி. பி. தபாற்கூலி பிரத்தியேகம்.

8 - மோதிரத்திற்கு மல்பீஸ் இனாம்.

8 - எட்டு மோதிரங்கள் ஒரேதடவையில் வாங்குவோருக்கு நாணயமானதாய் (ஒரு பீஸ் சலவைமல்) அதாவது 20 - கெஜமுடையதான் இனாமாய் அனுப்பப்படும்.

4 - மோதிரத்திற்கு இனாம்.

4 - நாலு மோதிரம் ஒரேதடவையில் வாங்குவோருக்கு சரட்பட்டன் ஒருசெட்டு இனாமாய் அனுப்பப்படும்.

என்னுடையமுழுகேட்லாக் வேண்டுமானால் அரையணா ஸ்டாம்பு அனுப்பினால் அனுப்பப்படும்.

வித்தியாரத்திநாகர அச்சுக்கூடத்தலைவர்

பி. நா. சிதம்பரமுதலியார்.

பெரம்பூர் பாரெக்ஸ் போஸ்டு மதராஸ்.



உ

திருச்சிற்றம்பலம்.

# கதையின்வரலாறு.



திருவெண்ணீறுதரித்த பரமசிவனுனவர் திருக்கொலுவீற்றிருக்கும் வெள்ளிமலையானது இமயமலையின்பக்கத்திலிருக்கின்றது அதுபெரியோர்கள் பரிசுத்தமனம்போலும் ஸ்படிகம்போலும் பலவுலகிற் புண்ணியங்களெல்லாம் திரண்டுருண் டொருவடிவாகப் பிரகாசிக்கின்றதுபோலுமிருக்சின்றது அதில்-இருக்கு-எசுர்-சாமம்-அதர்வணம்என்னும் நான்குவேதங்களினேசையும் வித்தியாதரர்கள்வீணையோசையும் ஆனேகளுடைய முழக்கமும் வானதுந்துபிமுழக்கமும் இடைவிடாதிருக்கின்றன, அன்றியும் தேவர்கள் சிரமாலேகளும் கற்பகமாலேகளும் பற்பலமுனிவர்க ளஞ்சலிசெய்து சாத்துமலர்மாலேகளும் அம்மலேப்பக்கங்க ளெங்குநெருங்கியிருக்கின்றன அது அமரர் சித்தர் அசுரர் தைத்தியர் கருடர் கிந்நரர் நிருதர்கிம்புருடர் காந்தருவர் இயக்கர் விஞ்சையர் பூதர் பைசாசர் அந்தரர் முனிவர் உரகர் ஆகாயவாசிகள் போகபூமியர்என்னும் இப்பதினெண்கணங்களுந்துதிக்கப்படத்தக்கது அக்கயிலாய மலேயின்மேல் கோடாகோடிசூரியப்பிரகாசம்போலும் விளங்குகின்ற நவமணிகள் பதிப்பிக்கப்பட்ட திருக்கோயிலுக்கு முதற்கோபுரவாயிற் காவற்றலேவர் நந்திதேவர் அப்பரமசிவன்திருப்பணி விடைகளுக்கும் திருக்கொலுவிற்கும் அதிகாரத்தலேவர் அவர் உடைவாளும் திருப்பிரம்பும்பெற்று கைலேயைக் காக்கப்பட்டவர் தேவர்முதலானயாவருக்கும் மேலானவர் பரமசிவனிடத்துஅதிகபக்தியும் அன்புமுடையவர் இவரால் இரவும்பகலும் இடைவிடாமல்காக்கப்பட்ட வெள்ளிமலேயென்னும்கைலாயத்தில் அடிவாரத்தில்எச்சமயங்களிலும் நிச்சயசமயம் சைவசமயமென்று எக்கடவுளிலும்பரமசிவனே மெய்க்கடவுளென்றும் அறிந்தவ உபமன்னிய மகாமுனிவர் இவர் கிருஷ்ணனுடைய தலேயின்மேல் தம்முடைய திருவடிகளேச் சூட்டினவர் இறப்பற்றிருக்கின்றவர் சிவனுடைய கிருபையால திருப்பாற்கடலேக்குடித்தவர் சிவனிடத்திடைவிடா தன்புள்ளவர்.

இந்த உபமன்னியமகாமுனிவர் தம்மிடத்தில் அடியார்களும் பெரியோர்களும் முனிவர்களும் புடைசூழ்ந்திருக்கின்ற சமயத்தில் ஆயிரஞ்சூரியகிரணங்களும் ஒன்ருகத்திரண்டாற்போலும் ஒருபிரகாசந்திரண்டுதோன்ற அங்கிருந்தவர்களெல்லோரும் உபமன்னிய மகாமுனிவரைநோக்கி இதென்ன ஆச்சரியம் இப்படிப்பட்டபிரகாசந்தோற்றவேண்டிய காரணமென்னவென்று கேட்க உபமன்னியர்

சிவனைத்தியானித்துச்சொல்லுகிறர் தென்றிசையில் ஆதனூரில் அவதரித்ததிருநாளைப்போவார் என்னுந்திருநாமம்பெற்றவர் சிவனது திருவருளால்வருகிறரென்று இருகரமுஞ் சிரமேற்குவித்து அத்திசையை நோக்கி வந்தனஞ்செய்து ஆநந்தக் கண்ணீர் அங்கமெங்குஞ் சிந்த உபமன்னியர்போகும்போது மற்றவர்கள் தங்களுக்குண்டாகிய சந்தேகந்தீரும்படிகேட்கத் தொடங்கினர்கள்.

எங்களாண்டவராகிய முனிவரே சிவனுடைய திருவடிகளையல்லாமல் மற்றொருதெய்வத்தி னடிகளையும் வணங்கமாட்டீரே இப்பொழுது வணங்கவேண்டிய காரணமென்னவென்று முனிவர்கள் கேட்க உபமன்னியர் சொல்லுகிறர் கேளுங்கள் பெரியோர்களே முனிவர்களே மற்றுமுள்ளவர்களே பரமசிவன் தரிக்கப்பட்ட திருமாலையும் திருவெண்ணீற்றினையும் அணிகின்றவர் உள்ளிடமில்லாது நிரையும் கொள்ளிடநதிசூழ்ந்த சோழவளநாட்டிலிருக்கும் மேற்குநாட்டில் ஆதனூரில் தீண்டப்படாதவர் குலத்தில் சேற்றில் செந்தாமரை யுற்பத்தியானாற்போலும் நந்தனரொருவர் பிறந்தார் அவர் விவேகசூட்சியும் வெட்டிமைத்தனமாகிய காணியாட்சியும் சிவபணிவிடைகளில் மாட்சியுஞ்சிவனடியாரைக்காணும் கண்காட்சியும் உடையவர் இவர் குலாச்சாரத்தன்மையும் நன்மையுஞ்செய்து மலர்பெய்து தாஞ்சிவபூசைசெய்து சிவாலயங்களுக்கு அறையும்பேரிகை மத்தளங்களுக்குத் தோலும்வாரும் யாழுக்கு நரம்பும் சுவாமிக்குக் கோரோசனையும் முறையாகவும்இமையாகவுங் கொடுத்துவருவார் சிவாலயத்தில் அந்திசந்தியிற் போய் தூரத்திலிருந்து மனங்கசிந்துருகிச் சிவனைப்பாடியாடி வருகிறநாளில் திருப்புன்கூரில் பரமசிவத்தைத்தரிசிக்க ஆதனூரிலிருந்துவந்து திருக்கோயிலின் திருவாயிலினின்று சிவலிங்க தெரிசனைகாண ஆவலாகவும் வணங்கிப் பாடுகையில் பரமசிவனர் சன்னிதிக்கு முன்னிருக்கும் நந்திகேசுரரை விலகும்படிசெய்து காட்சிகொடுத் தருளினர்.

நந்தனர் சுவாமி தரிசனஞ்செய்து வரும்வழியில் ஒரு பள்ளத்தைக்கண்டு அதைப்பெருங்குளமாகவெட்டி தம்முடைய ஆதனூரென்னுஞ் சேரிக்குப்போனர் இவ்வாறு பலஸ்தலங்களை வலஞ்செய்து நலஞ்செய்து ஆத்திமலரணிந்த சிவனையேத்திச் சிதம்பரத்திற்குச் செல்லமனம்வந்து தம்முடையஜாதி கோயிலுக்குப்போக யோக்கியமில்லையென்று விசனமடைந்து நாளைக்குப்போவோமென்று சொல்லியிருந்தார் சிவபணிவிடையாலும் தன்னை யடிமைகொண்டிருந்த வேதியருத்தரவு தடையினலும் போகக்கூடாமையால்அனேகநாள் சென்றன, நாளைப்போவோமென்றபடியால் அவருக்குந் திருநாளைப்போவார் என்று பெயர்வந்தது அதன்பிறகு திருநாளைப்போவார்சிதம்பரம்வந்ததும் சுவாமி அவருக்குக் காட்சிதந்தும் இதனடியில்வரும் நொண்டிச்சிந்தினல் தெரிந்துக்கொள்ளலாம்.



உ

சிவமயம்.





# திருநாளைப்போவார்

என்னும்

# நந்தனார்சரித்திரக்கீர்த்தனை.

——— (*)—(*) ———

கற்பகவிநாயகர்துதி.

காப்பு-வெண்பா.

கந்தன்றனையளித்த காதலனார்பேருபெற்ற
நந்தன்சரித்திரத்தை நானியம்பச்-சுந்தரஞ்சேர்
தில்லைமணிகோபுரத்திற் றேடிவளர்கற்பகத்தாள்
அல்லும்பகற்றுணையே யாம்.

முக்குருணிவிநாயகர் துதி.

விருத்தம்.

நந்தணிகரந்தான்றில்லை நாயகனருளால்வந்த
நந்தன்முக்குறுணியான்றன் நளினபொற்றாள்வணங்கி
நந்தன்பாலுண்ட நற்புகழ்ச்சொலிப்பின்போர்
நந்தமுற்றுளகினாளும் நலமுடன்வாழ்குவேனே.

சபாபதி தோத்திரம்

கலி விருத்தம்.

தக்கசீர்த்திகொள் நந்தன்சரித்திரம்
மிக்கக்காதையை யெடுத்தேவியம்பிட

செக்கர்மேனியன் தில்லைச்சபைதனில்
நக்கத்தோமெனுந் தாங்கள்சிரங்கொள்வாம்.

சிவகாமி தோத்திரம்.

விருத்தம்.

பாம்பினைத்தந்தையாகப் படைத்துப்பின்யெவருங்காணப்
பாம்பினைப்பணியாய்க்கொண்ட பரையருட்பாதமேத்திப்
பாம்பினிற்புலியும்பாம்பும் பார்த்திடநந்தனுர்க்கன்
பாம்படிமுத்திதந்த பருங்கதைபகருவேனே.

சுப்பிரமணியர்-தெய்வானை-சரஸ்வதி-இலக்குமி

விஷ்ணு இவர்கள் துதி.

விருத்தம்.

சச்சிதானந்தசதாசிவனருளைச் சார்ந்தநித்தியானந்தநந்தன்
உச்சிதக்கதையைக்கீர்த்தனையாக வுலகெலாந்துதித்திடச்சொல்ல
அச்சிலைவேற்கையறுமுகன்தெய்வ யானைசெங்கலைமகள்கமலை
பச்சைமான்மற்றும்பரவியதேவர் பாதபங்கயம்பணிகுவேனே.

சுங-நாயன்மார்-தில்லை முவாயிரவர்கள்-துதி

விருத்தம்.

வாதவூரடியாரோடு மற்றறுபத்துமூவர்
பாதமேவணங்கித்தில்லைப் பதிதனினுளுமேவும்
போதமூவாயிரத்தோர் பொன்னடிக்கமலமுன்னி
ஓதுநந்தன்சரித்திர முரைத்திடத்துணிந்ததாமே.

அவையடக்கம்

விருத்தம்.

சிற்பிகள்காண்போர்சிந்தையுமுவக்கச் செப்புநல்லின்புலந்தீட்டும்
விற்றனங்கண்டவறவிலானெழுதும் விதமெனமுத்தமிழென்னுஞ்
சொற்புகழ்கல்விதுரையெலாந்தெரிந்த தூயநற்புலவர்முனக்குதிக்க
பொற்புரவிசைக்குங்கீர்த்தனமிதனைப்புவிமிசைமதிப்பர்களம்மா.[ப்

விநாயகர் துதி.

தரு-இ-ம்-மோகளம்-ஆதிதாளம்.

பல்லவி.

கணநாதாசரணம் காத்தருள்
கணநாதாசரணம்

அநுபல்லவி.

பணமாதிசேடன்றாங்கியபார்மீதினிலே நேரும்
குணமாநந்தன்சரித்திரங்கூறக்கிருபைக்கண்பாரும் கண

சரணங்கள்.

சொல்லும்ப்ரணவமூலா தூயவேதாந்த நாதா
மிலங்குமுனிவர்மனத்துளறுத்தருட் போதா
நல்லபோதகமுதல்நாடிநுகர் விநோதா
நான்சொல்லுந்தமிழைநாடிரட்சிக்கும் நாதா கண

அம்பரமானமன்றுள்ளாடும்பர னளிப்க
அரைநொடியில்வலமாகிமனங் களிக்க
உம்பர்பிரானுயர்மாங்கனி யளிக்க
உளந்தளராமலுண்டமுதல்வர்துய ரொழிக்க கண

தேரோங்குநவரத்நச்சிகரமேலைக்கோ புரத்
தேவீற்றிருக்குமெங்கள்தே ।।குண்ட லாதரரே
பூசித்தவற்குவரம்புரிந்தருளு நாதா
பூசைநாடகஞ்செய்புநிதாவோ மரகர।கண

புராணிகர்சொல்-விருத்தம்.

வளம்பெருதருமோங்கியவாத
னூரினில்வாழ்ந்திடும்புலையர்
உளமகிழ்ந்தெங்கள்குடிப்பெயர்விளங்க
யுசிதநற்றீபமேமணியே
கலங்கலாக்கதிரேயெனப்புகழ்ந்தோது
கதித்தசீர்நந்தனார்சரித்திரம்
விளம்பிடமுதலிற்றேடயம்படித்து
மேன்மையுமிகப்படித்தனனே.

தோடயம்.

இ-ம்-நாட்டை-ஆதிதாளம்,

திருவளர்தருமாத னூர்-செறிபுலைக்குடிலவதாரர்
தருமநெறிநந்தனர்ப் பேரர்சரித்ரமதனைச்சொல்லவே-ஆ-ஆ
அருள்வளர்கஜமுக சா-அம்மைதந்தருளுஞ்சுவாமி
அங்குசக்கரதல சாமி-அம்புயத்தாளிதயந்துணிவே-ஜெய

வண்டணிமாமலர்த் தாரன்-மண்டலம்வாழ்த்தியதீரன்
மண்டுமெலியற்கு தாரன்-மன்னுக்கதைசொல்வே-ஆ-ஆ
புண்டரீகபுரத் தீசன்-புராரியுளமகிழ்நேசன்
தண்டாளர்மாமண வாசன்-தாமரைத்தாள்கடுணேயே-ஜெய

மங்களம்

விருத்தம்

சங்கரன்றனக்குச்சண்முகன்றனக்குஞ்சதுர்முகப்பிரமனுர்தமக்கும்
பங்கயமரர்க்குமவர்மணையாட்கும் பார்மகட்பாவலர்தமக்கும்
தங்கியவட்டவசுக்களானவர்க்கும் சதுர்மறையோதுமந்தணற்கும்
பொங்கியமூவாயிரவர்நந்தனுர்க்கும்போதுபட்டபங்களப்புகல்வாம்.

தரு-இ-ம்-அசாவேரி-அடதாளம்

பல்லவி

ஆதிமத்தியாநந்தனுக்குமங்களம் எங்கள்
அநந்தநந்தனுர்க்குமங்களம்.

அநுபல்லவி

பாதிமதிசதியும் பாப்புபுலி யுரியும்
சேரக்குழையணியுந்துலங்கவருட் புரியும்

சரணங்கள்

சிலையைவடிவழகிற்சிறந்தவொருபெண் ணுக்கி
சிலைவளைத்தபரசுராமன்கர்வத்தைப் போக்கி
மலையைச்சுமந்துபெருமடுவிலொருகாற் றாக்கி
மாநடனங்கள்செய்தமாயமானிணை யெய்த ஆதி

குருபரநாதருக்குங்குரமகட்பாக ருக்கும்
அருணகிரிநாதனுக்கருள்செய்விசாக ருக்கும்
ஒருமுகாவெனஉலங்களித்தவ ருக்கும்
உம்பர்கோனுக்குகந்தவுயரரசினைத் தந்த ஆதி

பெரியபுராணச்செய்யுள்-விருத்தம்

திருமறையோர்புராணமவைபதின்மூன்றுசிவமே
தியரனவர்வழிபட்டபுராணமீரண்டு
குரையழன்மாமாத்திரரொன்றறுவர்முடிமன்னர்
குருநிலமன்னவரைவர்வணிகர்குலத்தெய்வ

ரிருமைநெறிவேளாளர்பதின்மூவருடைய
ரிருவாசலியர்குயவர்கயில்வினையாளர்
பரதவர்சான்றார்வண்ணார்சிலைமறவர்நீசர்
பாணரிவரோரொருவராம்பகறுங்காலே.

உபமன்னியபகவான் ரிஷிகளுக்குச்சொல்லிய வசனம்.

இவ்வுலகில் பெரிதாகிய வேதசாஸ்திரங்களுக்குள்ளேமிகவுஞ் சாரமாகிய பரமசிவபத்தியை யுண்டுபண்ணுகிற பத்தி விலாசத்தை உபமன்னிய பகவானனவர் அனேகரிஷிகள் கேட்க சொல்லுகிறார் பெரியபுராணமென்று சொல்லப்பட்டநூல்சேக்கிழார் சுவாமிகளா லேசெய்யப்பட்டது ஸ்காந்தபுராணத்திலும் இன்னமனேகபுராண ங்களிலுஞ் சொல்லப்பட்ட பக்திமார்க்கங்களாகியகடலிலேநீரைக் கையாலள்ளிக் குடித்ததுபோலச் சிலகீர்த்தனங்களினாலும் விரு த்தங்களினாலும்சிவபத்தர்கள்சரித்திரங்களைக்கொண்டாடுவதுபோ ல உளறினேனென்று சிதம்பரம்கோபாலகிருஷ்ணையன் பெரியோர் அடிவணங்கி ஆநந்தம்பெருகிச்சொல்லிதிருநாளைப்போவார் சரித்தி ரத்தை யாவரும்வினவி கேட்கும்படி சிரம்வணங்கி விணவினேன் பாரதம் பாகவதம் பகவற்கீதை சிவரகசியம் ஸ்காந்தமுதலியவாகிய பக்திஞானவைராக்கியசாஸ்திரங்களிலே மிகவுஞ்சாரமாகியபரமசிவ பக்திபண்ணமல் இதோவேதபாரங்கதனாயிருக்கின்ற பிராமணனைப் பார்க்கிலும் பரமசிவபாதாரவிந்தம் பக்திபண்ணுகிறவன் பறையனா யிருந்தாலும் பதினன்குலோகத்தையும் பரிசுத்தம் பண்ணினவனெ ன்று உபமன்னிய பகவான்சொல்ல அதற்கு ரிஷிகள் சொல்லுகிறார் கள் பக்திஞானவயிராக்கியங்களைத்தெரியப்படுத்தாநின்ற வேதபுரா ணங்களைப்பார்க்கஅறியாராம்அன்றியில் அவ்விவேகிகளாயிருக்கிற சண்டாளருக்குளப்படிபக்திவருமென்றுரிஷிகள்கேட்கஉபமன்னிய பகவான் சொல்லுகிறார்.

உபமன்னியபகவான் ரிஷிகளுக்குச்சொல்லுகிறார்

நொண்டிச்சிந்து-இ-ம்-புன்னாகவராளி.

பழணமருங்கணையம் - புலைப்-பாடியதுகூரைவீடுதனில், சுரை யோபடர்ந்திருக்கும்-அதைச்-சுற்றிலும்நாய்கள்குலைத்திருக்கும், ப றந்தோடிவட்டமிடும்-இளம்-பச்சைப்பிசிதைமே லிச்சைகொண்டு, கோழிகூவுங்கூக்குரலும்-பாழுங் கொல்லையருகினில்வெள்ளெலும்பு ம்,நரம்புங்குவித்திருக்கும்-பல-நெட்டிமிதந்திடுங்குட்டைகளில்நண் டோகுடியிருக்கும்-சிறு-நத்தைகமடம்வலுத்திருக்கும், தோலூறுங்

கேணிகளில்-வெகு-சொல்லைப்படும்வாடைசொல்லறியாப், பரம்போ அடித்திருக்கும்-வயற்-பக்கங்களில்மெத்த நொக்கெனும்பும், கிழித் தோல்நரம்புகளும்-அவர்க்-கினமில்லைசிறுமீனுகளும்,தெருவில்விளை யாடிக்கொண்டு- அவர் -தெந்தினம்பாடுவார் சுந்தரமாய், இலுப்பை மணியரையில்-கட்டி-இண்டந்தலைகளில்பூண்டிருக்கும், சங்கொடுகா தணியும்-கருந்-தாவிடமேயவர்தூவிடமாம்,மணியோதரித்திருப்பார் தெரு-வாசற்புரந்தனிலேசிக்கொண்டு, கொண்டாட்டமாயிருப்பார்- கையைக்-கொட்டிக்கொண்டுதனக்கிஷ்டமுடன், மதுவுண்டுகெக்க லிப்பார்-பறை-வாத்தியமும்வெகுநேர்த்தியுடன்,இருக்கும்புலைப்பா டி-அதில்-ஈசன்திருவடி நேசமுடன், தரிக்கும்ஒருபுலையர்-அவர்-சா திமுறைதவறுமனும், நந்தனுரவர்பெயராம்-வெகு - நல்லவராமிந்தத் தொல்லுலகில்,அவரேசிவனடியார்-அவர்க்-காருமெதிரில்லைத்தரணி யில்,கோடிகோடிசென்மங்களோ-முன்னங்-குற்றமரச்செய்தநற்றவ மே, அவதாரமானதுவோ-ஈசன்-அன்புபுரியும்பேரின்பசுகம்,கொள் ளைகொள்ளவோபிறந்தார்-திருக்கோயில்வலஞ்சுழன்றுவனுடன்,செ ய்யும்பணிவிடைகள்-ஈசன்-சிந்தைமகிழ்ந்துகுளிர்ந்திடவே, மத்தள பேரிகைக்கும்-இசை-வார்கொடுத்துப்புறந் தோல்கொடுத்து, மறவா மலேதினமும்-நல்ல-வாசம்பெருங்கோரோசனையும், தேவாலயங்கள் தோறும்-வந்து-சித்தமுருகிய பத்திவெள்ளம், பொங்கோடிக்கங்கு கரை-என்று-பேதமறியவொண்ணுதுகண்டீர், சாதியில்நீசனவர்-பே ணிச்-சாருந்தொழின்முறையாரும்பகல், திருப்புன்கூர்சென்றரசனை க்கண்டு-சேவித்திசைபாடிபாவித்தவன்,தில்லைசிதம்பரத்தைக்-கண்டு சேவிக்கவேண்டுமென்றுவனுடன், நாளைப்போமென்றுராம்-தன்னை- நாடும்பறையர்களோடிவந்து, அண்ணேநீபோகாதே-நமக்-காண்டை பொல்லாதவன்வேண்டிக்கொள்ளான், பார்ப்பாரசாதியுண்டே-என் ன-பாடுபடுமுழக்காடுமங்கே, நமக்குந்திருநாளோ-அந்த-ஞாயமுண் டோயென்னமாயமிது, வென்றேதடைசெய்தார்-சிவன்-வேடிக்கை தானென்றுநாடிக்கொண்டே,அறியாதுபோலிருந்த-செம்பொன்-ன ம்பலத்தாடியைக்கும்பிடவே, ஆதனூர்தனிலிருந்து -விடும் - அம்பு போலப்பறந்தையமின்றித், தில்லையருகில்வந்தார்-மனந்-தேறிக்கொ ண்டார்குறையாரிக்கொண்டார், கண்டாமணியோசை-காதில்-கேட் குதென்றுரதைபார்க்கவென்றே,கொண்டாட்டமாகிவந்தார்-கையை க்-குவித்துக்கொண்டேதனக்கும்பிட்டதோ,வேன்றேமனமகிழ்ந்தா ர்-தெரு-வீதியிலேவந்தார்காதலுடன், கண்டார்களையாறி-இரு-கண் களிலானந்தம்பொங்கிடவே, நின்றுர்மதிற்புறத்தே -வெகு-நேர்த்தி

யென்றரிதைப்பார்த்ததில்லை, பணிந்தார்பரவசமாய்-நல்ல-பாக்கிய சாலிகளாகுமென்றார், இதுதானேநில்லைபதி-என்று-எக்கலித்தாரா டிக்கெக்கலித்தார், ஐயாவுன்சன்னதியோ-நா-னுசைகொண்டுவந்தே நேசமுடன்தெருவில்பொடித்தூளை-அள்ளிதேகமுழுதினுந்தாகமு டன், தரித்தார்திருநீறாய்-நாலு-சாஸ்திரவேதங்கள் பார்த்தவரும், பெரியோரிருக்குமிடம்-இந்தப்-பேயனிருப்பதுஞாயமல்ல, நானோ பறைச்சாதிதில்லை-நாதன்தரிசனமாதரவாய், பண்ணுபடுபாவி-இந்த பாரிலிருப்பதுசீரல்லவே, என்றேகுளத்தோரம்-புக்கி - யேங்கிநின் றார்துயர் தூங்கிநின்றார், ஓயாப்பெருங்கவலை-கொண்டு - உள்ளங்கு ழைத்திடவெள்ளமெனதை,கண்ணீர்கரைபுரள இரு-கைதொழுதாரவ ர்மெய்தொழுதார், கிழேபுரண்டழுதார்-ஒன்றுங்-கேள்விமுறையில் லையோநாதா, வென்றேதலைகுனிந்தார்- எந்தன்- வேதனையைக்கண்டு ஆதரிக்குந்,தெய்வங்கிடையாதோ-பாவி-சித்தந்தெளியமுத்திதந்து, வாவென்றழைப்பாரோ-விண்ணில்-வானவர்போற்றுமூனமிலா, கன கசபைநடனம்-கண்ணிற்-காட்டக்களித்திடநானடியேன், வருந்தித திப்பேனோஎன்றன்-வாணுளுருகுதுவீணையே, அடடாயீதென்ன வென்று-உயர்அந்நகர்வீதியைச்சுற்றிவந்தார்,இரவுபகலோயாரதை ஈசன்கண்டுவிசுவாசமுடன்,பாலகிருஷ்ணன்பணியுந்திருப்-பாதமுள் ள தில்லைநாயகனே,வில்லுருவாகவந்து-காட்சி-தான்கொடுத்துக்கடா ட்சித்தபின்,ஏரியினிடமூழ்கி-வெகு-இன்பம்பெருகியஅன்பருடன், வேதமுனிவடிவாய்த்-தில்லை-வேதியர்கைதொழுதேயழுவார்,அங்கம் புளகிதமாய்ச்-செம்பொ-னம்பலத்தாடியசம்பிரமத்தைக் கண்டார ருந்திலராள்.

கீ-ம்இ-ம்-எது குலகாம்போதி-சாப்புதாளம்.

பல்லவி.

நீசனுய்ப்பிறந்தாலும் போதும்
ஆசையுடனம்பலவனடியிலிருந் தாலும்-நீசனுய்

சரணங்கள்.

கோதிலாத்தவங்கள் புரிந்தாலுந்-தங்கள்
குலவண்மைதவறுநெறியி லிருந்தாலும்
வேதமுடியாவுமுணர்ந் தாலும்-மாயை
விலகாதுஒருநாளுந்துலையாது துன்பம்-நீசனுய்

களவுகுலைசெய்து வந்தாலும்-பழிக்
காரருடனன்னேரங்கூடியிருந் தாலும்
வளமறவேகெட் டாலும்-நல்ல
மனிதனவனிடமாகமறலியணு காது-நீசனுய்

எந்தகருமங்கள்செய் தாலும்-எங்கு
மிடையாதகொடையாளி யெனவிருந்தாலும்
கோத்திரக்கீர்த்திமிருந் தாலும்-எங்கள்
கோபாலகிருஷ்ணன்தொழும் பாதம்நினையாதோன்-நீசனுய்

வசனம்.

அப்படியே பத்திசெய்தால் போது மற்றஜாதி வருணச்சிரமங்களிலே ஒன்றும் பிரயோசனமில்லையென்றும் ஒரு இதிகாசத்தைச் சொல்லுகிறார் பூர்வத்திலே தில்லைவெட்டியா னென்றும் சாம்பனென்றும் ஆதனூர நந்தசாம்பனென்கிற திருநாளைப் போவானென்றும் பெயர்பெற்ற இம்மூன்றுபேர்களில் நந்தசாம்பனென்றவர் மாத்திரம் தில்லைமூவாயிரம்பேர்களும் பார்க்கச்சாபப்பிரவேசமானரென்று சொல்ல ரிஷிகளெல்லோரும்ஆனந்தமடைந்துஉபமன்னியமகாரிஷியைப் பிரதட்சணஞ்செய்து பாடிவணங்கி அஞ்சலிசெய்துஓய்சுவாமிஎல்லோரும்பார்த்திருக்கையில்முத்தியடைந்ததிருநாளைப்போவாரென்றும் பெயர்படைத்துப் பேறுபெற்ற சிவபக்தருடைய சரித்திரத்தை சொல்லுங்களென்று ரிஷிகள்பிரார்த்தித்துகேட்கும்போது உபமன்னியமகாரிஷியானவர் மிகவுஞ்சந்தோஷமடைந்துஈஸ்வரனுடையகுணங்களைவர்ணிப்பதைப்பார்க்கிலும்ஈஸ்வரபக்தர்களுடைய குணங்களைச்சொல்லுகிறது மெத்தவும் புருஷார்த்தமென்றுசொல்லத்தொடங்கினர் சிதம்பரத்துக்குநாளைப்போவேனென்றுசிலதுநாள்நந்தன்சொல்லிவந்தபடியால் நந்தனுக்குநாளைப்போவாரென்றுநாமதேயமுண்டாச்சுது ஆகிலும் ஈஸ்வரனுடைய குணங்களைச்சொன்னாலுஞ்சொல்லென்ற பக்தர்களுடையகுணங்களைச்சொல்ல யாவருக்குந்தெரியாது தெரிந்தமட்டுஞ் சொல்லுவோமென்று மயிர்சிலிர்த்து ஆனந்தக்கண்ணீர்வடித்து மனங்களித்துப் பரமசிவனை நினைத்து வாயால்துதித்து ஆத்துமா ஆத்துமிகளாயிருக்கின்ற தாபந்திரியங்களினலே வருத்தத்தை யடைந்திருக்கின்ற செந்தூளுக்கு அமிர்தவருட்சிதம்போல நந்தனருடைய புண்ணியத்தால் அமிர்தத்தை வருஷிக்கத் தொடங்கினர்

கீர்த்தனம்-இ-ம்-சங்கராபரணம்-ஆதிதாளம்.

பல்லவி.

நந்தன்சரித்திரமானந்தம் ஆனாலுமத்தி
யந்தம்பக்திரசகெந்தஞ் சொல்லச்சொல்ல நந்தன்

நந்தன்சரித்திரம்வெகு அந்தஞ்சிவனருக்குச்
சொந்தந்துலையும்பவ பந்தங்கேட்டபேர்க்கு நந்தன்

ஏது இவனைப்போலசாது பூமியிலிருக்
காது அரிது அருகாதுபடைத்தபேருக்கு நந்தன்

வாடிமனதிளகிப்பாடி அரகராவென்
ருடிகனகசபைநாடி சேருவேனென்ற நந்தன்

அண்டர்கொண்டாடுஞ்சோழ மண்டலநாதனைச்சூழ
கொண்டமேற்கந்நாட்டில் விண்டஆதனூரில்வாழ் நந்தன்

கீர்த்தனம்-இ-ம்-கமாசு-ஆதிதாளம்.

திருநாளைப்போவான் சரித்திரம்
தேனிலும்பாலிலுமினியதுகண்டீர் திருநா

சித்தமுருகியசிவயோகிகளும்
கர்த்தமிதுவென்றனுதினம்பணியும் திருநா

மேதினிபுகழுமாதனூர் விளக்கவந்தமாதவஞ்சாதனைபெருகிய
பேதமிலாபுவனவேதகுருபரநாதனைபணியும் திருநா

மனதில்குற்றமில்லாதவன் நித்தவஞ்சனைமாய்கைசொல்லாதவன்
கனவிலும்நினையும் சிவபதங்குருபதம் திருநா

கருத்துரைகளித்திடப் பெருத்திடவரசனும்
சாதிமுறைமைதவருதவன் பவசாகரத்திடைமுழுகாதவன் திருநா

பூதமாயாதிகளாகியவுலகம்
பொய்யிதுமெய்யிதுவல்லவென்றறிந்திடும் திருநா

பெரியபுராணச்செய்யுள்

விருத்தம்.

பகர்ந்துலகுசீர்போற்றும் பழையவளம்பதியாகும் [ன்
திகழ்ந்துபுனற்கொள்ளிடம்பொன் செழுமணிகடிரைகாத்தா
முகந்துதரவிருமருங்கு முணரிமலர்க்கையேற்கு
அகம்பனைநீர்நன்னாட்டு மேற்கா நாட்டாதனூர்.

வசனம்.

கொள்ளிடத்துக்குச் சமீபமாகிய உலகமெல்லாம் புகழும்படிக்கீர்த்திபெற்றிருக்கின்ற அமராவதி அளகாபுரிபட்டணத்தை தோற்கச்செய்யும் மாடமாளிகை கூடகோபுரத்தோடும் அணிமாதிகள் வெள்ளாட்டிகள் வேலைசெய்யும் செல்வத்தோடும் வேதவேதாந்த தத்துவஞானமறிந்து சாக்ஷாத்தாரம் பெற்ற வேதியரோடும் மற்ற மூன்றுவருணுச்சிரமங்களாலேசூழப்பட்டு பூலோகத்தி லதிகமென்றுசொல்லப்பட்ட ஆதனூரென்னும் கிராமத்துக்கு வெளியில் நஞ்சைநிலங்களாலே சூழப்பட்டிருக்கின்ற கடைச்சாதியர் குடியிருக்குஞ் சேரியைக்கொண்டாடிச்சொல்லுவார் ஏனென்றால் ஸ்காந்தபு

ராணத்தில் அஞ்சுபேர் காண்டத்திலே சிவபத்தன் சேரியைக் கைலாயமென்று வருணித்துச்சொன்னபடியால் உபமன்னியபகவான் மிகவுங் கொண்டாடிச்சொல்லுகுருர்.

சிந்து.

பழனமருங்கணையும் புலைப் பாடியதுகூறைவீடுதனில் சுரையோபடர்ந்திருக்கும் அதை சுற்றிலுமநாய்கள்குலைத்திருக்கும் பரந்தோடிவட்டவட்டமிடும் இளம் பச்சைப்பிசிதைமேலிச்சைகொண்டு, கோழிகூவுங்குரலும் பாழுங் கொல்லையருகினில் வெள்ளெலும்பும்,நண்டோகுடியிருக்குஞ் சிறு நத்தைகமடம்வலுத்திருக்குந், தோதோலூறுங்கேணிகளில் வெகு தொல்லைப்படும்வாடை சொல்லறியாப், பரம்போ அடித்திருக்கும் வயற் பக்கங்களில்மெத்தநொக்கெலும்புங், கிழித்தோல்நரம்புகளும் அவர்க்கினமில்லைசிறுமீனுலருந்,தெருவில்விளையாடிக்கொண்டு அவர்தெந்தினம்பாடுவார்சுந்தரமாய்,இலுப்பைமணிநிரையில்கட்டி இண்டந்தலைகளில்பூண்டிருக்குஞ், சங்குதோல்காதணியு மருந் தாவடமேயவர் தூவிடமாய், மணியோதரித்திருப்பார் தெருவாசற்புறந்தனிலேசிக்கிக்கொண்டு,கொண்டாட்டமாயிருப்பார் கையைக் கொட்டிக்கொண்டு தனக்கிஷ்டத்துடன், மதுவுண்டுகெக்கலிப்பார் பறை வாத்தியமும்வெகுநேத்தியுடன், றிருக்குமுலைப்பாடி அதின் ஈசன்திருவடிநேசமுடன், தரிக்குமொருபுலையர் அவர் சாதிமுறைமைதவருதவரும் நந்தனுரவர்பெயராம்.

இவ்விதமாய்க் கடையரிருப்பின் வரப்பினில்வாழ்வார் இப்பரிவுடன் சிவன்கழற்கே விளைத்தவுணர்வோடு மந்திராபதிலூர் புலமையாண்ட தொழில் ஞமயத்திலொப்பிய நந்தனுரொருவருண்டா யிருக்கும் புலைப்பாடியில் பரமசிவன் பாதாரவிந்தத்தில் மிகுந்தஅந்தரங்கம்பொருந்தினவராகிய நந்தனுர் மிகுந்த பக்திபுரிந்திருந்தார்வீச்சுடன்சேற்றில்விழுந்தாலும்பிள்ளைப்பூச்சிமேல்சேறொட்டாதுஅத்தன்மைபோ லெத்தனைகாரியமிருக்கினும் முத்தியளிக்குங் கர்த்தனுகிய அத்தனை தனதுசுத்தமாகிய சித்தத்தில்நித்தமும்வைத்து உத்தம பத்திபெற்றிருந்தார் மற்றது மறந்தார் உற்றதுணர்ந்தார் இப்படி யெல்லாமிருந்து நல்லகுணமில்லாமற்போனல் உலகம்பொல்லாங்குசொல்லுமல்லவா.

சிந்து.

இவர்வெகுநல்லவர் யிந்தத் தொல்லுலகில் அவரேசிவனடியார்.

வசனம்.

என்று ஆச்சரியங்கொண்டுசொன்னபடியினாலேஇவரைப்போலபக்த்திமார்க்கத்தில் மிகுந்தவராயிருந்தவர் ஆரிருக்கிறார் ஆரிருப்பாரென்றுஇணைசொல்லப்போகா தணைகடந்த பரமசிவபக்திபனென்றுசொல்லப்படும்.

சிந்து.

அவர்க்காருமெதிரில்லை தாரணியில், கோடிகோடிஜென்மங்களோ-முன்னங்-குற்றமறச்செய்தநற்றவமே, அவதாரமானதுவோ ஈசன்-அன்புபுரியும்பேரின்பசுகம், கொள்ளைகொள்ளவோபிறந்தார் திருக்-கோவில்வலஞ்சுழன்றுவனுடன் செய்யும்பணிவிடைகள்.

பெரியப்புராணச் செய்யுள்

விருத்தம்.

ஊரில் விடுபருத்துடவையுணவுரிமையாங்கொண்டு
சார்பில்வருந்தொழில்செய்வார் தலைநின்றார்தொண்டினாற்
காரிலையமுக்குடுமிப் படைபண்ணல்கோயிலுரும்
பேறிகையேமுதலால் முகக்கருவிரவினுக்குப்
போர்வைத்தோன்விசுவாறென் றினையனம்புகலுமிசை
நேர்வைத்தவீணைக்கும் யாழுக்குநிலவமையார்
சேர்வுரேதந்தியங் தேவர்பிரானர்ச்சனைகட்
கார்வத்திலுடன்கோரோசனையினுவையளித்துள்ளோர்.

வசனம்.

இந்தப்பிரகாரம் நந்தனார் சிவஸ்தலங்கள்தோறும்போய்சுவாமியைத் தோத்திரஞ்செய்கிறதெப்படியென்றால்.

தரு-இ-ம்-காம்போதி ஆதிதாளம்

செந்தாமரைமலர்கு ழோபைகளும்மேடையும்
செறிந்தமலர்க ளாட்டம் சிறந்தவேளூர்
எந்தைபிரானுக்கபிஷேக கோரோசனைமேற்
றீங்தொழிந்தார்மன வாட்டம்
சிவசாரணமூர்த்தி ஞானசம்மந்தரெனத்
திருவவ்தார மகாவந்தசீர்காழி
புவனரக்ஷகன் திருநிலைநாயகியையேத்திப்
பூரித்தார் வெகுவாக

ஒருபொற்புரமுமதிலோங்கியமாயூர்
துவந்தவிஸ்வனு தீசரைமிகத்தொழுது
ஒருமுகக்கருவிக்குத்தோல்நரம்பிவைதந்தா
ருலகின்புகழ் விந்தன்பெயரை
உமையொருபாகத்திலுயர்ந்தபரன்றரும
னொருபசுவுங் கன்றுகமாம்வேட்கஞ்
சமைந்துப்புன்மனுநீதிச்சோழன்றனக்குக்காட்சி
தந்தவாரூர்சென்று ரன்பாக

வசனம்.

பின்னும் நந்தனார் தாம்செய்யும் தருமமேதென்றால் இவர்புலையரானபடியால் சிவஸ்தலங்களுக்குப்போய்வீதியைசுற்றிசந்நதியில் வத்து தடிவிழுந்ததுபோலஉடல்பணியப்பணிந்துபுழுதியில்புரண்டு மயிர்சிலிர்ப்பக் கண்ணீருகிற்பவாய்க்குளரி உறைதடுமாறி ஒருதரமழுது ஒருதரந்தொழுது எக்கலித்து கெக்கலித்து ஒருதரஞ்சிரித்து ஒருதரம்வெறுத்து சகமறந்துஅனல்கண்ட மெழுகதுபோ லுள்ளமுருகிஆனந்தவெள்ளம் பெருகிக் கள்ளங்கருகிச் சிவன் சிவனேஎன்றுவாய்வலிக்கப்பேசி கைவலிக்க கொட்டி கால்வலிக்கக்கூத்தாடி நிற்பவ ரொருமுகூர்த்தஞ் சித்திரத்திலெய்தும்பதுமைப்போல்கண்ணிமையால் வாயசையாமல் ஓசைதெரியாமல்யலையடித்தோய்ந்தகடல்போல் நிறைந்து தன்னை மறந்திருப்பார் தன்னினைவுவந்து பரவசந்தெளிந்துஈசனைப்பணிந்து கொண்டுவந்தபணிவிடைசெலுத்தக்கோவிலார்கேட்க கும்பிட்டுச் சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம் ஆனந்தபைரவி ரூபகதாளம்

பல்லவி.

வாரிருக்குதுதோலிருக்குது வாங்கிக்கொள்வீரே மத்தளங்கள்
பேரிகைக்கும்வீணைக்கும்நல்லவிருக்கிக்கட்டும்விசை வாரிருக்
பேரிருக்குதுபோதுஞ் சிவன்பெருமையைக் கொண்டாடிதினமுஞ்
சீருறைகின்றதில்லைப்பதியில் சேருதற்குப்பயந்தோட வாரிருக்
சிறியவனுன்சாதியொன்றுமறியாதவனேழை
சிவபெருமானுக்கடியேன் செய்யும்பணிவிடையிது வாரிருக்

சிந்து.

செய்யும்பணிவிடைகள்-ஈசள்-சிந்தைமகிழ்ந்து குளிர்ந்திடவே, மத்தளபேரிகைக்கும் - இசை - வார்கொடுத்துப்புறந் தோல்கொடு

து, மறவாமலே தினமும் நல்ல வாசனைபெருங்கோரோசனையும் பூந்தேவாலயங்கள்தோறும் வந்து சித்தமுருகிய பக்திவெள்ளம், பொங்கோடிகங்குகரை என்று பேதமறியவொண்ணாதுகண்டோர், சாதியில்நீசனானவர்.

வசனம்.

இப்படி பக்திசெய்யாநின்றநந்தனாருடையவரலாறேதென்றால்

கீர்த்தனம்-துக்கடா-ஆதிதாளம்.

ஆதனூரிலொருவேதியர்க்குள்ளே அடிமைக்காரப்பறையன்
சூதுவாதுமொன்றுந்தெரியாதவன் பரிசுத்தமானபக்தன்
கோதிலாத்தங்கள்சாதியர்க்குச் சிவகுணங்களைமிகச்சொல்லி
காதலோடுதிருப்புன்கூரீசனைக் கண்டுவருவோமென்றார்.

நந்தனார்சிவதரிசனஞ் செய்யவேண்டியதற்காக
தங்கள்சாதியாரைக்கூப்பிடுகிறார்.

கீ-ம்-இ-ம்-செஞ்சுருட்டி-ரூபகதாளம்.

பல்லவி.

சிவலோகநாதனைக்கண்டு சேவித்திடுவோம்வாரீர்

அநுபல்லவி.

பவமயங்களைப்போக்கி-அவர்
பரமபதத்தைக்கொடுப்பாரந்த சிவ

சரணங்கள்.

அற்பசுகத்தைநினைத்தோம் அரன்திருவடிமறந்தோம்
கற்பிதமானபிரபஞ்சமீது கானல்சலம்போலேயெண்ணி சிவ
ஆசைக்கடலில்விழுந்தோமினி யறிவுக்கறிவையிழந்தோம்
பாசமகலவழிதேடாமல் பரதவிக்கும்பாவியானோம் சிவ
மானிடச்சன்மங்கொடுத்தார் தன்னைவருந்தக்கரங்களளித்தார்
தேனும்பாலும்போலேசென்று தேரடியில்நின்றுக்கொண்டு சிவ

பெரியபுராணச்செய்யுள் விருத்தம்.

திருப்புன்கூர்ச்சிவலோகன் சேவடிகண்மிகநினைந்து
விருப்பினொடுந்தம்பணிகள் வேண்டுவதுசெய்வதற்கே
அருத்தியினாலொருபட்டங் காதனூர்தனினின்றும்
வருத்தமுறுங்காதலினால் வந்தவ்வூர்மருங்கணைந்தார்.

வசனம்.

நந்தனாரிப்படிச் சிவலோகநாதரைச் சேவிப்போமென்று நெடுநாளாய்ச்சொல்லி நிச்சயஞ்செய்த நந்தனாருக்கும் பறையர்களுக்குமுண்டான.

வாக்குவாதம்.

அவர்கள்—தவஞ்செய்யுஞ் சடங்கிதுவல்லவோ பறையர்கள் செய்தால் பாவமேயென்றார்

நந்தனர்—தேருந்திருநாளு மிருக்குதுபோவோம் வாரும் வாருமென்றுவருந்தியுமழைத்தார்

அவர்கள்—பொறும் பொறுமிதுபுண்ணியமல்ல எரிபோவோமென்றிவரையுமழைத்தார் சேரியைநீக்கிச்சிலதுபேர்வந்தார்

பதினொரு—பேர்கள்பண்புடன்வந்தார்நந்தன்மாரிப்போல்ஞானமார்க்கம்பொழிந்து தவமுனிபோலே தானங்கேநின்றார்

அவர்கள்—சிவலோகநாதனைச் சேவிப்போமென்றார் நந்தன் வெறுங்கையோடே போகலாகாதென்று

வாருடன்தோலும்—வரிசையாய்க்கொண்டார்அவர்கள்சேரியிலுள்ளசீரிதுவென்றார்

நந்தனர்—வந்தபுலையருக்குப் பக்திபெருகவே நெத்தியில்நீரிட்டார் அவர்கள் சத்தியந்தானென்று மெத்தவும் கும்பிட்டார்

நீ-ம்-இ-ம்-வராளி சாப்புதாளம்.

இவர்—சிங்காரமான பள்ளுபாடினர்
அவர்—அங்கங்குளிர்ந்து கொண்டாடினர்
இவர்—கோரோசனப்பையெடுத்தார்
அவர்—தாராளமாய்வாரிக்கொடுத்தார்
இவர்—சிவமந்திரம்சொல்லிச்செபிப்பார்
அவர்—தவமிஃதேயென்றுச்சாதித்தார்
இவர்—தசைப்பெருங்கடல்தாண்டினர்
அவர்—ஓசைபடாமலேவேண்டினர்
இவர்—அளவில்லாவானந்தமடைந்தார்
அவர்—அளவில்லாக்காட்சிபெற்றிருந்தார்
இவர்—திருப்புன்கூரீசனைப்பாடினர்
அவர்—விருப்போடிவரைகொண்டாடினர்.

வசனம்.

இப்படிஎல்லோருங்கூடிச் சிவனை அடிக்கடி வணங்கி அரகராவென்றுரைத்திடுஞ் சத்தம் பரமனேயறிவார் இப்படி நந்தனர் பதினொருபேர் பறையரோடு திருப்புன்கூர்வந்து சேர்ந்தார்.

சுவாமி.

கலம்வந்துலீதி வலம்வந்துகண்கள்
சலம்வந்துசோரும் பலம்வந்துதெங்கள்

குலஞ்சுத்தமாச்சு மலம்வெந்துபோச்சு
நலங்கண்டோமென்று நிலங்கொண்டுநின்றார்.

வசனம்.

அந்தஸ்தலத்திலே நந்திமிகவும் பெரிதான படியினாலே லிங்கதரிசனஞ்செய்ய நந்தி மறைந்திருப்பதால் நந்தனார் துயரமடைந்துசொல்லுகிறார்.

தரு-இ-ம்-சங்கராபரணம்-ஏகதாளம்.

கண்ணிகள்.

ஹரகரதிரிபுராந்தஜீவாதராவெங்கள்
அம்பிகையொரு பாகா-எங்கும்
நிரந்தரமாயெள்ளுளெண்ணெய்போலிருந்து
நினைப்பவர்க்கருள் யோகா
வெள்விடைமேல்வரும்விமலநமசிவாயா
விளங்கும்வேத முடிவே-நால்வர்க்குத்
தெள்ளுறச்சிவஞானம்போதமளிக்கவந்த
சிறந்தமெய்நாத வடிவே
மானுமழுவுந்தாமாகவாகுவலயமும்
மகுடஞ்சூல பாணி-எளி
யேனுங்காணத்தரிசனைதாவுமையுட
னெழுந்தருள்வீரிங்கு தோணி
மன்னுஞ்சன்னிதிமுனம்மருவுமிடதேவா
மறைந்திருக்கநினைக் காணேனே-முன்னம்
என்னவினைசெய்தேனோகண்பெற்ற பாவந்தானோ
இதயத்தில்மகிழ்ச்சி பூணேனே

சவாயி.

சிவலோகநாதன் திருச்சந்நிதானம்
மலையாகியநந்திமறைத்திடுதிங்கே
பலகாலஞ்செய்த பாழ்வினைகுவிந்து
மலையாகியிப்படி மறைந்ததோவென்றார்.

வ ம். என்றுசொல்லிய நந்தனார்பின்னுஞ் சொல்லுகிறார்.

கீ-இ-ம் தோடி ஆதிதாளம்

பல்லவி.

வழிமறைந்திருக்குதே மலைபோலேயொரு
மாடுபடுத்திருக்குதே

பாவிப்பறையனிந்த வூரில்வந்துமிவள்
பாவந்தீரேனோ உந்தன்
பாதத்திற்சேரேனோ சேரேனோ
சிவலோகநாதா மாடு
தேரடியில்நின்று தெரிசித்தாலும்போதும்
கோவில்வரமாட்டேன் ஐயே
ஓரடிவிலகினால் போதுமங்கேநின்று
உற்றுற்றுப்பார்க்கச் சற்றேவிலகாமல் மாடு

வசனம்.

இப்படி நந்தனார் தரிசனங்காண வோயாமல் அலட்டும்போது சுவாமி நந்தனார்மீதிரங்கி நந்தியை விலகச்சொன்னார்.

பெரியபுராணச்செய்யுள்.

சீரேறுமிசைபாடித் திருத்தொண்டர்திருவாயி
னேரேகும்பிடவேண்டுமென நினைத்தார்க்கதுநேர்வர்
காரேறுமெய்ப்புடன்கூர்க்கண்ணுதலார்திருமுன்பு
போரேற்றைவிலங்கவருட் புரிந்தருளிபுலப்படுத்தார்.

தி இம் துக்கடா ரூபகதாளம்.

ஒருநாளும்வாராதபக்தன் திருநாளைப்போவாரென்னுஞ்சித்தன்
உலகெங்கும்பிரசித்தம்கண்டு ஒதுங்காமலிருந்ததுகுற்றம்

கி ம் இ ம் அங்குசதோனி ரூபகதாளம்.

பல்லவி.

சற்றேவிலகியிரும்பிள்ளாய் சன்னிதானமறைக்குதாம்நீ சற்

அநுபல்லவி.

நற்றவம்புரியும்நம்மிட திருநாளைப்போவார்வந்திருக்கிறார் சற்

சரணங்கள்.

சாதிமுறைமைபேசுறான் தன்னையிகழ்ந்துபேசுறான் (டோம்
கோதிலாக்குணமுடையான கோபங்கொண்டால்தாளமாட்
வேதகுலத்தைப்போற்றுறான் விரும்பிவிரும்பிப்பேற்றுறான்
பூதலத்திலிவனைப்போலே புண்ணியபுருஷரொருவருமில்லை
பக்தியில்கரைகண்டவன் பார்த்துபார்த்துஉண்டவன்

வசனம்.

இப்படி சுவாமிசொல்ல நந்திவிலகினார்

துக்கடா.

நந்திதூரவிலகினின்றார் தன்சாமிமனதைக்கண்டார்
இவன்நல்லபக்தனென்றார் அடங்காதவெட்கங்கொண்டார்

கீர்த்தனம் இ ம் சாவேறி ரூபகதாளம்.

பல்லவி.

மற்றதெல்லாம்பொறுப்பேன்
முத்தினாலுங்கொடுப்பேன் மற்ற
பத்தனுக்குக்குற்றஞ்செய்தா
லதைப்பொறுக்கமாட்டேன் மற்ற
திடுக்கென்றவரைத்துடுக்கப்பேசி
அடிக்கப்பொறுக்கமாட்டேன் மற்ற
பசிக்குதென்றுவருகையிலொருவன்
பொசிக்கப்பொறுக்கமாட்டேன் மற்ற

வ-ம். இப்படியே சுவாமிசொல்லும்போது நந்தி மனதுகலங்கி தூரவிலகினின்றார் நந்தன் சிந்தைகுளிர்ந்து அளவில்லாத ஆனந்தமடைந்து குதித்தார் கெக்கலித்தார் கொண்டாணடித்தார் துதித்தார் திருவடி யுள்ளேபதித்தார் எங்கும் சிவமாகப் பாவித்தார்.

கடுக்கா.

குதித்தார்எக்கலித்தார் உள்ளங்கலித்தார்
பள்ளுப்படித்தார் கண்ணீர்வடித்தார் பற்களைக்கடித்தார்
ஒருதரம்படித்தார் இருதரம்நடித்தார்
இப்படிதரிசனம்செய்தார் நந்தனார் தெரிசனஞ்செய்தார்.

துக்கடா ஆதிதாளம்.

சட்டமாகச்சந்நிதானங்கண்டுதுடை தட்டினார்-கைகொட்டினார்
அஷ்டமூர்த்தியெவர்க்குமென்று கூத்தாடினார்-பாடினார்
கஷ்டமானசமுசாரசாகரந் தாண்டினார்-மெய்வேண்டினார்
இஷ்டதெய்வசிவலோகநாதனை எண்ணினா-ருள்ளநண்ணினார்
மட்டிலாதசந்தோஷங்கொண்டுதான் பட்டபாடுகளைப்-பேசினார்
சென்மங்கெட்டதென்று தன்னை-யேசினார்
இஷ்டமானதன்சனங்களோடுமலர் கட்டிமுத்தமிட்டுலாவினார்
சிங்கக்குட்டிபோலவே தாவினார்

கீ ம் இ ம் கல்யாணி அடதாளம்.

பல்லவி.

தெரிசனஞ்செய்தாரே நந்தனார் தெரிசனஞ்செய்தாரே

அநுபல்லவி.

தெரிசனஞ்செய்தார் தேன்மழைசொரிந்து
வரிசையுடன் அவர்வாழியென்று தெ

சரணங்கள்.

குதித்துக்கதித்துக்கையைக்கும்பிடுபோட்டுத்
துதித்துத்துதித்துத்தன் துன்பங்கள்தீர தெரி
போற்றிப்போற்றியென்று பொன்னடிவணங்கிப்
பார்த்துப்பார்த்துப் பரமானந்தங்கொண்டு தெரி
அச்சமரந்தவறிவிலுணர்ந்து
இச்சைமறந்தவரேகாந்தமாய் தெரி

வம் தெரிசனஞ் செய்தபின்பு கொண்டுவந்தபணிவிடை செலுத்தி அவ்வீதியில் மட்டையூருங்குட்டையைக்குளமாய்வெட்டவேணுமென்று விசாரமுற்றார் சுவாமி இதையறிந்து நாளைப்போவார் குளம்வெட்டத்தாளப்போகாதென்றுதன்பிள்ளையை ஆளாகப்போகச்சொன்னார்.

துக்கடா.

மாளாப்பிறவிபோக்கும் பிள்ளையார்வந்தார்
நாளைப்போவார்—நீயாரப்பா வென்றார்
பிள்ளையார்—நானுன்னாளப்பாவந்தே னென்றார்
நாளைப்போவார்—குட்டையைக்குளமாய்வெட்டுவே னென்றார்
பிள்ளையார்—வெட்டினால்புண்ணிய மென்றார்
நாளைப்போவார்—அதட்டிவெட்டு மென்றார்
பிள்ளையார்—குளம்வெட்டு மென்றார்
நாளைப்போவார்—அற்பமாய்ப்பதக்குநெல்லைக் கொடுத்தார்
பிள்ளையார்—அப்பனே இதுபோதும்போதுமென்றுரைத்தார்
நாளைப்போவார்—களித்துநிருவிகற்பமா யிருந்தார்
பிள்ளையார்—குளத்தைவெட்டுதற் கிசைந்தார்

தரு இம் மோகனம் ஆதிதாளம்.

பல்லவி.

தடாகமொன்றுண்டாக்கினார் கணநாதர்
தடாகமொன்றுண்டாக்கினார்.

அநுபல்லவி.

சடாமகுடதரன்சாம்பவி யுண்டவா
சகலமுனிவர்மனத்தாமரையு மலர
கடாட்சமாகக்குகன் கணபதியுடன் மன்ன
காதலாலெவருந்துன்ன பேதையனுசித மென்ன தடா

சரணங்கள்.

கந்தமுலாவியதாமரைபூத்து கதிக்ககுதித்திடுஞ்சேற்
கெண்டைவாளைவக்கணமக்குதித்து

சுந்தரமிகுந்தபறவைகள்முழுதினுஞ் சூழச்
சோமசூரியர்கள் சுகமுடன்வந்து தாழ
விந்தையுடனேபலவேள்வியந்தணர் செய்ய
விளங்குஞ்சங்கினமுய்யக்களங்கமில்லாமற் றுய்ய தடாக

ஓதிடுவான்தியானமதுதான்மிக நாண ஆம்பல்மலர்ந்து
ஓதிமுங்குருகினகுவாலயமும்எதிர் காண
சோதிமருவுவங்தேவ தருநிழலுங்கொடுக்கச்
சுரபிகடம்பைமானும் சூழ்ந்து அங்கங்கேஅடுக்க
மாதர்மலர்க்குழலார் மகிழ்ந்து அங்கேநீராட
வல்வினைகளைவிட்டோட வல்லர்கருங்கொண்டாட தடா

வாசனைதாங்கியமல்லிகைமுல்லையின் சாலைசந்தனச்சாலை
வாழைபலாகமுகுங் கனமாமர்சோலை
ஆசையாகமயிலழகுறவே நடிக்க
அருமைபூசுரர்கள்தினம் படிக்க
தேசுலாவுந்திவ்வியதீர்த்தமாகுமென் றெந்தத்
திசைதேவர்களுமுந்த இசைதந்தனர்தஞ் சொந்தத் தடாக

நாளைப்போவார்நிஷ்டைகலைந்துபார்த்தார்
குளம்வெட்டியிருக்கவுளமகிழ்ந்தார்
பிள்ளையாரிருக்கக்கண்களிற்கானர்

வ ம். இதெல்லாஞ் சிவன்செயலென்று சந்தோஷங் கொண்டு முன்போலவே கோயில்வலம்வந்து தன்னுடன்வந்த பதினொருபேர்களுடன் ஆதனூர்வந்துசேர்ந்தார்.

பெரியபுராணச்செய்யுள் விருத்தம்.

இத்தன்மையீசர்மகிழ் பதிபலவுஞ்சென்றிறைஞ்சி
மெய்த்ததிருத்தொண்டுசெய்து விரவுவார்மிக்கெழுந்த
சித்தமொடுந்திருத்தில்லைத் திருமன்றுள்சென்றிறைஞ்சி
உய்தத்பெருங்காதலுணர் வொழியாதுவந்திப்ப.

சிந்து.

பேணிச் சாருந்தொழின்முறையாரும்புகழ்திருப்புன்கூர்ச்சென்றுனைக் கண்டு சேவித்திசைபாடிப் பாவித்தபின் தில்லைச்சிதம்பரத்தைக்கண்டு கண்டு சேவிக்கவேண்டுமென்றுவலுடன் நாளைப்போவேனென்றாராம்.

வ-ம். நந்தனார் திருப்புன்கூர்ச்சிவலோகநாதனைத்தரிசனஞ்செய்து ஆதனூர்வந்தநாள்முதல் ஊணுறக்கமுதலானதும்விட்டார்சேரியிலுள்ள பெரியோர்களைக்கூப்பிட்டு வணங்கிக் கும்பிட்டுச்சொல்லுவார்:

கீ-இ-ம்-பியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

சிதம்பரம்போவேன் நாளைச் சிதம்பரம்போவேன்

அநுபல்லவி.

சிதம்பரம்போவேன் தேறித்தெளிவேன்
பதங்களைப்பாடிப் பார்புகழ்தில்லைச் — சிதம்பரம்

சரணங்கள்.

ஒருதரஞ்சொன்னாலுலகங்களுய்யும்
இருவினைப்பயனில்லைஎந்நாளுந்தில்லை — சிதம்பரம்
பாதிராத்திரியில் பன்முறையோதி
வேதியர்போற்றியவிளங்கியதில்லை — சிதம்பரம்
திறமென்றறியாத்தீங்குகள்செய்யும்
பறையனாய்ப்பிறந்த பாவங்கள்துலையச் — சிதம்பரம்

வசனம்.

நாளைப்போவார் தனக்குத் தெரிசனங்கிடைக்க வேண்டியதற்காக கற்பகப்பிள்ளையாரைவேண்டுதல்.

விருத்தம்

காலனுடல்பூமிபடச்சாய்ந்திடுவான் செங்கமலக்காலைதூக்கிக்
கோலமுடனடனமிடுந்திருமன்றுள் நாயகனேகுற்றந்தீரப்
பாலிக்கும்படியெனக்குன் னருள்புரிவையென நற்பழங்கள்வைத்து
மேலைக்கோபுரவாசல்கற்பகத்தைச் சிந்தையுள்ளேவேண்டுவாரே.

வசனம்.

நந்தனார்சேரியிலுள்ள புலையர்களை அழைத்துக்கொண்டு சிதம்பரம்போய்த் தரிசனம்பண்ணவேண்டுமென்று ஆசையுற்று பக்திமார்க்கக்களைச்சொல்லலுற்றார்.

கீ ம் இ ம் மாஞ்சை ரூபகதாளம்.

நாளைப்போகாமலிருப் — பேனோ இந்த
நாற்றநாம்புமின்னஞ்சுமப் — பேனோ நான்
நாளைப்போகாமலிருப் — பேனோ இந்த
நாறுமுடலைக்கண்டுகளிப் — பேனோ நான்
நாளைப்போகாமலிருப் — பேனோ இந்த

நாளைவீணாகக்கழிப் பேனோ-நான்
நாளைப்போகாமலிருப் பேனோ இந்த
நமனார்க்கஞ்சியோடியொளிப் பேனோ-நான்
நாளைப்போகாமலிருப் பேனோ சிவ
ஞானத்தைப்பாராமலிருப் பேனோ-நான்
நாளைப்போகாமலிருப் பேனோ-இந்த
நாட்டிலிகழுஞ்சென்மம்படைப் பேனோ-நான்
நாளைப்போகாமலிருப் பேனோ-தில்லை
நாதனைக்காணாமல்பொசிப் பேனோ-நான்

ஆனந்தக்களிப்பு.

காணாமலிருக்கலாகாது பாழுங்
கட்டைக்கடைத்தேறவேண்டியிருந்தால் காண
முத்தியளித்திடும் பாதம்-தில்லை
மூவாயிரம்பேர்கள்பூசிக்கும் பாதம்
சத்திக்கிணையான பாதம்-வேத
சாஸ்திரங்கள்நாலுந்தேடிய பாதம்-காண
காலனைச்சீரிய பாதம்-ஜன
காதிகளுக்குள்ளேசெலுத்திய பாதம்
மாலயன்தேடிய பாதம்-எங்கள்
மாணிக்கவாசகர்பீடிகை பாதம்-காண
ஆசையைப்போக்கிய பாதம்-பர
மானந்தவெள்ளத்திலாடிய பாதம்
வாசம்பொருந்திய பாதம்-தில்லை
மாகாளிதாழவேதூக்கிய பாதம்-காண
பாலகிருஷ்ணன்தொழும் பாதம்-நாட்டில்
பாம்புபுலிக்குக்கூத்தாடிய பாதம்
கோலச்சிலம்பணி பாதம்-தில்லை
கோவிந்தராயர்தெரிசிக்கும் பாதம்-காண

வ-ம். நந்தனார் சிவனைக்காணாமல் காலம் வீணாகப்போக்கலாகாதென்று கூப்பிடுவார்.

கீ-ம்-இ-ம்-பியாகு-ரூபகதாளம்

துக்கடா.

எல்லோரும் வாருங்கள்
சுகமிருக்குது பாருங்கள் நீங்கள்-எல்

நல்லோர்பணிந்திடுந்தில்லையம்பல
நாதன்பாதம்பணிந்துகொள்வோம். எல்லோரு

கண்ணிகள்.

வாருங்கள்பரமானந்தமிருக்குதுபாருங்கள்
சடமெடுத்தபின்னேதுமேகண்டிலீர்
விடமெடுத்துண்டமேனியன்றேவர்
வடம்பிடித்திடவாருங்கள்தில்லையில்
இடம்பிடித்துநீயெல்லோரும்வாழலாம் வாருங்கள்

சொல்லடாதில்லைச்சிற்றம்பலமென்று
மெல்லடாவாயைசந்நிதிநேரவே
நில்லடா இந்தமாயப்பிறவியைக்
கொல்லடாசிவ்லோகங்குடிபுக வாருங்கள்

கள்ளடாநமதில்லறவாழ்க்கையைத்
தள்ளடாநந்தனுர்சொல்லுறுதியென்று
கொள்ளடாதில்லையம்பலத்தாண்டவன்
பள்ளடாவென்றுபாடிக்கூத்தாடியே. வாருங்கள்

வ-ம். இப்படி வாருங்களென்றழைக்கப் புலையர் வராமலிருக்கநந்தனுர் நல்லவார்த்தைசொல்லிப் பறையறை சிவநாமத்தைச் சொல்லச்சொன்னுர்

இருச்சொல்லலங்கார வாக்குவாதம்.

நந்தனுர்-தில்லையம்பலமென்றுசொல்லச்சொன்னுர்
புலையர்-கள்ளப்பேச்சென்றுமெள்ளச்சொன்னுர்
நந்தனுர்-சங்கராவென்றுசொல்லச்சொன்னுர்
புலையர்-இங்கேவாவென்றுநில்லென்றுர்
நந்தனுர்-சற்றேயாகிலும்சிவனைதியானம்பண்ணென்றுர்
புலையர்-நத்தையோடுபாலைபானம்பண்ணென்றுர்
நந்தனுர்-திருச்சிற்றம்பலமென்றுபிலக்கச்சொன்னுர்
புலையர்-வெறுச்சகம்பளமென்றுபிளக்கச்சொன்னுர்
நந்தனுர்-சேரியில்நல்லகாரியமிதென்றுர்
புலையர்-எரியில்நல்லமாரியீதென்றுர்
நந்தனுர்-விட்டநாள்நினையாமலெட்டுநாள்மறவாமல்
புலையர்-நிஷ்டைபண்ணுதசென்மம்நஷ்டமென்றுர்

புலையர்-விட்டவிரைமுளையாமல் நட்டபயிர்பலியாமல்

கெட்டுதானால் கிராமநஷ்டமென்றார்.

நந்தனார்-உங்கள்புலத்தன்மைபோகுமென்றார்
புலையர்-எங்களைக்கெடுத்தாயேபாவியென்றார்
நந்தனார்-தேவாதிதேவனைதெரிசிப்பீரென்றார்
புலையர்-பாவாடைராயனைபாவிப்பீரென்றார்
நந்தனார்-அனைத்தாளுமீசனுக்கன்புசெய்யென்றார்
புலையர்-இனைத்தாமரைநொந்தவர்க்கின்பமேதென்றார்
நந்தனார்-தினமுஞ்சிவனைப்போற்றிகளிப்போமென்றார்
புலையர்-பதரைத்தூற்றிநெல்லளப்போமென்றார்
நந்தனார்-பெண்ணாசைபொன்னாசைவிடுதலேநன்றாம்
புலையர்-என்னாளுமுன்னாலேகெடுதலையுண்டாம்
நந்தனார்-அப்பனோடுஇஷ்டமுடனானிருப்பேன்தடையேது
புலையர்-கப்பலோட்டிபட்டகடன்கொட்டைநூற்றுத்தீராது
நந்தனார்-பூசத்திருநாளில்போய்வருவோமென்றார்
புலையர்-பேசத்தெரியாதுபேயாநீபோவென்றார்
நந்தனார்-அழுதுமுறையிட்டாலம்பலத்தேகேட்குமென்றார்
புலையர்-உழுதுபயிரிட்டாலுள்ளபடிவிளையுமென்றார்
நந்தனார்சித்தமெல்லாமம்பலத்தேசென்றதென்றார்
புலையர்-புத்தியெல்லாம்வேறுபட்டுப்போச்சுதென்றார்
நந்தனார்-குற்றாலத்தீசனைக் கூறுவீரென்றார்
புலையர்-கைத்தாளம்போட்டுக் கதறுவீரென்றார்
நந்தனார்-தாண்டவத்தெய்வமே தகுந்தெய்வமென்றார்
புலையர்-தூண்டிவீரப்பனே தொழுந்தெய்வமென்றார்
நந்தனார்-இஷ்டப்படிநடக்கு மீசனைத்துதியென்றார்
புலையர்-கஷ்டப்படமாட்டோம் கசக்காதேபோவென்றார்
நந்தனார்-கொண்டாடிதெய்வத்தைக் கொள்ளுவீரென்றார்
புலையர்-பெண்டாட்டித்தெய்வமே பெருந்தெய்வமென்றார்
நந்தனார்-நலத்தைக்கொடுக்கவந்த நற்குருவென்றார்
புலையர்-குலத்தைக்கெடுக்கவந்த கோடாலிகாம்பென்றார்
நந்தனார்-பலவழக்கம்நானறிவேன் பறையாவென்றார்
புலையர்-குலவழக்கமறியாத குருடாவென்றார்
நந்தனார்-நாக்கறுப்பேன்சிவனை நவிலுவீரென்றார்
புலையர்-மூக்கறுப்பான்கதை மொழிந்தீரேயென்றார்

வ-ம். நந்தனர் பெரியோருடைய அனுஷ்டானத்தைப் புலையர் களுக்குச் சொல்லுகிறர்.

வேறு.

நந்தனர்-சிவனேதெய்வம் சிதம்பரமேகயிலாயம்
தவமேபெருமை தானசம்பிரதாயம்
புலையர்-சேரியேசொற்கம் ஏறியேகயிலாயம்
மாரியேதெய்வம் மதசம்பிரதாயம்
நந்தனர்-படிப்பதுஞானம் பார்ப்பதுமூலம்
குடிப்பதுமதிப்பால் குலசம்பிரதாயம்
புலையர்-பிடிப்பதுநண்டு பொசிப்பதுஇரைச்சி
குடிப்பதுகள்ளு குலசம்பிரதாயம்
நந்தனர்-பாழைக்கடப்பார் பரவெளிதாண்டி
கோழையறுப்பார் குலசம்பிரதாயம்
புலையர்-ஆழத்தில்குளிப்போம் அருங்கோடைவந்தால்
கூழைக்குடிப்போம் குலசம்பிரதாயம்
நந்தனர்-ஆசையைப்போக்கி ஐம்புலனைச்சுட்டு
மாசற்றவாழ்வு மதசம்ப்ரதாயம்
புலையர்-பூசைகள்புரிவோம் பொன்னேருழுவோம்
கூசாமல்வாழ்வோம் குலசம்பிரதாயம்
நந்தனர்-மையத்திலாடி மனக்கயிறுபூட்டி
வையகத்திலிருப்பார் மதசம்பிரதாயம்
புலையர்-கையிலேகலையம் காலிலேசேறு
பையிலேபாக்கு பறசம்பிரதாயம்.

வ-ம். சிவபத்திபண்ணினல் அணிமாதிகள் அடையாளமென்று நந்தனர் சொல்லுவார்.

கீ-ம்-இ-ம்-நீலாம்புரி ஜம்பைதாளம்.

அஷ்டமாசித்திகளைப்பெறலாந்தில்லையி
லாநந்தத்தாண்டவன் கோயிலைக்கண்டு
இஷ்டமுடன்வீதி வலம்வந்துயீசன்
இணையடிதொழுவார்க்கு இனிப்பிறப்பில்லை
வாருங்கள்வாருங்கள் சொன்னேன்நீங்கள்
வாயாடாதோடிவருவீரென்முன்னே
கருமணிச்சோலை போதுமுந்தன்
கள்ளவேஷமெங்களுக்குள்ளேகிடையாது

பருகுவதுகூழ்க்கஞ்சிபோதும்வாய்
பதறிவார்த்தைகள்பேசிப்பசப்பாதேபோடா

வ-ம். நீசொன்னபடி கேட்பதில்லை எங்கள் நிச்சயமறியாமல்நீ
மயங்காதே நீ சொன்னபடிகேட்பதில்லை.

ஏ சு ல.

புலையர்-பார்ப்பாரதெய்வமது பலிக்காதுபறையரைக்
காப்பாற்றமாட்டாது கைவிடுவீரென்றார்
நந்தனார்-பார்ப்பாரத்தெய்வமென்று பார்த்துபரிதிபோல்
காப்பாற்றுமல்லவோ கண்ணுதலேயென்றார்
புலையர்-அடுக்காதவார்த்தையை அல்லும்பகலோதிப்
பிடிக்கிறீர்பிடிவாதம்போதுமேஎன்றார்
நந்தனார்-கடுக்காயைத்தின்பாரே கன்னலதுபோலவே
கொடுக்காததானாலும்கொள்ளுவீரென்றார்
புலையர்-பித்தரென்சொல்லுவார் பேருலகிலெல்லோரும்
சத்தியமல்லவோ தள்ளுவீரென்றார்
நந்தனார்-பித்தனாயிருந்தாலும் பிறவியறுத்தனைவர்க்கும்
முத்திகொடுக்கும்நல்ல மூர்த்தியவரென்றார்
புலையர்-இத்தனைநாளுமிங்கே யில்லாதவார்த்தையைக்
கத்துகிறீரிதுவென்ன காரியமோவென்றார்
நந்தனார்-இத்தனைநாட்சென்று ஈசனடித்தாமரையை
பக்தியுங்கள்மனந்தோறும் பாக்கியமிதென்றார்

அகவல்.

பாக்கியமீதென்றுபரமசிவபத்தி
மார்க்கங்களெல்லாம்வரிசையாய்த்திரட்டி
எடுத்துரைசொல்வார்ஈனமாஞ்சாதி
பிடித்தறியாமல்புலம்புவாரன்றோ.

விருத்தம்.

வக்கணைக்காரநந்தா வாய்ப்படபேசவேண்டாம்
சக்கரைபோலேபேசிச் சாதித்துக்கண்டாயன்றோ
பக்குவகாலம்வந்தால் பரமனார்திருநாமந்தான்
சக்கரைபோலேதோன்றுஞ் சாதிப்பார்முத்திதானே.

வசனம்.

புலையர்களனேகரானபடியால் பலவிதம்பலர்சொல்லுகின்றார்.

ஏசல் கீ ம் புன்னாகவராளி ரூபகதாளம்

புலையர்-ஆண்டிப்பரதேசியரகராவென்றவர்
வேண்டுந்தெய்வமதுவிளங்காது வென்றார்.

நந்தனா-மூன்றுலகுக்கிறைமுன்னின்றுகைகூப்பி
ஆண்டவனேயென்று அர்ச்சிக்கு மென்றார்

வேறொருபுலையர்-நாத்தைப்பிடுங்கியேநடவுநட்டாலிந்த
சோற்றுக்கவலைவிடுஞ்சுகமிது வென்றார்

நந்தனா கூத்துவனார்வந்துகூப்பிடும்வேளையில்
மாத்திரைப்பொழுதில்லைமன்னாயி ரென்றார்

வேறொருபுலையர்-மகனாருமக்களும் வாழ்கின்றவிடத்திலே
யானாலுமெப்போதுமழுமூஞ்சி யென்றார்

நந்தனா தேனாகவேமெத்தத்தித்திக்குஞ்சிவத்தை
யானாகிலுமுங்களுக்கழுதையோ வென்றார்

வேறொருபுலையர் மூக்குநுனியைப்பார்த்து முணகியேயிந்நேரம்
காக்கைபோலவேசும்மாக் கதறுகிறீ ரென்றார்

நந்தனா வாக்கிலேசிவநாமம் வாராதபாவிகள்
நாக்கிலேஊசியை நாட்டுவே னென்றார்

வேறொருபுலையர் மடைவாயின்பறவைபோல்மதியாகவிருக்கிறீர்
துடைகாலிநீயென்றுசொல்லுவோ மென்றார்

நந்தனா விடையேறுமீசனை வெட்டவெளியினுன்னி
அடையாளங்காணுதஆடுக ளென்றார்

வேறொருபுலையர் மறையோதத்தெரியாதமடையராய்ப்பூமியில்
குறையாதபுலன்னை கொண்டோமே யென்றார்

நந்தனா பரயனாய்ப்பிறந்தாலும்பரகதிதேடலாம்
உறுதிமாத்திரம்வேண்டும் உமக்குண்டோ வென்றார்

வேறொருபுலையர் தலைசுற்றியாடுது தங்கச்சிகொழுந்தியார்
அலகையேநானென்றறிகிலே னென்றார்

நந்தனார் நலம்புரியுந்தில்லை நாதாவென்றுநீற்றைத்
திலகம்போலேயிட்டுத்தெண்டனிடு மென்றார்

வேறொருபுலையர்-உலகத்திலொவ்வாதஉருவேற்றிச்சேரியைக்
கலகமிட்டீர்பலன்கண்டீரோ வென்றார்

நந்தனா-பலகாலுஞ்சொன்னாலும்பலியாதுபாழ்வினை
விலகாமலிருக்குதுவேடிக்கை யென்றார்

வேறொருபுலையர்-திருப்புன்கூர்சனைச்சேவிக்கலாமென்று
விருப்புடனழைத்தவித்தைக ளென்றார்

நந்தனா-கரும்புதின்னக்கூலி கையில்கொடுப்பதுண்டோ
இரும்புமனதுக்காரர்க்கில்லையோ வென்றார்

வேறொருபுலையர்-புத்தியில்லாதவன் புலம்புகிறார்சிவனென்று
கத்தினாலுமென்னசாரியமோ வென்றார்

நந்தனா-நித்தமொருதரம்நினைவுடனேசிவன்
சத்தமிருந்தாலொன்றுந்தாழ்வில்லை யென்றார்

வேறொருபுலையர்-சேரியிலிருந்தாலும்செல்வங்குறைந்திடும்
ஊரைவிட்டாலுநீரோதுங்குவீ ரென்றார்

நந்தனா வாருங்களெல்லோருமன்னனைப்போலவே
சேருவோம்தில்லைசிதம்பர மென்றார்

வேறொருபுலையர் பாலாறுபெறுகவேபண்ணையைப்பயிரிட்டு
ஆளாமல்வீணுக்கலையுறீ ரென்றார்

நந்தனா பாலகிருஷ்ணன்தொழும்பாதத்தைக்கண்டு
நாலாம்பதவியைநாடுவே னென்றார்

வ ம். அவர்களில் ஒருபுலையர் உரைத்தது எப்போதுஞ்சிவனை
க்கொண்டாடினால் நம்முடைய தொழிலுக்கு கெடுதலுண்டு பண்
ணைவிளையாதென்றுசொல்ல நந்தனார்கேட்டு சொல்லுவார்.

கீ ம் இ ர் தண்டகம் ஆதிதாளம்

அரகராவென்றொருகுழிநட்டால் அங்கணமே விளையும்
பாவந்தங்காமற் றலையும்
சிவசிவாவென்றொருதரஞ்சொன்னால் ஜென்மசூபல்லியமாச்சு
பண்ணியகருமமதுவே யாச்சு
தில்லையம்பலதெரிசனங்கண்டால் தேவருமவந்தாரோ
அந்தமூவரும்பொருந் தாரோ

அடிமைக்காரத்தொழில்செய்வது துன்பமானது மேச்சே
 சென்மம்போனதும் போச்சே

வசனம்.

நந்தனார் புலையர்களைப்பார்த்து அனேகஞ்சொல்லிநாளைப்போ வேனென்றுசொல்ல.

சிந்து.

நாளைப்போவே னென்றாராம் அங்கே நாடும்பறையர்க ளோடி வந்து அண்ணே நீபோகாதே, நமக் காண்டைபொல்லாதவன்வேண் டிக்கொள்வான், பார்ப்பாரசாதியுண்டே.

வசனம்.

இப்படிச்சொல்லிய புலையரைப்பார்த்து நந்தனார் சொல்லுகிறார்

கீர்த்தனம் செஞ்சுருட்டி ரூபகதாளம்.

பல்லவி.

ஆண்டைக்கடிமைக்காரனல்லவே-யா
ணுண்டைக்கடிமைக்காரனல்லவே.

அநுபல்லவி.

மூன்றுலோகமும்படைத்தளித்திடு
மாண்டவர்கொடுத்தடிமைக்காரன் ஆண்டைக்

சரணங்கள்.

ஆசைக்கயிற்றினிலாடிவரும்பசு
பாசமறுத்தவற்கடிமைக்காரன் ஆண்டைக்
தில்லைவெளிகலநதெல்லைகண்டேறி
தேறிதெளிபவர்க்கடிமைக்காரன் ஆண்டைக்
சீதப்பிறையணிந்தம்பலத்தாடிய
பாதம்பணிபவர்க்கடிமைக்காரன் ஆண்டைக்

வசனம்.

தன்னையடிமையாய்க்கொண்ட வேதியர்சொற்கேளாதவரல்ல அப்படியிருந்தும்புத்திபண்ணவேணுமென்று பத்திநெறியைச்சொல்லிக்காட்டினார்.

விருத்தம்.

தவம்பெறுமுனிவர்மெய்க்குஞ் சரித்திரங்கொண்டநந்தன்
பவமயக்கறுக்கவேண்டிப் பகர்ந்திடுஞ்சிவவாக்கியத்தை
அவகுணங்கொண்டபேய ரறிந்திடப்போமோவெல்லாஞ்
சிவன்செயலாகுநம்மாற் செய்வதொன்றில்லையென்றார்.

வசனம்.

திருநாளைப்போவார்அநேகவேதஞ்சொல்ல புலையர் கேளாமலிருந்ததினால் சிவன்செயலென்று நாளைப்போவார்சும்மாயிருந்தார் அந்தச்சேரியிலுள்ள புலையர் கூட்டங்கூடி மூத்தோனால் நந்தனாருக்கு புத்திசொல்வோமென்றெண்ணி அந்தச்சேரியிலே வெகுநாளாயிருக்கின்ற ஒருபுலையன் வயறுபுகுந்து உடல்தளர்ந்து பல்லுகளுதிர்ந்துதோகள்சுருங்கி நரம்புதெரிந்து முதுகுசரிந்து முழுதும்வளைந்து அங்கம்சொரிபடர்ந்து தினவுமிகுந்து அதனைச்சொரிந்து வெந்நீர்வடிந்து அவ்வுடல்நடுங்கி இவ்விதமிருக்கிற பெரியகிழவனாரை யனுக்கோலூணிகூனிகுருகிகோணலாய் நடந்துவந்து அவன்நந்தனாரைப் பார்த்துகட்டியணைத்துதலைநிமிர்ந்துகண்ணீர்சொரிந்து மார்பில்வழிந்துமனங்கனிந்துகாதல்மிகுந்து ஒன்றுந்தெரியாதவரென்று நினைத்துபபரிந்து ஞாயமறிந்து சொல்லுவார்.

கீ-ம்-இ-ம் பியாக் ஆதிதாளம்

பல்லவி.

ஞாயந்தானோநீர்சொல்லும்-ஓய்நந்தனாரே
நம்மஜாதிக்கடுக்குமோ ஞாயந்

சரணங்கள்.

சேரியிலில்லா வழக்கம் நான்
செய்துகொண்டுவந்த பழக்கம்-இந்த
ஊரிலெங்குமது முழக்கம் வெகு
உறுதியாச்சுது ஒழுக்கம் இது-ஞா

சிதம்பரமென்கிற பேச்சு நாங்கள்
செய்திடுங்காரியம் போச்சு அது
மதம்பிடித்ததுபோ லாச்சு அந்த
மண்டலபறையருக் கேச்சு-ஞா

பறையருக்கேதுதைப் பூசம் அதைப்
பார்க்கவேயுனக்கு விஸ்வாசம் சிறு
பயல்களுக்கேயுப தேசம் நீர்
பண்ணிவைத்ததெல்லா மோசம்இது-ஞா

வசனம்.

சேரியில்பெரியகிழவனானபடியால்சாதிவழக்கங்களெல்லாம்அறிந்தவனாதலால் நந்தனாருக்கு இன்னமுஞ் சொல்லுகிறான்.

சிந்து.

பார்ப்பாரஜாதியுண்டே -என்ன-பாடுபடுமுழக்காடுமங்கே, நமக்குந்திருநாளோ-அந்த-ஞாயமுண்டோஎன்னமாயமிது,வென்றேதடைசெய்தார்-சிவன்-வேடிக்கைதானென்றுநாடிக்கொண்டே யறியாதுபோலிருந்தார்.

பெரியகிழவன்சொல்லியவிருத்தம்.

கழனியைதெய்வமெனச்சுற்றிவந்து தலைவணங்கிகரங்குவித்து
உழுதுபரம்படித்துவிரைதெளித்துமுளை கொள்ளநீரோடவிட்டு
பழுதரவேநட்ட தனைக்களையிடுங்கிமடையினில்நீர்பாயவிட்டுச் (னே
செழித்திடவேபொங்கலிட்டு காத்தவராயனைவேண்டுஞ்செய்கைதா

கீர்த்தனம் இ-ம்-நாதநாமக்கிரியை ஆதிதாளம்.

பல்லவி.

சுவாமிதெரிசன நமக்குண்டோ-புலைய
சாதியன்றோவந்த நீதியறியாமல் சுவாமி

அநுபல்லவி.

பூமிதெரிசனம்போதும் வெகு
புண்ணியமோசோறுமின்ன மொரு-சுவாமி

நாத்துநரம்புகளைச்சுமப்பதும் உழுவதும்
நஞ்சைவயலைச்சுற்றி வருவதும்வளம்பெற
பாத்திகள்கட்டிவிரைத் தெளிப்பதும்பறிப்பதும்
பாயும்மடையைத்திறந்திடுவது மன்றியில்-சுவாமி

சேரியிடையில்குடியிருப்பதும் பதருள்
சிதறைத்தூற்றிநெல்லளப்பதும் பார்ப்பதும்
ஊரரவலைத்துவூக்கடிப்பதும் மதக்குள
முண்டுகளித்துநாம்உறங்குவ தன்றியில்-சுவாமி

ஆண்டைமார்களிடும்பணிவிடை செய்வது
னருகினின்றுவாய்விடுவதும் நடுவதும்
தாண்டிநடந்துநெடுங்கோல்பிடிப்பது மளப்பதுந்
தனித்துசுடலைதினங்காப்பது மன்றியில்-சுவாமி

விருத்தம்.

சாதியின்முறைமைகாட்டித் தடையறஇப்போதுமென
வேதமாமுனிவராலும் வினவியுங்கண்டாரில்லை
பேதமாம்புலையருக்குப் பேரின்பநிஷ்டையாதோ
ஞதலாலென்னசெய்வோமென் றம்புலத்தஞ்சுவாரே.

வசனம்.

பெரியகிழவனைப்பார்த்து நந்தனார்சொல்லுகிறார்.

கீ ம் இ ம் தண்டகம் ஆதிதாளம்.

பல்லவி.

சிதம்பரதெரிசனங்காணவிடிலச்சென்மசாபல்ய மாமோ
செனனமரணசமுசாரம்பெருகவேசெய்தவினைகள்போமோ

கண்ணுங்கருத்திருக்கச்சிவனைக் காணாமல்காலங்கழிக்க லாமோ
காலபாசநமதருகில் கூராமல்கண்டுபயந்து போமோ
இப்படியேயெப்போதுமிருப்போமென்றெண்ணியிருக்க
யிருதயமறிந்திடச்செய்திடுங்கன்மங்களிகந்துபிரிந்துபோமோ
பின்னுமறியாதமூடர்கள் புத்திகேட்க லாமோ
புலையர்வாடியிருக்கினமென்றுபரிந்துபாவி பார்த்தேன்
பரமசிவனைக்கொண்டாடவேணுமென்றுபரிந்துபாவி பார்த்தேன்
பாவஞ்செய்தவர்க்குப்பலியாது அதில் பாடுபட்டுப்பார்த்தேன்

வசனம்.

சேரிபுலையர்கள்கூட்டங்கூடி அனுப்பிவைத்த பெரியகிழவன்நந்தனருடையசொல்லைக்கேட்டு ஆச்சரியப்பட்டு நந்தனார்கிழவனைப்பார்த்துச் சொல்லுவார்.

கீ-இ-ம்-தண்டகம்-ஆதிதாளம்.

| | | |
|---|---|---|
| மீசைநரைத்துப்போச்சே | கிழவா | ஆசைநிற்கலாச்சே |
| பாசம்வருகலாச்சே | கிழவா | பாவம்விலகிப்போச்சே |
| கூனிகுருகிப்போச்சே | கிழவா | கோபம்விலகிப்போச்சே |
| அங்கந்தளர்ந்துபோச்சே | கிழவா | ஆங்காரமும்போச்சே |
| சேரியைமறந்தாயோ | கிழவா | சிதம்பரநினைத்தாயோ |
| மானிடசென்மமடா | கிழவா | மாண்டால்வருமோடா |
| அம்பலத்தரசனடா | கிழவா | ஆளுந்தெய்வமடா |
| திருவடிபணியாயோ | கிழவா | தேடித்தெளியாயோ |

வசனம்.

நந்தனார் இவ்விதஞ்சொல்லி சிவகாமவல்லிபகவானை நினைத்து நீரள்ளிபெரியகிழவன் முகத்திலேதடவி வாயிலேபோட்டு கட்டி யணைத்துக் காதிலே சிவமந்திரமுபதேசித்தார் உபதேசித்து உடனே பெரியகிழவன்சித்தந்தெளிந்துசிவமயம்நிறைந்து உற்றுணர்ந்துஒருவனையிருந்து அத்தனடியா ரருளிதுவென்று பத்திமிகுந்து பரவசங்கொண்டு பேசத்தெரியாமற் பேசுவார் நான் இன்றைக்குத்தான் பெரியகிழவனுனேன் நந்தாஎனது பந்தநதிதீர்க்கவந்தாயோ முத்தி தந்தாயென்றுசுற்றிவலம்வந்து அடிபணிந்து விடைபெற்றுக்கொண்டு களித்தேன் ஆனந்தங்கொண்டேனே குறைதீர்த்தேன் அமிர்தமுண்டேன் பசிதீர்த்தேன் பிறவிவென்றேன் வீடுதின்றேனென்றுபேசிக்கொண்டு பெரியகிழவன்வருகிறார்.

பெரியகிழவனார் நந்தனாரா லுபதேசம்பெற்றுவருகின்றார்.

கீர்த்தனம்-இ-ம்-சங்கராபரணம்-ரூபகதாளம்

பல்லவி.

பெரியகிழவன் வருகிறான் பேரானந்தக்கடலோடி- பெரிய

சரணங்கள்.

பாவிமாயையிலிருந்து பாரமுதல்பூதங்களைந்து
பெரியவரென் றுணர்ந்து பேரின்பலாபத்தையடைந்து-பெரிய
படிபுகழ்நந்தனார்மகிழ்ந்து பரமசிவபக்திபுரிந்து
கொடியபாவங்கள்தீர்ந்து கூனிகுறுக்கிநேர்ந்து-பெரிய
நந்தனார்சொன்னதறிந்து நானென்னுரையுமிழந்து
பந்தசமயந்தெளிந்து பரவெளியாகக்கலந்து-பெரிய

வசனம்.

புலையர்களெல்லாங் கூட்டங்கூடி நந்தனாருக்குச் சிதம்பரப்பித்தந்தெளிய புத்திசொல்லனுப்பிய பெரியகிழவன் நந்தனார்பித்தங்கொண்டு அவருடைய மகிமையெல்லாம் புலையர்க ளிடத்திற் சொல்லிக்கொண்டாடுவான்.

பெரியகடுக்கா.

திருநாளைப்போவார் இந்தசேரிக்குமூருக்கும்
யாருக்கும்பெரியவன் திருநாளைப்போவார்
ஒருதர்மாகிலுஞ் சிவசிதம்பரமென்று
உரைத்திடீரென் றுண்மைகூறிய திருநாளை

அடாதுசெய்தால் படாதுபடுவீர் விடாதுபாவந்தொடாதே அவன்பேரெடாதே தூறுபடாதே கையிடிபடாதேவென்பகையிடாதேஅப்பாதிடாங்கன் கோபப்படாது பட்டால் விடாது சலம்படாதவன்பயப்படாதவன் இடம்விடாதவன் அடங்காதவன் நிலைவிடாதவன் மாறுபடாதவன் மனம்விடாதவன் அடங்கிடாதவன்விடையவலைப்படான்மாயைக்ககப்படான் சிவனை யிடைவிடான் கழனிகளைவிடான் கலைப்பைகளைத்தொடான் நமதுவழிப்படான் பொலிகிடாரிஎல்லைப்பிடாரிவெல்லப்படாது கல்லப்படாதுதள்ளப்படாது யாரையும்விடாதுதுன்பந்தொடாதுவழியைத்தேடாதுஇருவினைப்படாது செளமங்கெடாது தெய்வங்கெடாது அவன்கைவிடாதுவேறுபடாது ஆசைப்படாமல் அருளைக்கொடாது பங்கப்படாத தங்கக்கடாரம்மயங்கப்படாதவன் இணையிலாத புண்ணியதடாகஞ் செய்தவன் மடாதிபதி பிடிபடாதசிங்கம் அளவுபடாத மகிமைவிடாத பெரியனடா தெரிசனப்படாத சந்நிதிவிடாத நந்தியசைந்த தேனடா அரன்விலகடாவென்றசொல்லடா அவனைப்பணியடா தூளையணியடா அறிந்துபோற்றடா கையெடுத்தேற்றடா மலரைத்தூற்றடா மனதைத்தேற்றடா பிறவி மாற்றடா ஆனந்தக்கூத்தாடடா சொன்னேன் திருநாளைப்போவார் இந்த சேரிக்குமூருக்கு மாருக்கும்பெரியவன்.

வசனம்.

அப்படிபெரியகிழவன் சொல்லைக்கேட்டு நந்தனாராலே கொடுக்கப்பட்ட பதினான்குபேர்களுக்குள்ளே நீயும் பனிரெண்டாம்பேராயிருக்கத்தலைபட்டு சிவாவென்றுசொல்லிச்சேரியைக்கொடுக்கத்தலைபட்டீர்களே கிழவாவென்றுமிகவும்துன்பமடைந்து புலையர்ஒருவருக்கொருவர் சொல்லித் துயரப்படுகிறார்.

கீர்த்தனம்=இ-ம்-புன்னாகவராளி-ரூபகம்.

பல்லவி.

நாம்என்னசெய்வோம்புலையரே இந்தப்
பூமியிலில்லாத புதுமையைக்கண்டோம்

சரணங்கள்.

நந்தனொருவராலேயிப்படி யாச்சு
நன்மையுந்துன்மையுமில்லாமற் போச்சு
சந்திக்குசந்திகூத்தாடிட லாச்சு
சாமியுமில்லாமல் எங்கேயோ போச்சு-நாம்
கன்னற்கண்டாய்வார்த்தைக்கேட் பாரோ
காதிற்பட்டாலதைகருத்துகொள் வாரோ
மன்னாரசாமிக்குப்பூசைபோட் டாரோ
மாரியாத்தாளெங்கேமறைந்திருக்கி றாளோ-நாம்
சேரிக்குள்பதினொருபேரோடுங் கெட்டான்
செப்புந்தொழில்முறையாவையும் விட்டான்
ஊருக்குபெரியகிழவனும் நட்டான்
உண்மையறியாமல்சிதம்பரந் தொட்டான்-நாம்

வசனம்.

சேரியில் இன்பமடைந்தபுலையர்களைப்பார்த்து உங்கள்தெய்வத்துக்கு வழக்கம்போல் பூசைபோட்டு பலியிட்டுவேண்டினால் சேரிக்குநல்லகாலம் பிறக்குமென்றுபெரியகிழவனார்சொல்லபுலையர்கள்பூசைபோடுந் தெய்வங்களாவன.

வீரன் இருளக்காட்டேரி வெரியன்நொண்டிசாமுண்டித்தூற்றி தூண்டிநல்லண்ணன் தொட்டியச்சின்னான் பெத்தகண்ணன்மாறிமுனியன்சக்கிலியுடன் கறுப்பன பாவாடை மூறிக்காத்தான் குமிழியிரிசி மோகினிசாத்தானமுனியும்சேரிமின்னாரன்மின்னடியான்சிறுகாட்டையான் பனைமரத்தான்மாரியாண்டி வழிபறித்தான் மலையான் பக்கிரி ஏறினுஞ் சிலம்பாயி இடையன் நல்லான் ஊமைபோல் வீறுங்கள்ளன் பெத்தாசிவீட்டு தெய்வமுதலாயின.

இதுகளை தெய்வமென்று வணங்கிக்கொண்டாட என்கோழி ஆடுகளுடன் மதுக்குடம்வைத்துபள்ளயம்போட்டுபம்பைபடித்து

வருத்தச் சந்ததம்வரும்சொன்னேன் சேரிக்கு நல்லகாலம் பிறக்கும்சிதம்பரபித்தம் நந்தனருக்கு தெளிந்துவிடுமென்று பெருகவாழ்வீரென்றும் பெரியக்கிழவன்சொன்னரே அப்படியேகிழவன்சொல்லைநம்பிக் கைகொண்டு புலையர்களெல்லாம்பந்தலிட்டு பள்ளயம்போட்டு கொம்புதப்பட்டைமுழங்கி முப்பூசையிட்டுவேண்டுவார்.

வருந்திக்கொண்டாடும்-அகவல்.

புலையர்—எல்லைப்பிடாரியே எதிராகவந்துயெங்
கொல்லையுங்காவலாய்க்கொள்ளடி யென்றார்
நந்தனர்—சொல்லினுமடங்காதுசோதிபரமானந்தத்
தில்லைநாயகரைத்தேவ ரறியாரோ
புலையர்—முண்டாசுகட்டிவரும்நொண்டிவீரப்பனைக்
கொண்டாடிபூசைகொள்வீ ரென்றார்
நந்தனர்—அண்டங்கள்பதினலுக்கப்பாலுமிப்பாலு
நின்றக்குமுண்டாகநிலையாது வென்றார்
புலையர்-கங்கையரிவாள்வைத்தகறுப்பண்ணசாமியே
இச்சையுடன்வேண்டியதெய்வ மென்றார்
நந்தனர்-பச்சிலைபிடுங்கி பாதாளத்திலேசாற்றினல்
இச்சையானது மீயுமென்றெய்வ மென்றார்
புலையர்-நேசமறிகோலமும் நீமூன்றுசாவலும்
தீய்தள்ளும்வைத்துதெரிசித்து நின்றார்
நந்தனர்-வாயாலேசிவமென்றுவருந்தினலெப்போதும்
தாயாரைப்போலவேதமூவிவரு மென்றார்
புலையர்-பித்தம்பிடித்திருக்கும் பேயனும்நந்தனுக்கு
சித்தந்தெளிந்திடுவீ ரென்றார்
நந்தனர்-பத்திவெள்ளம்பெருகிப்பாய்ந்தாலுஞ்சேரியில்
நத்தையுரியுஞ்சாதிநாடாது வென்றார்

வசனம்.

இவ்வகையாகப் பூசைபோட்டுத் தெய்வங்களைக்கொண்டாடும் புலையர்களைப்பார்த்து நந்தனர் சொல்லுவார்.

விருத்தம்.

இத்தனைநாட்பரமசிவன்றிருமகிமையிரவுபகலெடுத்துச்சொன்னேன், பத்திபுரியெந்தனுக்கேயருள்புரிந்தவையன்பதம்பணிவீரென்றேன், அத்தனையுமிழந்திடவேமனவெறுப்பாயெந்தனையுமவமானித்தீர், புத்திசொல்வேனென்றவர்கள்முழந்தாளிட்டடிகொண்டுபணிந்திட்டாரே.

கீர்த்தனம் இ-ம் தோடி ஆதிதாளம்.

பல்லவி

பத்திசெய்குவீரேநடேசனை-பத்திசெய்குவீரே.

அநுபல்லவி.

அத்திமுகனைப்பெற்ற உத்தமனைவிட
நித்யதேவர்களுமில்லையென்று பத்தி

சரணங்கள்.

சாருமதர்வணமிருக்குளசுர்வேதஞ்
சாற்றுமுபநிஷதம்பரனே அரனென்று
ஏமாறுமற்சொல்லிய பின்புவேறில்லையின்று
எவர்களும்பிறியசுவர் புவிதனினின்று பத்தி

ஆகமமிருபத்தெட்டாயுதபுராணமும்
அயன்சீதைமுதலான அனந்தமிருதிகளும்
பாகமாயிரம்வரம்பரமனொருவனென்று
பண்புடனுணர்த்திடும்பான்மையதாய்நின்று பத்தி

கௌதமர்முதலானவிருடிகளனைவரும்
கரியமால்தொழும்பங்கஜபெண்வனுதினமும்
புவனத்தில்போற்றி யேற்றினதால்வர்
புகழும்புண்ணியபாவம்பொருந்தினரென்பதால் பத்தி

அரியயனிந்திரமுதலானதேவரும்
அரனடிதன்னையே அன்பாய்பூசித்தால்
பரிவுடனவர்செல்வம் பழுதுவாராமலே
பாவித்தார்சிவனென்று பக்தர்சொன்னதினாலே பத்தி

வியாசமுனிவரும் அத்தனடியார்களும்
விஷ்ணுபரமென்றுவிளம்பினதால்முன்னம்
காசிக்கங்கைக்கரையிற்கையிருந்தும்
கல்லாய்த்தானேயவர்சபித்ததினாலேயும் பத்தி

தில்லையம்பலத்திருநடனமாடிடும்
தேவாதிதேவனை தினம்பணிந்தேத்தி
அல்லல்சமுசாரக்கடலினில்முழுகாமல்
ஆனந்தகூத்துகளாடிக்கொண்டுநீ பத்தி

விருத்தம்.

இத்தனைநாட்பரமசிவன் திருமகிமை யிரவுபகலெடுத்துச்சொன்னே
பத்திபுரியெந்தனுக்கேயருள்புரிந்தவையன்பணிவீரென்றே [ன்
அத்தனையுமிழந்திடவேமனம்வெறுப்பாயெந்தனையுமவமானித்தீர்
சொல்வேனென்றவர்கள்முழந்தாளிற்றடிகொண்டுபுனைந்திட்டாரே.

வசனம்.

நந்தனார் மகாபலசாலியானபடியால் புலையர்களைச்சிட்சினார் சி
வநாமத்தைச்சொல்லுவார்.

தண்டகம்.

தத்திவலிபோலதாண்டி குதிப்பார்
மூத்தமிடுவதைப்போலமுகத்தைக் கடிப்பார்
வார்கொண்டுகட்டியணைத்துப் பிடிப்பார்
மணிக்கல்லெடுத்துத்துடைக்குள் ளெழப்பார்
பல்லாற்சுரண்டியேபரம்படித் திருப்பார்
கல்லாலெரிந்துமவர்காயப் படுத்துவார்
குப்புரத்தள்ளியேவைப்பி றென்றார்

வசனம்.

இப்படி சிட்சித்தபின்பு புலையர்களெல்லோரும் நந்தனருக்குப் பயந்து பக்திசெய்யத்தொடங்கினர்.

அரகரசிவசிவ அம்பலவாண
தில்லையம்பலதேசிக நாதா
புரமூன்றெரித்தபொன்னம்பல வாண
கரியுரியோதக்கருண கரனே
அனுதினமன்றினுள்ளாடிய பாதா
பிழைபொருத்தருளும்புண்ணிய மூர்த்தி

வசனம்.

மூடப்புலையர்க்கு புத்திதருவாயென்று அவர்களு மிப்படிசொல்லத்தொழுவார்.

கீர்த்தனை-இ-ம்-எதுகுலகாம்போதி ஆதிதாளம்.

பல்லவி.

பத்திகள்செய்தாரே பரமசிவ பத்திகள்செய்தாரே

சரணங்கள்.

பத்திகள்செய்தால் நற்றவம்புரியுமனந்த
சித்தமகிழ்ந்திடவத்தனைபேர்களும் பத்திகள்
எடுப்பான்சிவத்தைப் படிப்பான்தடியொன்று
பிடிப்பான்காலுக்கு அடிப்பானென்றே
கல்லாலவனிங்கே சொல்லாலவன்றி
வில்லாதவன்வெகு பொல்லாதவனென்றே பத்திகள்

வசனம்.

அந்தச்சேரியிலேபுலையர்கள் பத்திசெய்ததால்சேரிசிவலோகம் போலேவிளங்கியது சிலநாளுக்குப்பின்புபுலையர்களெல்லோரும்கூட நந்தனரைப் பணிந்து நல்வார்த்தைசொல்லி நாங்களெல்லோரும்

ம்நாளொன்றுக்கு மூன்றுவிசைசிவளேயென்றுசொல்லுகிறோம் மற்றவேளையில் எங்கள் பண்ணைத்தொழிலைசெய்வேனென்றுகேட்கநந்தனர் நல்லது அப்படிதப்பாமல் செய்யுங்களென்று நந்தனர்சொல்லச் சேரிநந்தனைச்சுற்றி அடிபணிந்துசொல்லுவார்.

எண்சீரடி யாசிரியவிருத்தம்.

கொள்ளையெனும்பிறவிவிரை முனைவீசாமற்
குடிமாரிப்போவதற்கோ வகையைக்கேட்டு
கள்ளமனக்குரங்கதனல் விடயமாச்சு
கட்டியிருந்தாலிருந்த விருத்திப்போச்சு
உள்ளங்கைக்குள்ளிருக்கும் கனியைப்போல
வுறுவில்லாதான்மாவோ ரறுத்துவாழ்வீர்
எள்ளளவும்பிசகில்லை யென்றுஞானம்.
ஏற்றுவார்மும்மலத்தைத்தூற்றுவாரே.

கீர்த்தனம் இ-ம்-எதுகுலகாம்போதி-ரூபகதாளம்.

பல்லவி.

பார்த்துபிழையுங்கள் நீங்கள் பார்த்துபிழையுங்கள்

அநுபல்லவி.

பார்த்துபிழையுமுந்தன் சோற்றுத்துருத்தியை
பத்தித்தொழவேண்டும் காற்றுபோகுமுன்னே பார்

சரணங்கள்.

ஆத்திமதிசூடுங் கூத்தனிடமாய்
சூத்திரத்தையிந்தசேத்திரத்துள்ளாடி பார்

வீற்றிருப்பீர்காலங்கார்த்திருப்பான்சிவ
சாத்திரத்தைஞானக் காத்திரத்தாலுற்று பார்

மூலக்கனல்தாண்டி மேலக்கறைவந்து
பாலைக்குடியிந்த நாளுக்குள்வாராமல் பார்

பாலகிருஷ்ணன்தொழுங் கோலக்கண்களை
மேலுக்குமேல்நாடி காலக்கலியுக பார்

கீ-ம்-இ-ம் யமுனகலியாணி அல்லது சாரங்க-ரூபகதாளம்

பல்லவி.

தில்லைச்சகதம்பர மென்று-ஒரு
தரஞ்சொன்னல்பரகதி புண்டுண்டு

அநுபல்லவி.

நல்லசுருதிமுடி கண்டுசபா
நாதன் திருத்தாளைச்சிந்தையிற் கொண்டு-தில்லை

சரணங்கள்.

வேறில்லாமலொருவிருட்சமொன் றிருக்கு
விளையும்விளைகளெல்லாமது செய்யுந்திருக்கு
பேரில்லாமல்ஞானததிகொண்டு தருக்கு
பேரின்பபாணரைப்பிசகாமல் செருக்கு-தில்

தேசம்புகழுந்தில்லைக்கோயில் வளைந்து
திக்குஞ்சைவபஞ்சாட்சரம் புரிந்து
ஆசையுடனேயர்த்தசாமத்தி லிருந்து
அங்கம்புளகிதமாயடிக்கடி பணிந்து-தில்

மாயன்கோபாலகிருஷ்ணன் தினந் தேடி
வருந்தும்செந்தாமரைமலரடி நாடித்
தாடையைப்பிரிந்தவிளங்கன்றுபோல கூடித்
தனித்திருந்துதாளம்போட்டுக் கொண்டாடி-தில்

கீர்த்தனம்-இ-ம்-கௌளிபந்து-ஆதிதாளம்

பல்லவி.

நமக்கினிபயமேது தில்லை நடராஜரிருக்கும்போது

அநுபல்லவி.

மார்க்கண்டேயருக்காக மறலியையுதைத்திட்ட
மான்மழுவேந்தும்மாதேவனிருக்க நமக்கி

சரணங்கள்.

இம்மைமறுமைமுத லியாவுக்கும்பரமன்
சின்மயாநந்தரூபச் சிவபெருமானிருக்க நமக்கி

அரியயனமரரும் ஆலங்கண்டஞ்சிமுன்
பரிவுடன்வரக்காத்தபரமசிவனிருக்க நமக்கி

ஆதிசேடனுமலரோணிலக்குமியு
மாதலாய்த்தவஞ்செயக்களித்தபரமனிருக்க நமக்கி

இரணியனால்வெறிகொண்டநரசிம்மனைத்
தரணியில்ரட்சித்தசெங்கரனருகிருக்க நமக்கி

கீர்த்தனம்-இ-ம்-ஜோடி-ஆதிதாளம்.

பல்லவி.

சங்கரந்துதித்தாடு இனிசனனமில்லையென்றுபாடு

அநுபல்லவி.

பொங்கரவணிந்திடு பொன்னம்பலவனை
புத்தியில்நினைவாகப்போற்றுவாய் சிவனை

சரணங்கள்.

பாரினிற்பெண்கள்போர்க — கருத்து-வோய்
பற்றவொட்டாமலே — திருத்து
பேரின்பஞானத்தை — வகுத்து-சுகப்
பெருவெளிநெஞ்சி — லிருத்து-சங்கரனை

நீர்மேற்குமிழியிக் — காயம்-என்றும்
நிலையில்லாவாழ்விது — மாயம்
பேரானமாலயன் — நெயம்-பெறப்
பேசுவதே — யுபாயம்-சங்கரனை

மனிதஜனனத்தில் — தேடு-நல்ல
மாதவத்தோர்களைக் — கூடு
தனிவொளிபரமொரு — வீடுதன்னைத்
தத்துவத்தால்கண்டு — நாடு-சங்கரனை

வசனம்.

இப்படிச்சொல்லிய நந்தனாரைநோக்கி அவர்சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-சுவாயி-தண்டகம் சாப்புதாளம்.

அவர்கள்-புண்ணாகியவிந்தப்பிறவிப்பிணிக்குமருந்
துண்ணுமலிருப்பதுஉண்மையோ — நந்தா
நந்தனார்-கண்ணாலேபார்த்திடில்காட்டில்மறைந்திடும்
மண்ணான பூதங்கள்மாயமோ — மைந்தா
அவர்கள்-இருப்பதுபொய்யென்றிராததுமெய்யென்றும்
இருத்திப்பேசியவகையென்னடா — நந்தா
நந்தனார்-உருத்தெறியநாமரூபமல்லவோ
கருத்திலிருத்திக்கொண்டுகாணலா — மைந்தா
அவர்கள்-விஸ்தாரமாதவிர்பிண்டமானத்தை
பத்திகொண்டிருந்ததுபகர்ந்திடும் — நந்தா
நந்தனார்-வித்துகள்விருட்சமடங்கியவாறுபோல்
சத்துக்களுண்டசராசர — மைந்தா
அவர்கள்-புத்திக்குளெட்டாதபோதத்தைநாமுண்டு
முத்திபெரும்வழிமொழியுமோ — நந்தா
நந்தனார்-அத்தனிருக்குமிடமயன்மாயாதிமார்
பத்துதலில்லாப்பரவெளி — மைந்தா
அவர்கள்-தத்துவங்கள்தொண்ணூற்றாறுங்கடந்திடும்
வஸ்துவைநாமெண்ணும்வகையேது — நந்தா
நந்தனார்-நித்திரையெழுந்தபின்நினைவுடனேகூடி
உத்தாரம்பேசுவதுண்மையே — மைந்தா
அவர்கள்-பித்தனைவேறொருபேய்பிடித்தாற்போலும்
சித்தவிகாரங்கள்தெளியுமோ — நந்தா

நந்தனார்-பக்திவலைவீசிப்பார்த்திடும்வேளையில்.
தத்திக்குதித்திடுந்தாண்டவ மைந்தா
அவர்கள்-சீலமுள்ளநல்லசேதிசொன்னாயுந்தன்
காலுக்குகும்பிடுகண்டோமே நந்தா
நந்தனார்-பாலுக்குச்சர்க்கரை பலித்ததுபோலுங்க
ளாலேயன்றோவீடுநாடாள மைந்தா
அவர்கள்-தூலசரீரத்தைச்சுமந்துபிள்ளைப்பூச்சி
போலேயானோமுந்தன்புண்ணியம் நந்தா
நந்தனார்-பாலகிருஷ்ணன்தொழும்பரமசிவனரு
ளாலேபொங்கிவருமானந்த மைந்தா

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஓங்காரமென்றசொல்லைமூலம்போட்டு
உறுதியெனுமிருப்புலக்கைகையிலேந்தி
யாங்காரமென்றதட்டும்வாகையிட்டு
வடிக்கடியேகண்ணியதைபுடைத்தெடுத்து
நீங்காதசிவயோகநிஷ்டைகொண்டு
நிர்மலமாயாவருஞ்சுற்றிவந்து
பாங்கானநந்திதிருத்தாளைப்போற்றிப்
பணிந்திட்டார்திருநீற்றையணிந்திட்டாரே.

வசனம்.

அவர்கள் நந்தனாரைவிட்டுநீங்கி தனித்திருக்க மனம்வராமல் சொல்லுவார்.

விருத்தம்.

தில்லையிற்போகவேண்டாம் திரும்பிவந்தாலும்மைச்
சொல்லவந்துபண்ணைப்பார்ப்பான் சினங்கொண்டபடியாலிந்த
எல்லையிலிருந்துதானே யீசனார்திருநாமத்தைச்
சொல்லியேநாலாம்வீட்டிற் சேருவோம்வாரீரென்றார்.

வசனம்.

அனல்கண்ட மெழுகுபோலுருகிப் பத்திவெள்ளம் பெருகிச் சொல்லியபேர்களைக் கவசாலிங்கனம் பண்ணிக் கண்ணீர் சலம்பெருகச் சொல்லுவார்.

கீர்த்தனம்-லாவணி-ஆதிதாளம்.

தில்லைவெளியிலேகலந்துகொண்டாரவர்திரும்பியும்வருவாரோ
எல்லைகண்டபேரினிப்பிறவாரென்றியம்புவதறியாரோ
பெண்டுபிள்ளைகளுங்கூட்டமதுபேய்ச்சுரக்காய்தோட்டம்
கண்டுகொள்வார்பெரியோரறிவிற்கனகசபையினாட்டம்
திருவாதிரையில்தெரிசனங்காணத்தேடித்திரியாரோ
அரிதாகியவிந்தமானிடங்கிடைத்தாலானந்தமடையாரோ

குஞ்சிதபாதத்தைக்கண்டா லொழியகுறையதுநீங்காதே
கஞ்சிதகுமாரத்திகளுடாடி யாடல்முந்தாங்காதே
சேரியிடையிலேகுடியிருந்தாலிந்தச்சென்மமுந்தொலையாதே
சிதம்பரம்போவேன் பதம்பெறுவேன் தயைசெய்வதும்றியா
இரவும்பகலுமொழியாத கவலையிருப்பதுசுகமோடா [ரோ
இன்பம்பெருகும்பரமாநந்த வெள்ளமிழந்துநீபோடா.

வசனம்.

சிதம்பரம்போவேன் நீங்களிங்கே யிருங்களென்று நந்தனார் சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

சிந்தனைசெய்துக்கொண்டிருந்தாலுங்களுக்
கெந்தவிதங்கறையேறலாஞ்சிவ சிந்தனை

அந்தணமுனிவருமிந்திரனமரரும்
வந்துபணியுமரவிந்தத்திற்பாதத்தை சிந்தனை

மாமனைவதைத்தவன் காமனையெறிந்தவன்
மான்மழுதரித்தவன் தாமரைப்பாதத்தை சிந்தனை

தம்புருவணிந்திடுந்தும்புருநாரதர்
அம்பூரும்மணியெம்பொன்னம்பலவாணனை சிந்தனை

வெம்பியதும்பிக்கருளியபாலகிருஷ்ணன்
பணியுந்திருவம்பலநாதனை சிந்தனை

கீர்த்தனம்-இ-ம்-பூரிகல்யாணி அல்லது சாமாராகம்-சாப்புதாளம்.

பல்லவி

தில்லைத்தலமென்று சொல்லத்தொடங்கினு
லில்லைப்பிறவிப் பிணியும்பாவமும்

அநுபல்லவி.

சொல்லுக்குமிதுவே சிவலோகம்
எள்ளத்தனைய்பறஞ் செய்யில்மோகந் தில்லை

சரணங்கள்.

ஆகமவேதபுராணங்கள் சாத்திர
காலத்திலாரும்விண்ணுட பாத்திர
மாலயமாயிரத்தெட்டினி னேத்திர
மானந்தத்தாண்டவமாடிய னேத்திரத்-தில்லை

காணத்திலாடுமெணிமாதி சித்தியும்
கரத்திலாரும்விண்ணு வெற்றியும்

இணையில்லாதகுழிசாஸ்திர பத்தியும்
இகத்திற்றுன்வருஞ்சிவபத முத்தியும்-தில்லை

பரமரகசியமொன்று பார்க்கலாம்
பாலகிருஷ்ணன்கவிபாடிக் கேட்கலாம்
கருமவினைகளடங்காமற் போக்கலாம்
கசடர்கட்சமுத்தியுண் டாக்கலாம்-தில்லை

வசனம்.

நந்தனூர் ஞானஉபதேசஞ்சொல்லக்கேட்குமுன்னே நந்தனுருடன்திருப்புன்கூரிற்போய் சிவதரிசனஞ்செய்துவந்தவர்களாகிய அரவன்தொந்தி ஆனையேறிமுத்தமாரி கழனிகாத்தான்பாச்சலூரான ஆண்டிசேவகன் சொறியன் வெறியன் காணியான் எல்லைச்சுற்றியென்ற பெரியகிழவரிந்த ஆறிருபேர்களு மானந்தமடைந்து அவரவர்கள் நிஷ்டையிலிருக்கத் தொடங்கினின்றார் மற்றப்புலையர்கள் கூட்டங்கூடி நந்தனூர் நம்மை நாளொன்றுக்கு மூன்றுதரஞ் சிவநாமத்தைச் சொல்லச்சொன்ன குற்றத்தைப்பாராட்டி நந்தனை யடிமை கொண்ட அந்தணரிடத்திற் சொல்லுவார்.

விருத்தம்.

இரவுபகல்பரமசிவ னிணையடியேதொழுதிருக்கு மின்பங்கூறிக், கரைபுரளுங்கடலினைப்போற் சிவத்தினிடைக்கருத்துணரக் கண்டெல்லாரும், பரவிவரும்புலையர்களும் பண்புரவேநெறிகாட்டிப் பகரக்கேளீர், அரியதொரு அந்தணவ னடிமைபுரியந்தணர்பா லறிக்கை செய்வார்.

நொண்டிச்சிந்து இ-ம்-பைரவி-ஆதிதாளம்.

ஐயேஒருசேதிகேளும்-உங்கள்-அடிமைக்காரப்பரயன்நடத்தையெல்லாம், வரவரக்கெட்டுப்போச்சு-சேரியில்-வழக்கமில்லாதபடிபழக்கமிட்டான், குடியிருக்கமாட்டோம்-எப்போதும்-கூக்குரல்போடுவானுக்கமறந்தே, இருப்பானொருவேளை-தில்லைச் சிதம்பரமென்று சொல்லிபதம்படித்தே, அழைப்பானொருவேளை-எங்களையும்-அண்ணேவாவென்றுசொல்லிகிண்ணாரங்கொட்டி, குதிப்பானொருவேளை-திக்குமுக்கல்-கொண்டவன்போலெதையோகண்டவன்போல், களிப்பானொருவேளை-மரம்போல்-கையசக்காமல்மெய்யசக்காமலும், இருப்பானொருவேளை-தாளம்போட்-டெக்கலிகொட்டியேகுடிசைக்குட்புகுந்து, பேசானொருவேளை-கண்டதெல்லாம்-பிரட்டென்றுசொல்லுவான்முரட்டுத்தனம், மன்னுருசாமிபோல-கிளம்பி-வாய்விட்டலருங்குரலூரெட்டுமே,ஐயோசிவனேயென்பான்-கீழே- புரண்டழுவான்யாரையுந்தொழுவானே, தூண்டிமீனதுபோல-துள்ளித்துள்ளித்-துடிப்பான்பற்களைக்கடிப்பானே,சிவனென்றுமூன்றுதரம்-நாங்களு

ஞ் செப்பவேணுமல்லாவிடில்வைப்பிலுதைப்பான், கோவிலிற்போவோமென்பான்-எங்களையும்-கும்பிடச்சொல்லியில்லா வம்புபண்ணுவான், சுற்றிவறச்சொல்லியடிப்பான்-சிவன்பேரைச்-சொல்லடாசந்நிதில்லடாவென்பான், சொல்லித்துலைக்கவேணும்-இல்லாவிடில்-சுக்குமாந்தடிகொண்டுநோக்கிடுவான், கொம்பேறுமூக்கன்போலே-முதுகினில்-குத்துவான்புலிபோலேதத்துவானேன், இதுவென்னகாரணமேர்-எங்களுக் -கீனமாயிருக்குதுமானமல்லவோ, கறுப்பண்ணசாமிதானோ-இருளன்-காட்டேறியோ வீரியன் வீட்டேறியோ, பாவாடைதுரைதானோ-ரணபத்திர-காளியோவுன்மத்தவீரனோ, பூசைகள்போட்டுப்பார்த்தோம்-ஒன்றிலும்- போவதில்லைகாரியமாவதில்லையே, எங்கள்வள்ளுவரைக்கேட்டோம்-அவ - ரெடுத்துச்சொன்னாரிதைவிடுத்துச்சொன்னார், யான்உருத்தினார்பிடித்து-வாட்டுதடா - இப்படியாட்டுதென்றார், தெளியாதென்றுசொன்னார்-ஐயே-தெளியாதென்றுசொன்னார்.

கீர்த்தனம் இ ம் கன்னடா பியாகு ஆதிதாளம்

பல்லவி.

சேதிசொல்லவந்தோம்-நந்தனார்-சேதிசொல்லவந்தோம்.

அநுபல்லவி.

சாதிமுறைமைதெரியாதவனுக்கு
வந்தவனென்றொருமாதமாய்தெரிந்த சேதி

சரணங்கள்.

ஏரைப்பிடித்துசற்றே யுழுவான்-மன
தேங்கித்தள்ளாடியே விழுவான்-எங்கள்
சேரியைப்பார்த்தே யழுவான்-சிவ
சிதம்பரமென்றே தொழுவானையே-சேதி

நாத்துமுடியைகையி லெடுப்பான்-இதை
நடத்தெரியாமலே விழிப்பான்-இதை
பார்த்திடும்பேர்களைப் பழிப்பான்-அடே
பாவியென்றெங்களை யடிப்பானையே-சேதி

உதட்டியசைத்தமுணு முணுப்பான்-அவன்
ஊணுறக்கத்தையும் துறப்பான்-நாங்கள்
அதட்டிப்பேசினு லடிப்பான்-பொன்
னம்பலவாணனைப் படிப்பானையே-சேதி

கீர்த்தனம்-இ-ம்-கமாக-ஆதிதாளம்

பல்லவி.

அடக்கியாளுமையே இவனை அடக்கியாளுமையே

அநுபல்லவி.

அடக்கியாளுமிந்த துடுக்குகாரனிவனை
யடக்கிப்பிடித்து கண்டித்துப்படபடத்து

சரணங்கள்.

பொன்னம்பலவனென்றிவன் பேசி
பொழுதைப்போக்குவான்சாம்பலைப் பூசி
சன்னதங்கொண்டவன்போலவே வாசி
சண்டைபிடிக்கவருவானிவன் தோஷி-அடக்

பலித்துதையேஒருமந்திரம் போட்டான்
பழமையானயினிதங்களைக் கூட்டான்
குலத்தைக்கெடுக்கவந்தானிவனொரு கோட்டான்
கோபக்காரனெங்கள்வழிபட மாட்டான்-அட

குளத்தைவெட்டச்சொல்லிக்கூலியைக் கொடுத்தான்
கூட்டிக்கொண்டுபோய்பயல்களைக் கெடுத்தான்
களத்தைச்சீக்கவேயெங்களை விடுத்தான்
காடுமண்டிவருஞ்சுடலையிச் படுத்தான்-அட

வசனம்.

சேதிசொல்லவந்த புலையர்களைப்பார்த்துவேதியர்சொல்லுவார்

விருத்தம்.

காலமேவந்தானிங்கே கள்ளக்கும்பிடுகள்போட்டு
பாலனைப்போலேபேசிப் பசப்பினான்போடாவென்றேன்
வேலைசூழுலகிலிந்த வீணனைப்போலேகாணேன்
சீலமாஞ்சிதம்பரத்தைச் சேரவேவிடைகொடேனே.

வசனம்.

அந்தணர்சொன்னமொழியைப் புலையர்கேட்டு மிகவும்சந்தோஷங்கொண்டு சேரிவந்துசேர்ந்தான் நந்தனரெப்போதும்போல அந்தணரிடத்தில் வருகிறார்.

துக்கடா-ஆதிதாளம்.

நந்தனரும்வந்தார் வெகு
சொந்தமானதங்களையரைக்காண

அங்கமுழுதிலும்நீறுபூசியே அரகரசிவசிவவென்றுபேசியே
சங்கையென்றிருக்கைகள்வீசியேசாமிசாமியென்றுதன்னையேசியே
தில்லைச்சிதம்பரபள்ளுபாடியே தெரிசனங்காணேனென்றுவாடியே
அல்லலருஞ்சிவலோகந்தேடியேயடையவேணுமென்றிங்கோடியே

நந்தனாரும் வந்தார்.

விருத்தம்.

சாதிகுலப்பிறப்பென்னுஞ் சந்தேகம்தெளியாதுதானாய்நிற்கும்
பேதைகுணம்பற்றறுத்துப் பேரின்பம்வருடித்துப்பேணிக்காக்கும்
ஆதிபராபரமென்னுந்திருச்சிற்றம்பலத்தைக்கண்டறிவிலுன்னரூர்
வேதமொழிவிளங்கிவருந்திருவாயால் விடைகொடுத்துவிடுவீரென்

கீர்த்தனம்-இ-ம்-உசேனி-ருபகதாளம்.

தில்லையம்பலஸ்தலமொன் றிருக்குதாம்-கண்டபேர்க்கு
ஜென்மமானபிணியைக் கருக்குதாம்
உயருஞ்சிகரக்கும்பம் தெரியுதாம்-கண்டபேர்க்கு
உள்ளங்குளிரக்கருணை பொழியுதாம்
பண்ணவரயன்மாலுந் தேடுமாந்-தில்லைகாட்டில்
பாம்புபுலிக்குநிர்த்த மாடுமாம்
அரிபிரமனெழுத்தைத் தள்ளுமாம்-ஆரையுமது
ஆனந்தமுழுக்காட்டிக் கொள்ளுமாம்
போய்வருபவர்புண்ணிய சாலியாம்-தருமராசன்
புரத்தில்பழுதுவந்து கேலியாம்
ஒழிவில்லாதகுருவென் றிருக்குதாம்-மூலக்கனலை
ஊதியெழும்பிக்காணப் பெருக்குதாம்
உருவமாகிவெளியே வருகுதாம்-நான்மறைக்கு
முணர்வில்லாதகாட்சி தருகுதாம்
போய்வருகவுத்தரந் தாருமே-பொன்னடித்தூள்
போற்றவேகண்ணாலே பாருமே தில்லை

வசனம்.

சிதம்பரம் போவேனென்று அந்தணர் கேட்கும்படி நந்தனார் சொல்லுகிறார்.

கீர்த்தனம்-இ-ம்-சுருட்டி-ஏகதாளம்.

தாதரிகிடதகதந்தரிகணதகதத்திமிதத்திடக்கணந்தரிதிதைத்துதீம்
தகதந்தரிகுந்தரிதந்தகுணம்தன்னனந் தன்னந்தனத்தித்தனத்தினறு
தந்தோந்தத்தின்னுகிடதகதோந்தத்தினுகிடதோம் [கிட

பல்லவி.

ஆடியபாதங்காணுரே பிர்மானந்தம்பூணுரே

அநுபல்லவி.

நாடுந்தைப்பூரணபூசத்திலே தில்லை
நாயகனுர்குருவாரத்திலே மன்றுள்-ஆடி

சரணங்கள்.

பாசமறுத்துடல் வாசியொடுக்கி
பக்திபண்ணுங்காட்டில் பாம்புபுலிக்கி
ஆசையுடனே யருளைப்பெருக்கி
அன்பர்களிக்கச் சிலம்புகுலிக்கி - ஆடிய
கொட்டமடிக்கும் புனத்தொழில்நீக்கி
கோடிகாலஞ்செய்த பாழ்வினைபோக்கி
வெட்டவெளியிலே நெட்டிடத்தூக்கி
வேதம்பணிந்திடத் தென்முகம்நோக்கி - ஆடிய
சேணுஞ்சடைபுனல் பூமியில்தொட்ட
சேவித்தநாரதர் பாடியேகிட்ட
கோணங்கிமுத்ததண்ட கோளமுமுட்ட
கோபாலகிருஷ்ணனு மத்தளங்கொட்ட - ஆடிய

வசனம்.

ஆனபடியினுல் நான்சிதம்பரம்போகஉத்தரவுதரவேணுமென்று அந்தணரை திருநாளைப்போவார் கேட்கிறுர்.

கீர்த்தனம்-இ-ம்-தேசிகதோடி-ஆதிதாளம்

பல்லவி.

உத்தாரந்தாருமையா-எனக்
கொருவருமில்லைபரகெதியடைய உத்
வித்தைகள்கற்றதுமில்லையாளுெரு
பத்தியிதென்றுபரகெதியடைய உத்
குற்றங்களெத்தனைகொடியோன்செய்யினும்
அத்தனையும்பொருத்தாதரவாக உத்
பெண்டுபிள்ளையென்றுபேயனும்போற்றியே
கண்டுகளித்து காலங்கழித்தேன் உத்
தில்லைச்சிதம்பரத்தைத் தெரிசித்துவந்துங்க
ளெல்லையைகாத்துக்கொண் டிருக்கிறேனையா உத்

வசனம்.

நந்தனுர் சிதம்பரம்போகஉத்தரவுகேட்டதனுல் வேதியரடிமையைப்பார்த்துச் சொல்லுகிறுர்.

விருத்தம்.

படிபுகழ்தில்லைநாதன் பததியேயுருவாய்வந்து
கடிநகராதநாரில் களித்திடும்நந்தனென்று

சிடுசிடுமூஞ்சிகாட்டிச் சில்லிடம்போலேநெஞ்சம்
துடிதுடித்திடவேனாயந் தோஷியும்பேசுவானே.

கீர்த்தனம்-இ-ம்-தண்டகம்-ஆதிதாளம்.

சேரிமுற்றுஞ்சிவபத்திபண்ணும்படி
விட்டையாமதுவிட்டையாம்
சேதிசொல்லவேணுமென்றுயேசி
வந்தையோஅகமகிழ்ந்தையோ
காலைமாலையில்வந்துதெரிசனங்
காட்டுகிறுய்நிலைகாட்டுகிறுய்
கதறினுலூர்க்குருவிகடன்போ
லாகுமோவதித்தேகுமோ
அடிமைவேலைசெய்யுமுனக்கிந்தக்கொண்
டாட்டமோசெனக்கூட்டமோ
அடக்கியாளமாட்டேனுன்சிங்கக்குட்டி
யல்லவோவதைசொல்லவோ
காளிபூஜைசெயவர்போடும்போதுநீ
கண்டித்தையாம்தெண்டித்தையாம்
கபடமெல்லாம்வெளிப்படுவதாகவழி
காட்டுகிறேனிறைநாட்டுகிறேன்

வசனம்.

நந்தனர் சிதம்பரம்போறேனென்றுசொல்லுவதால் அந்தணர் கண்டிக்கிறுர்.

கீர்த்தனம்-இ-ம்-லாவணி-ஆதிதாளம்

பல்லவி.

பறையாசிதம்பரமென்றுசொல்லப்
படுமோடாபோகப்படுமோடா

அனுபல்லவி.

அறியாத்தனமினிசொன்னுலினிமே
லடிப்பேன்கூலியைப்பிடிப்பேன்பாவி — பறையா

சரணங்கள்.

சிதம்பரமென்பதை — விடு-கொல்லைத்
தேறடியிலேவந்து — படு-நாற்றைப்
பதத்திலேபிடுங்கி — நடு-கருப்
பண்ணனுக்கேபலி — கொடு-அடாபறையா

எப்போதுமொருதடி பிடி-கையி
லெடுத்துக்கொண்டேதழுக் கடி-எங்கள்
கற்பனையாம்பள்ளு படி-யுந்தன்
கால்நோகாமலேகாடியைக் குடி-அடாபறையா
கள்ளந்தீருதற்குப் பாரு-உன்
கால்படும்பண்ணையில்வீற் றிரு-இது
சொன்னதுமில்லையோஉன் குருநீ
சுகமுடன்வாழ்ந்துகொண் டிரு-அடாபறையா

விருத்தம்.

ஓதியடிவீராவென்றும் உக்கிரமாடாவென்றும்
பதிபெறுங்கருப்பாவென்றும் பாவாடைராயாவென்றுந்
துதிபெறுமிருளாவென்றும் தொட்டியச்சின்னனென்றும்
மதுவொடுபிசிதம்வைத்து வருந்தியேவணங்குவாயே.

வசனம்.

அந்தணர் நந்தனரைக்கண்டித்து மறுபடியும் நல்லவார்த்தை சொல்லுகிறார்.

கீர்த்தனம்-இ-ம்-லாவணி-ஆதிதாளம்.

பல்லவி.

நந்தா ஒருசேதிசொல்லுகிறே
னிந்தபங்குதோன்றியநாள்முதல்
சொந்தமுறியெழுதிகொடுத்துநீ
வந்தபறையனல்லவோமறந்தாய் நந்தா

பாருயிந்தவயல்வரப்பைவெட்டி
பேருஅக்கினியைவெட்டிப்பனை
சேருபொருப்புள்ளவனிலையன்றி
யாருயிதுவல்லவோகாரியம் நந்தா

வாடாஉன்கூலியைமுழுதுந்தர
வோடாபண்ணைப்பறச்சிகளுடனே
கூடபழனங்கடோறுநடப்
போடாஇதுவல்லவோபுண்ணியம் நந்தா

பாடுஉன்கறுப்புதெய்வத்தைகொண்
டாடுகள்ளுகள்ளுடன்பூசைகள்
போடுநெல்விளையும்படிக்குவழி
தேடுபுத்திசொன்னேனிதுதான் நந்தா

வசனம்.

வேதியர் நந்தனரைச் சிதம்பரம் போகாதேயென்று கண்டித்துச் சொல்லுகிறார்.

கீ-ம்-இ-ம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்

பல்லவி.

சிதம்பரம்போகாதேசொன்னேன் சிதம்பரம்போகாதே

அநுபல்லவி.

சிதம்பரம்போனால் இதம்பெறலாமென்று
சேதிசொல்லுருயுன்சாதிக்கடுக்குமோ சிதம்பரம்

சரணங்கள்.

கள்ளக்கும்பிடுகளைப் போடாதேஉன்
கபடமெல்லாமிங்கே காட்டாதே
மெள்ளச்சொல்லடாமுழுமூடா கீழே
தள்ளிவிட்டுவுன்னைத்தரும்படி செய்வேன்-சிதம்
நாத்தைப்பிடிங்கிக்கழனி நடவேணும்-அந்த
நஞ்சைவயலைச்சற்றே யுழவேணும்
பார்த்துப்பரமடிதது பழுதுவாராமல்
பாயுஞ்சலம்விட்டுப் பார்த்திடுவாய்நீ-சிதம்
அடிக்கடிமருத்துநான் சொல்லவோநீ
அடிமைக்காரப்பய லல்லவோ
எடுத்துகாட்டுவேனிருக்குது சாதனம்
தடுத்துப்பேசினால் தாடையிலடிப்பேன்-சிதம்

வசனம்.

அந்தணர் கண்டித்துச்சொன்னதால் நந்தனர் துயரமடைந்து சேரியில்வந்து சிவனைநினைத்து பக்திபுரிந்து கொண்டாடுகிறார்.

கீர்த்தனம்-இ-ம்-தண்டகம்-ரூபகதாளம்.

பல்லவி.

பத்திபண்ணிக்கொண்டிருந்தால் முத்திபெறலாமே

அநுபல்லவி.

எத்திசையுமெவ்வுயிர்க்கு மவ்வுயிராய்நிறைந்திருக்கும்
வஸ்துவென்று அம்பலவன்மலரடிதினந்தோறும்

சரணங்கள்.

கட்டழகிசோரனிடங்காதலது போலே
கடுகிவருங்கன்றருகில்கபிலையது போலே
கண்டதரைத்துணியுமில்லாப்பேதையொருக் காலே
காவலனும்பதம்வருகில்களிப்பதனைப் போலே
கண்டுமுறைகீழகலக்கண்டறியார்மதுமயக்கர்
கற்பனையாமிப்பிரபஞ் சொர்ப்பனம்போலொப்புமிதும் பத்தி

தயிர்குடிக்கப்பால்குடிக்கத்தழுவுதல்திருஷ் டாந்தம்
சடம்பொருக்காமல்துயர்தருகில் மோகாந்தம்
ஆயிருந்துவழுத்திந்தமாயையும் சாந்தம்
ஆருமொன்றுசாதனங்கள்வழங்கியது வேதாந்தம்
காயஞ்ஜனிக்காதிருக்கக்கண்டுகொள்ளவேண்டுமென்றால்
காசுபணம்பாசமதுமாசரவே நேசமுடன்பத்தி

பச்சைமரத்தாணிபோலேபரிந்துமனம் நாடி
பாலகிருஷ்ணன்பணியும்பொன்னம்பலனைக்கொண் டாடி
இச்சையொழிந்ைதம்புலன்களைந்துகளும் வாடி
ஏகரசமானபரிபூரணத்தைத் தேடி
அச்சமரந்திருவிழியிலானந்தநீர்கரைபுரள
அரனேதிரிபுரனேகங்காதரனே பராபரனேயென்று பத்தி

வசனம்.

சேரியில் சிவபக்திபண்ணிக்கொண்டிருக்கிற பன்னிருபேர்களுடன் நந்தனுருமிருந்து பக்திபண்ணும்நாளையில் ஒருநாள்நந்தனார் பன்னிருவருடைய பக்திதிடப்பட்டதோ இல்லையோ வென்று அறியப் பரிட்சைபார்த்தார்.

இருச்சொல்லலங்காரம்.

நந்தனர்-சிவதலத்தில்சிதம்பரமேகாட்சி யென்றார்
அவர்கள்-அவித்தைகளை தூண்டிநிற்றலேகாட்சி யென்றார்
நந்தனர்-சிற்சபையின்மகிமையென்செப்புவீ ரென்றார்
அவர்கள்-அச்சுதருங்காணுதவானந்த மென்றார்
நந்தனர்-ஆகையினலென்னபலனகு மென்றார்
அவர்கள்-நாக்கதிலேசிவநாமம்நவினு மென்றார்
நந்தனர்-கற்றதனலென்னபலன்கண்டோ மென்றார்
அவர்கள்-கொற்றமைக்காரன்பலன்கண்டோ மென்றார்
நந்தனர்-அம்பலத்தைத்திரைபோடத் தொடங்கினரே
அவர்கள்-சம்புவித்தைமாயைக்கு ளடங்கினரே
நந்தனர்-மனந்திருத்திகொண்டார்க்குவாராதொன்றில்லை யென்றார்
அவர்கள்-கனவருத்தமுண்டார்க்குக்காராதுதொல்லை யென்றார்
நந்தனர்-சாதியிலேயெளியவன்தானறிவானே யென்றார்
அவர்கள்-ஆதியிலேபேதமில்லைஅறிவீரே யென்றார்
நந்தனர்-ஞானமில்லாதவர்முத்திநாடா ரென்றார்
அவர்கள்-ஊனமில்லாச்சிவபத்திதேடா ரென்றார்
நந்தனர்-மதியில்லாதவர்களுக்கெல்லாம்விதியே தென்றார்
அவர்கள்-துதியில்லாதவர்க்கெல்லாகதியே தென்றார்

நந்தனுர்-பவளக்கடலேகுளப்படிபோல்பகுப்பா ரென்ருர்
அவர்கள்-சுகக்கடலேவிளப்பார் சுகிப்பா யென்ருர்
நந்தனுர்-பாப்பானுத்தாரங்கொடுப்பானே வென்ருர்
அவர்கள-காப்பாற்றுங்கடவுளுக்குகைப்பாரா மென்ருர்
நந்தனுர்-படித்தாப்போற்காட்டிவிட்டேன்பலமாச்சு தென்ருர்
அவர்கள்-அடித்தபால்போட்டுவிட்டீராராலேயாகு மென்ருர்
நந்தனுர்-அங்கேயென நீங்கள்வல்லேயோ வென்ருர்
அவர்கள்-இங்கேயேனேது இல்லேயோ வென்ருர்
நந்தனுர்-எங்கும்நிறைந்தபூஷணங்க ளென்ருர்
அவர்கள்-இங்குமிருந்து இயற்றுங்க ளென்ருர்

வசனம்.

இப்படியிருக்குங்காலத்தில் ஒருநாள் தனக்குத்தானே பரவசமாய் ஆனந்தகண்ணீர் பெருகிப் பாடுவார்.

கீர்த்தனம்-இ-ம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

பாடுவாய்மனமே சிவனேக் கொண்டாடுவாய்தினமே

இந்திரன்முதலிய இமையவர்க்குபகாரா
நந்தியின்மீதேறும் நம்பன்பதம்போற்றி பாடுவாய்

ஆலந்தனேயுண் டமரரைக்காத்திடும்
நீலகண்டன்கழல்பெற நெறியுடன்போற்றி பாடுவாய்

சீலமாகவேசித்தத்தினின்ருடுஞ்
சூலபாணியென்னும் சுயம்புதரன்போற்றி பாடுவாய்

மோகமாந்துன்பத்தினுல் மூழ்கிகெடாமல்
ஆகமமுறையிடும் அந்திவண்ணனேப்போற்றி பாடுவாய்

பஞ்சாட்சரந்தன்னேப் பக்தியாயுறுபோற்றி
மெய்ஞ்ஞானம்பெற்றுய்யு மேலானேநீபோற்றி பாடுவாய்

கீர்த்தனம்-இ-ம்-தோடி--ஆதிதாளம்.

பல்லவி.

சிதம்பரமே நினே மனமே முத்தி பதம்பெறலாகுமனமே

அநுபல்லவி.

சதம்சதமெனும்பொருள்பதம்பகம்பயமருள்
சமரசநடம்புரிசாமிசிதம்பரநிமலன்திருவுருக்கொள்ளாரகர சிதம்

சரணங்கள்.

ஒழியாக்கவலேகொண்டு விழலனுனய்
உண்மையில்லாவிடிவிட்டுநிழலானுய்

தழுவாதிருந்ததில்லைத் தலமெனுமேல் வீட்டை
சாகசத்தாலல்லோ நல்லசாபல்லியமாம் பாட்டை
பந்தமும்பெற பந்தமுமேயற
எந்தவினை தீர முந்தாரமுற-சிதம்

தேகமெடுத்தவருண்மையறியாய்மோகத்
தெரிந்துவைபாவலைசிக்கிமுழியாய்
சாகுமட்டும்சம்சாரமே விட்டு
சலியாமலேயுதைத்துச் சண்டாளமான துட்டு
சம்பாத்தியமது வம்பாரும்விதி
சம்பாதித்தது தெம்பாய்பதி-சிதம்

உனக்குள்ளேயுணர்வாவாலநீமோகனம்உம்மை
ஓர்வழிகாட்டுமேஞானம்
தனக்குசிதம்பரம்சார்ந்ததாலே தன்மயம்
சத்திரமாம்கூட்டுசோம்பராச்சிய சின்மயம்
சரிவரசிவகுரு வசமயமாய்வரு
முருவெளியெனுமொரு பொருளதுவந்திரு-சிதம்

துக்கடா.

அரகர அரமாதேவா

நந்தனர் சிலநாளன்பு அடிமைகொண்ட அந்தணரிடத்தில்வந்து சிதம்பரம்போக உத்தாரம்மிகவும் வருந்திகேட்கிறுர்.

இது அறுசீரடி-விருத்தம்.

வேதியரேநல்லவரே பெரியவரேகடைய விண்ணோர்மெச்சும் சாதியரேகலையுங் கற்றுணர்ந்துபுரையில்லா தவரேசெய்யும், போதியரேபக்தியில்லாதநான்புலையனேதறியேனேபுண்ணியமூர்த்தி,பாதிகுருசிதம்பரத்தைக் காணவென்றேயாசைகொண்டேனனுப்புவீரே.

கீர்த்தனம்-இ-ம்-நாதநாமக்கிரியை-ருகதாளம்.

பல்லவி.

தில்லைசிதம்பரத்தை பொருதரமாகிலும்
தெரிசித்துவாவென் றுத்தாரந்தாருமையா

அநுபல்லவி.

தில்லைசிதம்ப்ரத்தைக்கண்டால் பிறவிப்பிணி
இல்லையென்றுபெரியோர்சொல்லக்கேட்டிருக்கிறேன் தில்லை

அல்லலருக்குந்திருமம்பலநாயகன்
அல்லுபகலுமாடுமானந்தம்பெருகிய தில்லை

யாதிமுதலாயென்னை யடிமைகொண்டதல்லவோ
வேதகுலமேயெந்தன் மீதில்தயவுசெய்து தில்லை

-கீ-ம்-இ-ம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

தெரிசிக்கவேணுஞ்-சிதம்பரத்தை-தெரிசிக்கவேணும்

அநுபல்லவி.

தெரிசித்தவுடனுடல்கரிசைப்பிணிகளரும்
பரிசுத்தமாகுமுன்மறுசுத்தமாகவே — தெரிசிக்க

சரணங்கள்.

பத்தர்பணியுந்திருக்கூத்தன்சந்நிதிதொழு
தேத்திப்பிரவிதுயராற்றியெப்போதும் — தெரிசிக்க

வேதனையடியவர்போதனைமுனிவர்கள்
நாதனைக்கரங்குவித்தாதரவாக — தெரிசிக்க

ஈசனேபுலியூரில்வாசனேகனகச
பேசனேயென்று நடராசனைப்போற்றி — தெரிசிக்க

காமனையெரித்தவர் வாமத்தினின்றுசிவ
நாமத்தைசொல்லியர்த்த சாமத்தில்வந்து — தெரிசிக்க

ஞாலம்புகழுமவன்மாலையணியுங்கோ
பாலகிருஷ்ணன்தொழுஞ் சிலபொற்பாதனை — தெரிசிக்க

வசனம்.

நந்தனர் தரிசனஞ்செய்ய உத்தாரங்கேட்க அந்தணர் சொல்லுகிறார்.

எண்சீரடி யாசிரியவிருத்தம்.

புத்திசொல்லக்கேளாதமூடாவுந்தன்
 புரட்டெல்லாநானறிவேன்போடாபோடா
பத்தியென்றுஞ்சித்தியென்றும் பறையர்க்கேது
 பாப்பாரதெய்வமது பாலிக்காது
குற்றமுண்டுன்சாதியிலேல்வழக்கமில்லாக்
 கொள்கைபரச்சேரியிலேகூடாதப்பா
பித்தமதுகொண்டவன்போலிங்கேவந்து
 பேசாதேபோபோவென்றேசுவானே.

கீர்த்தனம்-இ-ம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

சிதம்பரதெரிசனமா நீயதைச்சிந்திக்கலாமா — பறையா

அ

அநுபல்லவி.

சிதம்பரதெரிசனஞ்சதுர்மறையோர்கள்
செய்வதுஞாயம்நீசொல்வதுமீயம்
சொல்லாதே இங்கேநில்லாதே
சேரிக்குப்போடாநாளைக்குவாடா சிதம்பர

சரணங்கள்.

கனகமகாமுனியோகிகள்தேடிய
கனகசபேசனைக்கண்டறிவாயோ
பேசாதேகைவீசாதே
வீரனைத்தொழுடா யேரியைவுழடா சிதம்பர

தவமுடையோர்கள் தரிசிக்குமந்திரஞ்
சிவபதமென்றுசேவிக்கலாமா
ஆராதுவினைபோகாது
விரைதெளியன்றோஅறுதலிமகனே சிதம்பர

வசனம்.

உழுதுசேறுபண்ணி பரம்படித்து விரைதெளித்து நாற்றுபறித்துநடவுநட்டு மடைதிறந்து மடைகோலுகளைபிடுங்கி காத்திருந்து பதத்திலறுத்து கட்டியடித்து நிரம்பியபட்டையைக் காப்பதுமில்லை இராக்காலங்களில் பந்தம்பிடித்து தடியெடுத்து கொம்புதம்பட்டமுழக்கி கோலாகலமாகி நாலுபறையரோடுங்கூடி வரப்பைவிட்டு ஊரைச்சுற்றிவந்து காக்கும்படி கிராமத்தாரிட்ட காவல்கார்ப்பதுமில்லை உனக்குவேண்டிய ஊணுறக்கமுதலாகிய தேசதருமமறந்து எப்போதுந்தில்லையம்பலம் திருச்சிற்றம்பலம் சிதம்பரமென்று பித்துப்பிடித்துத் தாயைவிட்ட குழந்தைபோலே வாயைவிட்டலறிபேய்பிடித்தவன்போல் மதிமயங்கி உடல்கலங்கி எல்லோரும் பழிக்கக்கீழேபுரண்டழுது தத்துப்பித்தென்று தள்ளாடியகாரண மென்னவென்று அந்தணர் நந்தனைக்கேட்கிறார்.

கீர்த்தனம்-இ-ம்-சூரியகாந்தம்-ஆதிதாளம்.

பலலவி.

நந்தாயுனக்கிந்தபிரமைவந்தகாரணம்
நானறிந்திடச்சொல்லும்

அநுபல்லவி.

அந்தரங்கமுள்ளசொந்தப்பறையனு
யண்டியிருப்பதுபோய்சண்டைபிடிக்கவந்தாய் நந்தா

சரணங்கள்.

சாதிமுறைமைதுறந்தாய்தில்லைச்
சபாபதியைநினைந்தாய்
சூதுக்காரபறையருடன்கூடிச்
சும்மாயிருப்பதுஎம்மாத்திரந்தான் நந்தா

குலத்திலில்லாதவழக்கம்நீயதைக்
கொண்டாடுமுழக்கம்
வெளுத்ததினுலென்ன எருமைச்சாணியது
மேனியிலணிவரோ வையகந்தன்னில் நந்தா

திருட்டுப்புரட்டறியாய்பொல்லாத்
தீங்குவார்த்தையுரையாய்
முரட்டுதனத்தைஎன்முன்னேகாட்டி
விரட்டுப்பேசுருய் வெறிமயக்கமோஅடா நந்தா

வசனம்.

வேதியர் நந்தனுரைப்பார்த்துச் சிதம்பரம் வந்தகாரண மென்னவென்று கேட்டபின் நந்தனர் வேதியருக்குச்சொல்லுவார்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மனங்கொண்டவி - மெல்லாம்போகாமலானைவிட்டுமறித்துவாங்கி
அனல்கண்டமெழுகதுபோலென துள்ளந்தனதாகவுரிக்கச்சாய்க்கு
புனல்கொண்டவேணியனை புண்ணியனைபுராந்தகனைபோற்றிசெய்ய
கனல்கொண்டதில்லைநகர்போய்வருவேன கருணைவழிகாட்டுவீரே.

வசனம்.

நந்தனர்வேதியரைப்பார்த்துஉத்தரங்கேட்கஅந்தணர்சொல்லுதல்.

கீர்த்தனம்-இ-ம்-நாதநாமக்கிரியை ரூபகதாளம்.

பல்லவி.

நட்டநடவும்விளையும் பட்டவெளியைதொட்டபோதினும் நட்ட
கெட்டமதியைவிட்டுவிடு கேளடாபண்ணையாளடா நட்ட
கிட்டநெருங்கும்பண்ணையுன்கால் பட்டதினுபசுமைகொள்ளுநட்ட

விருத்தம்

கதிரொருமுழமேநீளுங் கட்டுமுக்கலமேகாணும்
துதிபெருநாதாவுன்கை தொட்டதேதங்கமாகும்
பதிதனிற்பெருமைசொல்லும் பறையனுயிருந்துதில்லை
சிதம்பரப்பித்தேன்கொண்டாய் செய்தொழிலேதென்றுரே.

வசனம்.

நந்தனுக்குச் சிதம்பரபித்துத் தெளியாமையால்வேதியரென்னசெய்யப்போகிறேனென்று துயரமுற்று நந்தனுரைப்பார்த்து புலம்புவார்.

கீர்த்தனம்-இ-ம்-தனுசரி-ஆதிதாளம்

பல்லவி.

பித்தனாய்போனதென்ன நந்தா

அநுபல்லவி.

எத்தனையோபுத்திகளெடுத்துபடித்தும் பித்த

சரணங்கள்.

சித்தமிப்படி செய்ததாரோ
பற்றுதலில்லாமலே பண்ணியபேராரோ
பக்தியென்று பேரிட்டதாரோ
நித்தமுமிப்படியே நிலையிட்டதாரோ-பித்தனு

எத்திசையும்புகழ் பெற்றிருந்தும்
வித்தைகளனேகம் விளம்பிடத்தெரிந்தும்
பத்தியொடு சகலமறிந்தும்
நந்தனென்றுபேரிட்டு நானுனக்கிருந்தும்-பித்தனு

வசனம்.

மனதிற்றுயரமுற்ற வேதியரை நந்தனார்மிகவும்வணங்கிச்சொல்லுவார்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பித்தமதுதெளிந்திடமருந்தாண்டு தில்லைவனம்பேணிச்சென்று
சத்திசிவகாமிப்பெண் சந்நிதியில்நேராகத்தலைவணங்கி
தித்தியென்னுமிடுக் திருக்கோலங்கண்குளிரத்தெரிசித்தாலும்
பித்தமதுதெளிந்துவிடும் வேதாந்தமழைசொரியும்பெரியகோவே.

கீர்த்தனம்-இ-ம்-செங்கலா-ரூபகதாளம்.

பல்லவி.

பித்தந்தெளியமருந்தொன்றிருக்குது பேரின்பமன்றுள்ளே

அநுபல்லவி.

மற்றமருந்துகள்தின்றாலுமுள்ளுக்குவல்லே-வல்லே-வல்லே ஐய பி

சரணங்கள்.

பாம்புபுலியும்மெய்ப்பாகிபட்டுத் தேடிப்பார்த்து பயிரிட்டது அந்தப்பாரளந்ததிருமாயனும்வேதனும்பார்த்துக்களித்துக்களித்தது

பார்வதியென்றொரு சீமாட்டியதில்பாதியைத்தின்றதுண்டு இன்னம்
பாதியிருக்கும்பறையா நீயும்போய் பாரென்றுத்தாரந்தாருந்தாரும்

பத்துதிசையும் பரவிபடர்ந்தாலும் பார்த்துபிடியாரோ
தத்திக்குதிக்குந் நாளங்கள்போடுந் தண்டைசிலம்புகொஞ்சுஞ்
சித்திக்குந்தேனோ செங்கரும்போ நல்லசித்தமுடையார்க்கே என்
சித்தத்தைக் கட்டியிழுக்குது அங்கேசென்றாலேபோதுங்கண்டால்
தீருமையே. பித்த

ஊரைச்சொன்னாலுமிப்பாவந் தொலையுமூடருக்கும்
பேரைக்கொண்டுப்புலம்புகிறார் பலபேர்களுக்குப்பிழைப்பு
யாருநரையுந்திருமருந்து சாதியைப்பாராது இன்னந்
தீராதநோய்கள் படைத்தவெனக்குத் தீருந்தீருமையே பித்த

கீர்த்தனம்-இ-ம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

சிதம்பரம்போகாம விருப்பேனோ
சென்மத்தைவீணாக்கிக் கெடுபபேனோ சிதம்

பத்தியுமனமும் பொருந்தினதங்கே
சத்தியஞ்சொன்னேன் சடலமுமிங்கே சிதம்

ஆசையுநேசமு மானந்தமங்கே
பேசலும்பாசமும் பிதற்றலுமிங்கே சிதம்

வசனம்.

இப்படிநந்தனார் சொல்ல வேதியர் மூர்ச்சையடைந்துவிழுந்து தெளிந்து எழுந்து சொல்லுவார்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நாற்பதுவேலிபூமி நடவுநட்டாகவில்லை
பார்ப்பதுமில்லைசைவப் பழமதுதின்றாய்பண்ணை
காப்பதுமில்லையுன்னைக் கைவிடமனதுவல்லை
சேர்ப்பதாலாவதில்லை சேரியிற்றொலைந்துபோடா.

வசனம்.

என்றுவேதியன் சொல்லிய உத்தாரப்படி சேரியில் நந்தனார்வந்துபன்னிரண்டுபேர்களைப் பார்த்துசொல்லுவார்.

திபதை-இ-ம்-மாஞ்சை-ஆதிதாளம்.

கண்ணிகள்.

ஆசைநேராகுந்தோழரே கேளுங்கள்
பேசத்தெய்வங்களுண்டோ ஈசனல்லாலெமக்கு ஆசை

அயன்மாயன் அன்றடிமுடிகாணாத
நேயனழலுருவாய் நின்றநின்மலரல்லால் ஆசை

மண்ணாய் விண்ணாய் மற்றுளபொருள்களாய்
எண்ணுமென்னுளெண்ணேபோ லிருக்குமீசனல்லால் ஆசை

அருவாயுருவா யண்டபகிரண்டமெங்கும்
பரமாகியுநின்றதேதந்தப் பராபரத்தையல்லால் ஆசை

வசனம்.

என்றுநந்தனார் சொல்லிப்பின்னும் ஆனந்தக்கூத்தாடுவார்.

தரு-இ-ம்-தன்னியாசி-திரிபுடை-தாளம்.

பல்லவி.

ஆனந்தக்கூத்தாடினார்- ஆனந்தநந்தன்
ஆனந்தக்கூத்தாடினார்

அநுபல்லவி.

வானுந்தேவர்முனிவர் ஜெயஜெயவென்று
வாழ்த்தும்பிரானடிகள் வாய்ப்பதெப்போவென்று ஆன

சரணங்கள்.

மாயவலைக்குட் பட்டு அதிலெப்போதும்
மாளாத்துயரப் பட்டு
மாயுமுன்னாகவந்து வலியவாண்டருண்மூர்த்தி
நாயேன்களிக்கவென்றான் நாடுவரென்றேசத்தி ஆன

கவலைப்படாதே நெஞ்சமேகாலன்கைபாசங்
கண்முன்வாராதே அஞ்சுமே
தவநிலையுணர்ந்த சன்மார்க்கர்தமக்கென்று
தற்பதத்தைக்காட்டினேன் தலைக்காணுவேனென்று ஆன

காயமிகவுஞ் சதமா அன்றியுற்பவங்
காண்பதொவ்வொரு விதமா
ஆயமெழுபிறப்பா யவதரித்தனுண்டென்றுன்
தூயபதத்தாலந்தத் துகளற்றிருப்பேனென்று ஆன

வசனம்.

இவ்விதமாகப் பன்னிரண்டு பேர்களையும் வேலைசெய்யவொட்டாமல் தன்சமீபத்தில்நிர்க்கவைத்துக்கொண்டு போதித்திருப்பதை வேதியன்கேள்வியுற்று நந்தனாரைச்சீறிக் கடுங்கோபஞ்செய்ய நந்தனார்வேதியருக்கு இதவுசொல்லுகிறார்.

தரு-ஸ்ரீராகம்-ஆதிதாளம்.

பல்லவி.

ஏதுக்கென்மீது இத்தனைபேதம்
எண்ணுவானேன் தோதம்

அநுபல்லவி.

சாதாரணமான கசடர்சொன்னசொல்லை
சாதனைசெய்து சார்ந்துபிழையொன்றில்லை-ஏது

நான்உனக்குபண்டு சாதனஞ்செய்து
நலமாய்த்தந்ததுண்டு
தோன்றுமேசொல்லுஞ் சொற்படிசெய்கிறேன்
பான்மையாநித்திய பத்தியால்உய்கிறேன்-ஏது

காசளவுநன்மை செய்தோரை ஒருக்
காலுமறவாதன்மை
தாசனுக்கெப்போது மூண்டுதாமேகண்டு
யோசிக்கபோகிறீர் இனிமேல்நான்செய்தொண்டு-ஏதுக்

ஏழைநான்தானே சூதும்வாதும்
ஏதொன்றறியேனே
மேழியருடனேயொரு மேதிகாளைகளெங்கே
ஊழியனுக்கும் உழுதயிடங்கொடுப்பீரெங்கே

நந்தனார்ஏருழுதல்.

வணக்கமாய்ச்சொல்லும்வார்த்தையையுணர்ந்து
வஞ்சனையிலாவேதியன்தன்
கணக்கில்லாதனதுபண்ணையாள்வசத்தில்
கைப்பிடியாகவேவந்து
பிணக்கிலானிவன்சொற்படியெலாஞ்செய்வான்
பின்னிடான்அழைத்துப்போவென்ன
இணக்கமாய்க்கொண்டுபோயினர்நந்தர்
ஏர்தொழில்மிகபுரிந்தனனே.

தரு-௨௰-ம்-சஹாநு-ரூபகதாளம்.

பல்லவி.

பத்தியாக ஆண்டைசொற்படிசெய்தார்நந்தன்பலருடன்மிகப் பத்தி

அநுபல்லவி.

கர்த்தனைசித்தங் களித்துக்கதித்தவன்
கமலப்பாதத்தை நாடிமெத்தக்
காதலாகவேகொண் டாடி
மனம் நீடி-பத்தி

சரணங்கள்.

நீருள்ள ஆதனூர் நஞ்சைபுஞ்சைகளை
நித்தமுமேகொண்டு பழுது அறச்
சுத்தமதாகவே உழுது
காலைப் பொழுது-பத்தி

கருப்புவெளுப்புச் சிவப்புநிறமுள்ளக்
காளைகளைகட்டிப் பூட்டிப்-பொற்
காருவென்றதிலே மாட்டி
ஏ ரோட்டி-பத்தி

கந்தன் கருப்பன் கடம்பனிடும்பன்
கரியனவன்தம்பி பெரியன்சின்னக்
காத்தானவன்மகன் சொரியன்
குள்ள நயினார்-பத்தி

சீரகசம்பா சிறுகடன்சம்பா
சிவந்தமணக்கத்தை நட்டுவம்பு
சேர்த்துவை மிட்டு
பயி ரிட்டு-பத்தி

வ-ம். இவ்விதமாய் ஏர்தொழில் புரிந்துக்கொண்டிருந்த நந்தனார் இனிமேல் சிதம்பரம்போவேன் போகாவிடில் பிராணனைவிடுவேன் அன்றியும் சேரியில் வரமாட்டேனென்று சொல்லிக்கொண்டுவேதியர்பால்சென்று தலைவணங்கிக் கரங்குவித்து மனந்துடித்துக்கண்டித்துச் சிதம்பரம் போக உத்தரவுகேட்கிறார்.

பொய்ச்சடலம் புழுக்கூடென்பதுவர்சற்றேற்பையைப்போற்றிசெய்யும், துச்சனிவனென்றெண்ணித் தள்ளாமனன்னெறியைச்சொல்லவேணும், பச்சைமிகுந்தொடிவழகி சிவகாமிமாதுபங்கன் பாதங்காண, இச்சைமிகுந்திருக்குதையே அம்பலத்தைக்கண்டுகளித்திரைஞ்சுவேனே.

தரு-இ-ம்-சாவேரி-ரூபதாளம்.

பல்லவி.

பொன்னம்பலவாணனடிதொழுவா ரொருவரன்றிப்
பிறவிக்கடலிடையில்கிடந்தழுவார்

அநுபல்லவி.

இன்னம்பலதெய்வங்களுமிருக்குமெனக்கவர்
போலவேதில்லையேழையிடத்திலிருந்தருள் செய்திடும்பொன்

வேதமொருநான்குமறியாத பழம்பொருளாகிலும்
வேண்டுபதஞ்சலிக்காகவேதில்லைப்பதிவந்து
பாதச்சிலம்பசையமணிகுலுங்கப்பிறையிலங்க
பணியடமரடமேசடைவாடவேபரமானந்தக்கூத்தாடியபொ

பலகந்தனில்சுகமதுபோலெங்கினும்பரிபூரண
முருவற்றதுமருவற்றதுகுறையற்றிடுஞ்செல்வங்
கலியற்றவர்மதமற்றவர்விடபத்தினிலுருவற்றிட
கலைகற்றவர்வலையற்றவரிதயத்தினில்நடமாடிய பொ

இரவுபகல்கருமங்களிழுக்கும்பொறிகரணங்களதை
இழுத்துவசப்படுத்தும் வகையெனக்குத்தெரியாது
பரவிவருமாகாதியிற்காண்டுங்கதிமனமொடுங்கிவழி
பார்க்குமிடமார்க்குமரிதாக்கும்பாலகிருஷ்ணன்தொழும்

வசனம்.

இவ்வகையாகச்சொல்லும் நந்தனாரைப்பார்த்து வேதியர்சொல்லுகிறார்.

சுலோகம்.

மெள்ளப்பேசிமெழுகிறாயனுதின மூடாவுனக்கித்தனை
கள்ளக்கும்பிடலாவதென்ன பலனோகாட்டும்பிசாசல்லவோ
துள்ளித்துள்ளித்துடிக்கிறாய் சிவபதஞ்செல்லாதுன்சாதியிலே
எள்ளுக்கொல்லையில்மாடுவந்து தொடராதேகும்படிச்செல்லடா.

வசனம்.

இப்படிச்சொல்லிய வேதியருடனே நந்தனார் தனக்குத்தெரிந்தவித்தைகளை அத்தருணத்தில் சொல்லிக்காட்டுவார்.

முன்நந்தனார்-பின்வேதியர்-இருவருமாகச் சொல்லிக்கொள்ளும்
ஏட்டிக்குப்போட்டியான இருச்சொல்லலங்காரம்.

நந்தனார்-தில்லையைப்பார்க்கவல்லையோ வென்றார்
வேதியர்-கொல்லையில்முளகாயில்லையோ வென்றார்
நந்தனார்-கள்ளம்போனாலுள்ளதுகாணு மென்றார்
வேதியர்-வெள்ளம்போனாலுள்ளதுவிளையு மென்றார்
நந்தனார்-திருச்சிற்றம்பலங்கண்டால்தேகங்களிக்கு மென்றார்
வேதியர்-பொரிச்சகறிகொண்டால்தேகம்பெருக்கு மென்றார்

நந்தனர்-அரகராவென்றால்பாவம்போ மென்றார்
வேதியர்-பறையனைக்கண்டால்பாவம்போ மென்றார்
நந்தனர்-வெட்டவெளியிலேமனுமுட்டிப்பாரு மென்றார்
வேதியர்-பொட்டவெளியிலேகுழிவெட்டிப்பாரு மென்றார்
நந்தனர்-எனக்குரியஞானமாரியைமதி யென்றார்
வேதியர்-உனக்குநாறியபறையர்சேரியேகதி யென்றார்
நந்தனர்-கர்த்தாவேயென்னுள்ளம்பெற்று ரென்றார்
வேதியர்-கற்றுழையக்கினியில்பற்று தென்றார்
நந்தனர்-மறையோருக்கெப்போதும்வாயிலேதற்க மென்றார்
நந்தனர்-கொள்ளித்தேள்போலென்னைகொட்டாதே யென்றார்
வேதியர்-அள்ளித்தந்தேனென்னைதிட்டாதே யென்றார்
நந்தனர்-கடுமையால்வந்துகவலைப்படுத் துவதேன்
வேதியர்-அடுமையாய்வந்துஅவலப்படுத் துவதேன்
நந்தனர்-தில்லையோடென்னைச்சேரேனே வென்றார்
வேதியர்-எல்லையோடுமுன்னைப்பாரேனே வென்றார்
நந்தனர்-திருவாதிரைவருகுதுபோவேனே வென்றார்
வேதியர்-மறவாதிருபறையாபோகாதே யென்றார்
நந்தனர்-தெரியாதமெள்ளப்போவேனே வென்றார்
வேதியர்-மரியாதையல்லபோகாதே யென்றார்
நந்தனர்-ஆணையைவிட்டுவழிகாட்டும்பெரியோரே யென்றார்
வேதியர்-பிராணியைவெட்டும்பழிகாட்டும்புலையரே யென்றார்
நந்தனர்-ஆடிப்பாடிபடிப்பே னென்றார்
வேதியர்-தேடித்தேடிப்பிடிப்பே னென்றார்
நந்தனர்-தில்லையிலேகலங்காமல்நாடுவே னென்றார்
வேதியர்-கொல்லையிலேவிலங்காகப்போடுவே னென்றார்
நந்தனர்-சிந்தைநொந்துதவிப்பேனே வென்றார்
வேதியர்-வந்துவந்துஅலம்பாதே யென்றார்
நந்தனர்-கொஞ்சினல்நெஞ்சமுருகாதோ வென்றார்
வேதியர்-அஞ்சினல்பஞ்சம்வருகாதோ வென்றார்
நந்தனர்-சிதம்பரம்போகஉத்தாரந்தாரு மென்றார்
வேதியர்-இதம்பெறலாமோகத்தாலேபோது மென்றார்
நந்தனர்-சீக்கிரமாய்ப்போறே னென்றார்
வேதியர்-போக்கிரியாய்ப்போவா யென்றார்
நந்தனர்-அன்னீதஞ்செய்யே னென்றார்
வேதியர்-சொன்னதுதவரே னென்றார்

நந்தனார்-எங்கள் ஜாதிக்குளென்னவழி யென்றார்
வேதியர்-உங்கள் ஜாதிக்குவழி யென்றார்
நந்தனார்-உற்றது இது வென்றார்
வேதியர்-பெற்றதுபோது மென்றார்
நந்தனார்-பறையனாய்ப்பிறந்தென் தலையெழுத்து வென்றார்
வேதியர்-பறையனாய்ப்பிறந்ததுங்கள்வருத்தமது வென்றார்
நந்தனார்-வாய்க்காதவெனக்குவழிசொல்லு வீரே
வேதியர்-காய்க்காதமரத்தில்கல்லெறி யாரே
நந்தனார்-எப்போதுமிப்படிசெய்வதே னென்றார்
வேதியர்-அப்போதுமிப்படிசெய்வதே னென்றார்
நந்தனார்-உலகமனைத்துங்கடவுளாய்நின்ற தேன்
வேதியர்-பலகலைகற்றும்பறையனாய்ப்பிறந்த தேன்
நந்தனார்-பழுதானஜென்மம்படைத்தேனே யென்றார்
வேதியர்-அழுதாலுங்கன்மமடுக்காதே யென்றார்
நந்தனார்-காப்பதுன்பாரங்கட்டுவிடு மென்றார்
வேதியர்-நாற்பதுவேலியைநட்டுவிடு மென்றார்
நந்தனார்-அப்பன்கருணை இப்படியே வென்றார்
வேதியர்-தப்பினேனதுமொப்பிலே வென்றார்

வசனம்.

அப்போதுநந்தனார் மெத்தவும்ஐயரைவணங்கி உத்தாரங்கேட்கிறார்

விருத்தம்.

அல்லெனங்குழலாள்மோகமாண்டதுவொருகான்றொண்டர்
பல்லூழிகாலஞ்செய்த பழவினைதொடக்கறுத்துச்
சொல்லினுமடங்கொணுதச் சுகக்கடலாட்டிவைக்குந்
தில்லைநாயகனைக்கண்டு தெரிசனஞ்செய்வேனென்றார்.

கீர்த்தனம்-இ-ம்-பியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

மார்கழிமாதம்திருவாதிரைநாள் வரப்போகுதையே
மனதைபுண்ணாகபண்ணமலொருதரம் போய்வாவென்றுசொல்லையே
கட்டையிருக்கையில்சிதம்பரம்போயி காணவேணுமையே
கசடனாகிலுமாசைவிளையுதுன் காலுக்குகும்பிடையே

காலில்நகமுளைத்தநாள்முதலாயுமக் கடுமைக்காரனையே
காலபாசத்தில்காட்டிக்கொடாமல் காப்பாற்றிடுமையே
உள்ளங்காலில்வெள்ளெலும்பாட வோடியுழைத்தேனையே
உண்டதுமுறங்கினதன்றியில்வேறே யொன்றுங்காணேனையே
எட்டுமிரண்டுமறியாதபேதை யெளியேனுனையே
இன்னந்தாய்வயிற்றிடையனுகாம லிடங்காட்டிடுமையே
வெள்ளைவெளுத்திடுந்தண்ணீர்குடித்திடும் வெறியேனுனையே
மேதினிநாயினுங்கடையேன் வழிவிடவேணுமையே
தானதவங்களொன்றுங்காணு தடியேனுனையே
தளரவிடவேண்டாமொருகோடி தருமமுண்டையே
அல்லும்பகலுங்களாதரவாலே ஆளாகினேனையே
அன்புடனேநல்லகதிபெறுவாயென் றனுப்புவேணுமையே

விருத்தம்.

சிலையணிந்திடும்வேளைதீர்த்திடச் செய்திருந்திடும்திருமேனியைக்
கலந்தணைந்திடவேண்டுங்காதலைக் கண்டிலராகியம்மதனைத்
தலைசுமந்திடுஞ்சேடனுர் தன்மைகொளும்நந்தனுரை
விலைக்குவாங்கியபெருமையாலிவன் வேணதெல்லாம்பேசுவான்.

வசனம்.

இப்படிச்சிதம்பரம்போக உத்தாரங்கேட்க நந்தனுருடைய சிவபத்திபரிதாபததை ஆதிசேடனுலுஞ் சொல்லவொண்ணுத மகிமைகொண்ட மகானுபாவனை தனக்கடிமைக்காரனென்று வேணபடி பேசுவார்.

கீர்த்தனம்-இ-ம்-முகாரி-ஆதிதாளம்.

மாடுதின்னும்புலையாவுனக்கு மார்கழிதிருநாளோ
தேடியெடுத்தாயாரிடத்தேபோய் தீண்டாதேபோடா
ஆடுதின்னும்புலையாவுனக்கு ஆனிதிருநாளோ
நாடுசிரிக்கும்வார்த்தைகளன்றோ நாடாதேபோடா
நண்டுக்குகல்யாணம் ஊளை நருக்குச்சங்கராந்தி
பண்டிக்குப்பூசைதிருநாளுண்டோ பறையாநீபோடா
பூசைகள்செய்வாயோ ஆண்டவன் பொன்னடிதொழுவாயோ
கூசல்போடாதேபோடா கூழைக்கும்பிடலாகாதோ
கங்கையிலாடுவையோ அங்கே காணிக்கைபோடுவையோ
இங்கிதமறிவேணடாவந்து இறையாதேபோடா
அஞ்செழுத்தோதுவையோ உனக்கு மானந்ததிருகூதடதோ
வஞ்சகவார்த்தைநாளைக்குத்தெரியும் வாராதேபோடா.

வசனம்.

அடாநந்தாசபாசு நன்றாயிருக்கின்றது நீசிதம்பரம் போகவேண்டுமென்றுகேட்பதை ஆலோசித்தால் மிகுந்த ஆச்சரியமாயிருக்கின்றதென்று வேதியர் பின்னுஞ் சொல்லுகிறார்.

தரு-இ-ம்-மோகனம்-ஆதிதாளம்

பல்லவி.

அடடாநந்தனே தில்லைக் கனுப்புமென்றெனைக்கேட்ப
தாச்சரியமிகவாச்சரியம்

அநுபல்லவி.

அடடாகட்டுக்கதைக ளனைத்துமிங்குதவாது
நடடாவயலைத்தேடி நடநடவிப்போது அட

சரணங்கள்.

ஈனசாதியிற்பிறந் தோனுனக்கவ்விடத்தி
லென்னஅலுவ லுண்டு-அல்லவென்று
போனபோதிலுமூவா யிரவரிருக்கும்வீதி
புகுந்துநீகடந்து கொண்டு
மானுமழுவுஞ்சிர. மாலையணிந்தவரு
மற்றவர்திரிபுர மானையெரித்தபெரு
மானுக்கியலுந்திரு மஞ்சனோற்சவர்திரு
வாதிரைப்பலன்பெற மாட்டாய்சொற்படியுரு-அட

வேள்விகளொருபுறம் வேதியர்களியற்றும்
மேன்மைகள்மிருத் தங்கம்-அந்தத்
தாழ்மையிலாத்திவ்யத் தலம்போய்வருவதற்கு
தடையில்லையென பொங்கும்
தன்மையிதெல்லாங்கன வாகமுடியவரும்
சாதியிழிவையோசித் தாலேதெரியவரும்
பன்னிப்பன்னிப்படித்தேன் பரவாமற்றேயேவரும்
பட்டால்தெரியும்பறையனுக் கென்பதுபோல்வரும்-அட

அல்லும்பகலும்சோ றளித்துக்காட்டிடுந்தெய்வ
மானவம்பல வாணன் இங்கிருக்க

தொல்லையும்படவேண்டா மென்றுரைத்திட்டவுன்
சொல்லைமறந்தநீ வீணன்
தில்லுந்திரியாவரம்பேச் சேதுக்காகபிடித்
திருக்குமெனதுபிடி திரும்பாதடாபகடி
பஞ்சைநீயா சமர்த்து
பார்ப்பே னெட்டாதடி-அட

வசனம்.

வேதியர் சொற்களைக்கேட்டநந்தனார்நீங்களென்னைத்தடியாலடித்தாலும் பிராணனைமடித்தாலும் கழுத்தையொடித்தாலும் சிதம்பரத்தில் நடித்தானைக் காணமலிருக்கேனென்று தடுத்துச்சொல்ல வேதியருக்குக் கோபம்பிறந்து சொல்லுவார்.

தரு-இ-ம்-சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

இனியுன்குற்றத்தைப் பொறுப்பேனோ
அணுவளவேனுஞ்சம்மதிப்பேனோ

அநுபல்லவி.

தனியாம்வேதசாஸ்திரந் தனையுணர்ந்தாலுஞ்சாதி
தன்புத்திபோகாதென்று சரித்திரம்பொய்யல்லநீதி-இனி

சரணங்கள்.

பலகாலமுப்பழமும் பாலூட்டினாலும்பாம்பு
பழகாததற்குவொப்பாய் பகரலாமோர்வேம்பு
தவம்விட்டப்புரம்போய்நீ தானசையாதடாவீம்பு
தரையிற்கறந்தபாலுந் தாவுமுலைக்காம்பு-இனி

இடையிலிருக்குமிந்த இடும்பன்கடம்பன்சரி
இவர்களல்லாமலிதோ இருப்போர்கள்சிறுநரி
நடையிலிருப்போன்மகா நல்லவனாருந்தெரி
நானுனைச்சேர்ப்பேனென்று நம்பாதேபரிகரி-இனி

என்றுசொல்லியவேதியர்க்குநந்தனார்மிகுந்ததாழ்மையோடுஞ் சொல்லவேதியர்க்குக் கோபம்வந்துதிருட்டுத்தனங்கொண்டமுரட்டுப்பயலேயென்று மறுபடியுஞ் சொல்லுகிறார்.

கீ-ம்-இ-ம்-தநாகரி-ஆதிதாளம்

பல்லவி.

திருட்டுத்தனமாத்திரம்வேண்டாம்நந்தா-அடாவுனக்கு
திருட்டுத்தனமாத்திரம்வேண்டாம்நந்தா

அநுபல்லவி.

முரட்டுதனமாபேசாதேகிர்மூடா
முன்னும்பின்னுமறியாக்குடிகேடா
வரட்டுதவளைபோல்வாயாடாதேயடா
வயலைமுழுதிலுஞ்சீர்படுத்திடபோடா-திருட்டு

சரணங்கள்.

பக்தியுள்ளவனைகப்பாருஏர்கொண்டுழுது
பஞ்சைநிலமுழுதுஞ்சீருசெய்துவிதைத்து
வைத்திடினம்போற்குடியாயிருப்பவர்களு
னைத்துதிப்பார்சகலபேரும்
சத்தியமாக்குண்டைகளைநீகூட்டி
சார்ந்ததற்குவாயாரநீர்ஒட்டி
சத்தியுள்ளமட்டுக்குமேரோட்டி
தக்கவன்திரமதுமிகக்காட்டி
மற்றதுமற்றதனைத்தத்துமுடிவர
மெத்தமெத்தசித்தமொத்துசெய்குவாய்-திரு
பட்டாங்குனக்கேதடாபாவியென்சொந்தமான
பழங்களுமீடேறத்தேவிபூசைபுரிந்து
பொட்டெனப்பதம்பணிந்துசேவியுதைமறந்தால்
போக்குவேனேயுன்னிடஆதி
சட்டமாகவுஞ்சமர்த்தைகாட்டாதே
சரணமென்றுகண்ணீரைவோட்டாதே
தட்டுவனேகைமிஞ்சிநீட்டாதே
சலசலப்புக்கஞ்சிநரியோடமாட்டாதே
விட்டுகெட்டுவிடுவிட்டுவிடுவிடு
கெட்டுகெட்டுகெட்டுப்போகாதே-திருட்

பாயுஞ்சலமுழுதும் கட்டிபதனமாகப்
பழையயெருவெடுத்துக் கொட்டிசேறுபோலாட்டி
தோயும்சடமுதலோ ரட்டிவராமற்செய்ய
சொன்னலனுப்புவேனே மட்டி
காயமுள்ள போதேநீகாணடா
கர்த்தன்றனைக் காணப்போவானடா
ஏய்த்துவிட்டுப் போகப்போராயடா
யொத்ததிருவா திரைக்கனுப்பேனடா
ராயன்ராயன்ராயன் ராயன்சாட்சியாய்
தீயன்தீயன்தீயன் தீயன்உனைவிடேன்-திரு

அறுசீரடி யாசிரிய விருத்தம்.

வானிருந்தவிடந்தேடிக்காணுமல் மாதவத்தோர்மதிமயங்கத்
தேனிருந்தசெந்நாளைச்சிந்திப்பார் புந்தியுறத்தெளிந்தாரில்லை
ஊனருந்தும்புலையாநீசிதம்பரத்தே சென்றுனுமுளதோமுத்தி
தானிருந்தவிடம்விட்டுப்போகாமல் சஞ்சலத்தைதள்ளுவாயே.

வசனம்.

அடாவாடாமூடாகேளா என்னைப்போலொத்தபெரியவர்களா லேகூடத்தேடி அறியப்படாத ஜெகதீசனுடைய திவ்வியநாமத்தை நத்தையுரிஞ்சும் பறையாநீ கத்திக்குலைக்கலாமா இப்படித்தத்திக்கு திக்கலாமா வித்தையொன்று மறியாதவ னிங்கே கத்தியெண்ணலா மாநத்திமுத்தி தேடலாமாசுத்தமான பெரியோர்களிடத்தேசத்தம் போடலாமா இங்கேநித்தம் நாடலாமா வியர்த்தமான இந்த சென்ம மெடுத்துதேடலாமா அங்கே புத்திசெல்லலாமா அடா இதுவெல்லா ம்விட்டுவிடடாநாத்தைபிடுங்கிநடடாஉன்தொழிலைத்தொடடாதோ ல்கட்டிய தடியையெடடா யாருந்திருடாமல்பாரடாகளத்தில்படுடா காவல்கொடடா புல்லறுடாமுரடா வழிதெரியாக்குருடா நான்சொ ல்வதுகேளடா இதுடா உன்செய்கையென்று கல்லாலெறிந்து தடி யாலடித்துவாயால்திட்டி தேள்போலேகொட்டி இவனொருஆள்போ லேநின்றுன்அவர் நாள்போகுதேயென்றார்.

நந்தனர் வேதியரைப் பார்த்து சொல்லுகிறார் நீங்களென்னைய டிக்கலாமா நானும் அடிபடலாம் தங்களுக்கு கைநோகும் என்று சொல்லுவார்.

கீ-ம்-இ-ம்-தண்டகம்-ஆதிதாளம்.

பல்லவி.

அடித்ததுபோதுமையே என்னை அடித்ததுபோதுமையே

சரணங்கள்.

அடித்தாலுங்கள்கைவலி யாதோ
அடிமைவேலைசெய்யுமென்னுடன் வாதோ
படித்ததெல்லாமென்மனதிற் படாதோ
பாவியெனக்குயினிமேற்றெரி யாதோ-அடி

நல்லவரேயுங்கள்மனதுபிர காரம்
நடக்காமலிருந்ததுமப சாரம்
சொல்லத்தெரியுமோயுனக்குப காரம்
சுகிர்தசாதியுங்களாலேயிந் நேரம்-அடி

வசனம்.

ஐயரைத்தலைவணங்கிச்சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-மோகனம்-ரூபகதாளம்.

இலவுகாத்தகிள்ளை யாச்சே-நான்
எடுத்துச்சொன்னதெல்லாம் போச்சே
பறையன்சொல்பழு தாச்சே-நீங்கள்
பார்ப்பாரென்பதுமே லாச்சே
ஏழைச்சொல்லம்பல மாச்சே-தெய்வ
மில்லாமலெங்கையோ போச்சே
சேரியேசொர்க்கமென் றாச்சே-தில்லைச்
சிதம்பரமென்பது போச்சே
விழலுக்கிறைத்தாற்போ லாச்சே-எந்தன்
வேண்டுதல்வீணாகிப் போச்சே

வசனம்.

பெரியோர்கள்கோபத்தைஎளியேன் தாங்கேனென்றுசொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-லாவணி-ஆதிதாளம்.

பெரியோர்சினமடையாரடைந்தார் பெருங்கடல்தீயாதோ
பேயேன் தாங்குவேனோஇம் மாத்திரம்பொறுத்தாலேயே

அல்லும்பகலும்நானறிந்துமேதோ வறியாமல்போனேன்
ஆசைகொண்டேன் திருவம்பலத்தெய்வம் மோசஞ்செய்யுதையா
பாவியெனைதொடர்ந்தடித்தாலுமென் பாழ்வினைதீராதோ
பார்தனில்பேர்சொல்லாதவனன்றே படைத்ததுபோதாதோ
சிங்கம்பொசித்திடுமிறைச்சியைவேறொரு செந்நாதொடலாமோ
சிதம்பரம்நான்தொடலாமோசாதியில் சின்னவனானன்றோ
இன்னமுஞ்சிதம்பரம்போவேனென்று இங்கனவேவருவேனோ
இம்மட்டும்போதுமையேஉங்கள்தய விருந்தாலதுபோதும்

இவை-ஐஞ்சீரடியாகவந்த-விருத்தம்.

சேதிவந்தவர் வேதியன்சினத்தால்
காருகளாந்திடுஞ்சோலைநின்றவன்கருத்தை
ஏருலாவியபரமனற்றுன்மலரிறுக்கி
தீரனாகியநந்தனுமிப்படிச்செய்தான்.

வசனம்.

தங்களையருக்குத்தலைவணங்கி பெரியகும்பிடுபோட்டு ஒருசோலையிலிருந்து சமாதிபண்ணி தன்னுடையசரீரத்தை தில்லை வெளியிலேகலந்துகொள்வேனென்று வீரவைராக்கியப்பட்டத்துடனே சேரியில்வராமல்தானேயிருந்தார் தன்னுடையதுயர்களையெல்லாம்அம்பலவாணருக்கேஓப்பிவித்து சங்கைக்கொண்டாடுவார்.

விருத்தம்.

வேதியரிப்படிசொல்லவெந்துமனம்வேருகிவினையோவென்று
சாதியிலேபாவமதுநீசனன்றேபிறப்பித்தாய்சுவாமிஎன்னை
சோதனையேசெய்கின்றாஎவ்வுயிர்க்குமவ்வுயிராய்த்தோய்ந்திருக்கும்
ஆதிகுருவல்லவோநீபார்ப்பானுக்குள்ளிருந்துமனுப்புவீரே.

கீ-ம்-இ.ம்-சௌராஷ்டகம்-ஆதிதாளம்.

ஐயாவுன்னடைக்கலம்பொய்யாகியதேகமடைக்கலம்-ஐயா-ஐயா
அத்தாநான்வருவேனோ அம்பலத்தைப்பெருவேனோ
சற்றேயாகிலுங்காண்பேனோ சந்நிதிகாணுதென்னசெய்வேன்

விருத்தம்.

தாறில்லாதவிப்பிறவியைத்தானெடுத்தஞ்சி
தூறுபட்டனர்கீழ்குலமாகியித்துன்பம்
நீறுபட்டிடுமல்லவோதில்லையினின்றுடல்
பேறுபெற்றிடுவேனதற்குமொருபிசகோ.

கீர்த்தனம்-இ-ம்-எதுகுலகாம்போதி-திரிபுடைதாளம்.

பல்லவி.

ஐயோதெய்வமேயிந்த வையர்க்கடிமையானேன்
செய்யாவினைசெய்தல்லவோ
உள்ளங்கரைந்துருகி உய்யும்படியாய்கேட்கில்
கள்ளக்குமரனல்லவோ
ஆலைக்கரும்புபோலாச்சுதங்கமுழுதும்
வேலைக்கிடயில்லையே
கோவில்கும்பத்தைக்கண்டால்கோடிவினைகள்தீரும்
பாவிக்குக்கிடையாதுகாண்
தில்லையம்பலவாணதெய்வம்புலையர்க்காக
கல்லாச்சமயுலாச்சுதோ
பொன்னம்பலவாயுன்னைப்போற்றவகையில்லாமல்
இன்னம்பிறவியேறுமோ
அன்னைதந்தையும்நீயென்னாவிபொருளும்நீ
உன்சன்னதிவரச்செய்வாயே.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அடிமுடியொன்றுமில்லாதம்பலத்தரசேயுன்பால்
கொடியனுன்வந்தாலென்ன குறையுமோவதனால்நீதி
நடலைசெய்பார்ப்பான்கையில் நடுங்கவோவிதித்தாயென்றும்
படிமிசைவீழ்ந்தானடிப் பதறுவான்கதறுவானே.

கீர்த்தனம்-இ-ம்-லாவணி-யமுனாகல்யாணி.

பல்லவி.

செய்யுமுபாயமறியேனறியேன்
அரகரசிவனேதில்லைச்சிவனே

பத்துவருடகாலமாகவந்து பார்ப்பானைக்கேட்டேன்
சித்தமிறங்கிபோய்வாவென்றொருநல்லசேதிசொல்லக்காணேனையே
பாவிபுலையனாய்ப்பிறப்பேனோ இந்தபாரினிலிருப்பேனோ
ஆவிதவிக்குதேபொன்னம்பலவாவுன்னடிக்கமலங்காணேனையா செ
பல்லுமுளைத்தநாள்முதலாக இந்தப்பாடுபடுவேனோ
தில்லைநாயகாகனகர்வென்றுன்னைத் தேடும்வகைகாணேனையோ செ
நாற்பதுவேலிநிலமிருக்கிறதை நடுகவேணுமென்றார்
கார்ப்பதாருகளைபிடுங்குவதாரென்றுகடுத்தாப்பேச்சுக்கடியேன்செ
ஆற்றிலேகுளத்திலேவிழுவேனென்றுவதைப்பிடித்திழுத்திடுவேன்
பார்ப்பான் கிருபைசெய்யாவிடிற் பறையன் பாபமாவீண்போகாது
[சொன்னேன்-செய்
தில்லைசிதம்பரத்தைக்காணவிடிலென்தேகந்தெளியாது
சொல்லிவிட்டேன்பொன்னம்பலவா வுன்சொர்ன சபைக்குவருவே
(னோநான்-செய்

விருத்தம்.

கடுகிருநதியும்பணிகலனாகவுங்கற்றைச்
சடிலமேவியுனற்றரிக்கவுந்தருமோ
விடுவதில்லையுனருகினிற்றொருவேங்கைக்
கொடியன்வந்ததிலெனன்னதில்லையிற்குறையோ.

இதுவுமது-விருத்தம்.

மாவளர்தில்லைமாநகர்வீதியும்மதிலும்
கோயிலுந்திருக்கூட்டமுங்கண்டுகண்குளிரப்
பாவியாகினேன்காயத்தை யேதுக்குப்படைத்தே
னாவிதானிருந்தும்பரகதியடைந்திலனே
ஆதிநாள்முதற்றவம்பெருமாமுனிக்காக
தாதமோங்கவேநாடகம்புரிந்திடுநாதன்
பாதம்போற்றியென்னேரமும்பரவியானந்தன்
ஏகந்திரவேசனவிலுமீசனுமிருந்தார்

வசனம்.

வரும்தில்லைதலத்தைக்காணாத ஜென்மமிருந்தாலென்னபோனாலென்னவென்று நிச்சயம்பண்ணி மனதுருகி வாடும்வேளையில்கொஞ்சம்நித்திரைபோலே அந்தநித்திரையில் அம்பலத்தேவன்வந்து சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

கனவினில்கண்டாரேநந்தனார் கனவினில்கண்டாரே

அநுபல்லவி.

மனதிலெப்போதும்    வருந்தியடிபணியும்
கனகசபேசனைக்    கண்ணினாற்காணாமல்-கன

சரணங்கள்.

நீநடுங்கழனிகள்    நாநடச்சொன்னேன்
ஊனமில்லாமலுன்    னுடையவன்களிக்க
மானிடப்பிறவியி    லுனக்கிணையார்பத்தி
மானில்லையெனத்தில்லை    நாதனும்வந்துரைக்க-கண்

கங்குல்பகலாய்க்    களித்தநின்னருளாற்
சங்கரனேயென்று    சாருநன்னிலையால்
அங்கம்புளகித    மாச்சுது அதனா
லிங்கேவந்தேனென்று    ஈசனும்புகல-கன

விருத்தம்.

அறிவுமிகுந்தாற்றலுடன்சிவபெருமான் பெயர்சொல்லியாற்றுநாளி கருமருவுமிடறழகன் றனதடிமைவெறியக் கனவில்வந்துகுறையறவே, கழனிகளைநடச்சொன்னோமுனக்குவிடைகொடுத்தேனென்ன மறையோதுவற்குரைத்து நீவிரைந்துவாவென்றுமனதுட்சென்றார்.

நந்தனார்கனவில் நடேசமூர்த்தி சொன்னவசனம்.

நம்முடையநந்தனாரே உன்னிடகழனிகளை நமது பூதகணங்களாலே நடச்சொன்னோம் வேதியருக்குகாட்டினால் உத்தாரங்கொடுப்பானென்றுசொல்லித் தானம்பலத்தேசென்றார்.

கண்ணிகள்.

களையெடாமல்சலம்விடாமல்    கதிரொருமுழங்காணுமாம்
களிக்குதுபயிரிருக்குது அதைக்    கட்டுகட்டவேதோணுமாம்;

பழுதிலாமலேரிகுளங்கள் பள்ளமேடுதண்ணியாம்
பரமசிவனைப்பணியும்நந்தனூர் பயிரிடுந்திருப்பண்ணையாம்
கனவினில்வந்துருவமாகி கருணைமாரிகண்டனன்
கடுகிநடந்துவேதியரிடம் காணவென்றுசென்றனன்

விருத்தம்.

ஐயரேவாருமென்று அழைத்திடும்நந்தனூரைத்
துய்யவேதியருங்கண்டு தொல்புவிதெய்வமெல்லாம்
பொய்யிதுவென்றுதள்ளிப் புலையனும்வந்தானென்று
செய்யவேண்டியதுசெய்யச் செப்புவாரொப்புவானே.

பலவித-இராகஞ்சேர்ந்த-கீர்த்தனம்-இ-ம-வராளி-ஆதிதாளம்

பல்லவி

வேதியர்சொல்லுதல்.

நந்தா உனக்கென்னமதி வந்ததென்ன தந்ததாரு-நந்தா
அந்தரங்கஞ்சொந்தமா யிருந்ததுமறந்துபோச
விந்தையாய்நினைத்தன்றோ அந்தவேளைபுத்தியில்லை-நந்தா

தோடி.

கொல்லைக்காட்டுநரிபோலே பல்லைக்காட்டிபேசுவாய்
கல்லைக்காட்டிகோபங்கொண்டு சொல்லைக்காட்டியேசுவேன்
தில்லையென்றுசொன்னதெல்லா மில்லையென்றுபோச்சுதா
கல்லையென்றுஐயர்சொன்ன சொல்லுநிசமாச்சுதா
சித்தமுந்தெளிந்துதா வுற்றதுவுணர்ந்துதா
பத்தியுந்துலேந்துதா கத்தனும்பறந்துதா
சட்டம்சட்டம்நல்லதுநல்லது மெத்தமெத்தசந்தோஷம்-நந்தா

மத்தியமாவதி.

இப்படிஇப்படிசொல்லாதே தப்பெடுத்தடிப்பையா
சொற்படியொப்புதலாகநீ மெப்படிநடப்பையா
கள்ளக்கும்பிடுதள்ளடா காரியங்கைக்கொள்ளடா
எள்ளுகொல்லையைக்காரடா எங்குஞ்சுற்றிப்பாரடா
தெய்வமென்பதுகுற்றம் தெளிந்துபாருசுத்தம்
கையைக்கொட்டுசத்தம் கண்டுகொள்ளுநித்தம்

ஊணுறக்கமேயின்பம் ஊணிழந்தாலேதுன்பம்
சாண்வயிறுக்குஅம்பு சாதிமுறைமைவம்பு
ஓகோபலேபலே சபாசுகண்டுகொண்டாய்-நந்

கேதாரகௌளம்.

சூதாடிதோற்றவன்போல் வாதாடிநிற்பவர்க்கு
வேதாந்தசாஸ்திரங்கள் காதாலேகேட்டிருந்து
என்னகாரியம்அதில்என்னவீரியம் தள்ளுதள்ளு-நந்

புன்னாகவராளி.

தில்லையென்பதுகாட்டிலுண்டு கேட்டதில்லையா
தேகம்பட்டால்புண்ணாகும் பார்த்ததில்லையா
அம்பலமாவதுஆகாச முற்றப்பாரு
அருளில்லைபொருளில்லை கண்டுசேரு-நந்
பத்தியென்றுஞ்சித்தியென்றும்வற்றியென்றுமுத்தியென்றும்
இத்தனைநாள்சற்றசலை அத்தனையும்பித்தமாச்சு
மாறுபட்டுக்காரன்வார்த்தை கூறுபடுமோ
தாறுமாறுபேசினதால் சோறுபோடுமோ-நந்

நாதநாமக்கிரியை.

எல்லாமுழுபுரட்டு வல்லான்வகுத்தவழி
சொல்லாதேசும்மா நில்லாதே
காரியத்தைப்பாரடா உனக்கிணையாரடா
காசுபணஞ்சேரடா இதுநல்லூரடா
கஞ்சிகூழ்குடித்தாலும் பஞ்சமில்லையே
கொஞ்சமிருந்தாலும்போதும் சஞ்சலமென்ன-நந்

மத்தியமாவதி.

சம்பாநெல்கிடக்குனக்குத்தாரேன் ஒற்றைச்
சல்லாகிழித்துனக்குத்தாரேன் ஒற்றைக்
கண்டாங்கிச்சேலையொன்று துண்டாகிடக்குதுந்தன்
பெண்டாட்டிக்குக்கொடுத்து நன்றாய்சுகமாயிரு-நந்

புன்னாகவராளி.

துண்டிவெட்டிபாக்குதின்றுதண்டைவெட்டிபார்த்தையா
நண்டானடிக்கட்டளையில் முண்டிருக்குபேர்த்தையா-நந்

மோகனம்

தாரணியில்லாதவனொரு மாணியில்லாதவன்போலே
தோணினுந்தோணாது கோணிநடந்தாலுமென்ன

பெண்டாட்டியில்லாச் சுகமல்லவோமனக்
கொண்டாட்டங்கொள்ளா ததைச்சொல்லவோ-நங்

ஆரபி.

ஏருவிட்டுழுதவயல் மாறவிட்டுதேவையில்லை
ஏதுவெட்டினுலுந்தாங்குந் தூருவிட்டுப்பார்க்கவேணுந்துரையே
நிலம்பாராதபேர்கட்குப் புரையே யிதுவல்லாமல்
வேறேயுண்டோயிறையேயிந்தவூருக்கிது நல்லவிரையே-நங்

அசாவேரி.

மூலைக்கால்விளைந்ததானல் சேலைக்குக்காணும்
உனதுகூலிக்குக்காணும் குழந்தைபாலுக்குக்காணும்
ஊருக்குளிந்தநிலஞ்சப்பையேநீ வாரிவிடவேணும்-நங்

சாவேரி.

வாரிருகாலைசுற்றிப்பாரு கோரையைபிடுங்கிநம
தேரியையுழுகச்சொல்லும் வீரியைநடுசச்சொல்லு
செட்டியார்குளத்தருகே முட்டிருக்கப்பேர்த்தையா
வெட்டியானகத்தருகே திட்டிருக்கப்பார்த்தையா-நங்

புன்னுகவராளி.

எல்லாமுனதுபொருப் பெல்லாமுனதுதுக்க
மல்லாமல்வேறேசதியில்லை இல்லைஇல்லை
கட்டியடிக்கொல்லையில் யிட்டதுமுளைத்துதா
பொட்டத்திலேகுட்டையிலே நட்டதுபலித்துதா
காடுவெட்டிநஞ்சைபண்ணு மாடுகட்டிவைச்கோல்போடு
யெடுப்பட்டுழைத்தாலன்றோ வீடுகட்டிவாழலாம்-நங்

வசனம்.

இப்படிச்சொல்லும்வேதியரை பண்ணையைப்பார்க்கவாருமென்றுநந்தனர் கூப்பிடுவார்,

விருத்தம்.

பண்ணையாளையும்பாருமென்றழைத்திடப்பரிந்து
கண்ணுவாவேதியன்களிப்புறத்தன்னுள்
பண்ணுலாவும்பொன்னம்பலக்கூத்தனைப்பரவி
எண்ணிலாவரும்காதல்கொண்டிருந்தனர் தாமே.

வ-ம். கேவலமாகிய நீசன் சிவகணங்களாலே ஒருராத்திரியில் நடவு நட்டு அறுப்பருக்கும்வயலை வேதியர்கண்டுஎன்றுந்தோற்றுமல்உலகவாசனை யற்றுநின்றார்.

வசனம்.

நந்தனார் அம்பலவாணனைக் கொண்டாடிக்கூத்தாடுவார்.

கீர்த்தனம்-கடுக்கா.

நந்தனானந்தபரிதமானான் நந்தனாரும்ஆனந்தமாகினார்
சொந்தமானவயல்வந்துபார்க்கையில்
விந்தையாச்சுது பலபலபந்தம்போச்சுது
சிந்தைதீரவேயந்தரங்கத்தின் நந்த

நீச்சச்சாதியென்றுபேச்சிப்பேசுமிந்த
தோசிவேதியனுமாசையாகவே
தேசமென்றுந்தில்லைவாசமாகூட
ராசமூர்த்திக்குதாசனென்றுவரும் நந்த

வாரும்வாருமிதைப்பாரும்பாருஞ்சிவ
னாரேவந்துசெயுங்காரியங்களிது
பாரிதின்மீதிலினியாருமில்லையென
ஊரிலுள்ளபெரியோருஞ்சொல்லச்சொல்ல நந்த

சித்தமீதிலொருகுற்றமேதுமில்லை
சுத்தமானவிதயத்திலுள்ளசிவ
பத்திபண்ணிவெகுசித்தியாகிவர
முத்திதேடிவருபத்தனென்றுமகிழ் நந்த

வசனம்.

நந்தனாரைப்பார்த்து சிவபத்தர் அபசாரம் பண்ணினேனென்றுமிகவும் குழைந்துச்சொல்லுவார்.

தரு-இ-ம்-பியாகடை-அடதாளசாப்பு.

பல்லவி.

நந்தனாரேயுன்றன் பெருமையின்றுகண்டேன்
நானென்வினையை விண்டேன்

அநுபல்லவி.

விந்தையைக்குறியாமல் விமலனாரறியாமல்
வீம்புக்குக்கச்சுகட்டி வீசினேனென்னையாளும்-நந்த

சரணங்கள்.

அறியாமனத்தினாலேதோபசி யான
அருமையைத்தெரியாமற்போனேனே மெத்த
மிக

சிறியோர்செய்தபிழைபெரியோர்பொறுப்பனென்று
செப்பும்வார்த்தையுமக்கேகனவானே இந்த
முறையுணர்ந்தோர்க்குளன்னதான்சொல்லத் தோணும்
மூடன்மேற்கிருபைவைத்துமுழுதுங்காத்திட வேணும்
நிறைவுற்றவருட்பெற்றோர்க்கேதுநிகராக காணும்
நினைக்குமுன்னடிவணங்காதேவந்துயர் வேணும்-நந்த

நேற்றுப்பொழுதளவுஞ்சும்மாவிருந்த திந்த
நிலங்கள்முற்றும்பயிர்கள்முளைத்துக் கதிக்கச்
சாற்றுங்கதிர்கள்முற்றிச்சாய்ந்து அறிவடைக்குத்
தக்கதாவிருக்குதேமிகக்கிளைத்து உமது
ஆத்தல்தனக்குநிகராவரோ யாவரும்
அய்யாவுனதுநல்லருளால்நலமே வரும்
நாற்றிசையோர்களும்நாட்டிப்பணிய வரும்
நாயேன்களிக்கமனம்நைந்துகிருபை தரும்-நந்த

குண்டைகளுங்கலப்பைக்கோலுங்காறும் விதையும்
கொட்டத்திலிருக்கநீர்செய்தீரோ அந்த
அண்டர்பணியுந்தில்லையாண்டவனே யுமக்கு
வடிமையாளாகிவந்துசெய் தாரோ
உண்டத்தைதாவென்றெண்டுக்கும்மைக் கொண்டேன்
தொல்லுலகத்துள்ளோர்யாருமெய்க்கக் கண்டேன்-நந்த

வசனம்.

என்றுவேதியர்சொல்லிப் பின்னுஞ்சொல்லுவார்.

இதுவும்-வேதியர்சொல்-விருத்தம்.

கறைபடுங்கண்டன்றாளைக் கருத்தினிற்பெறவேநோக்கி
குறையரும்நந்தனுருக் குலமதுகிழென்றெண்ணி
மறைபுகல்பெருமையாலே வருத்தினேன்கொடியனென்று
இறைபடுவேளம்போலஞ்சி யேங்கியேயாற்றுவானே.

கீர்த்தனம்-ம்-புன்னுகராவளி-ரூபகதாளம்.

குற்றமெத்தனைசெய்தபோதிலுமுந்தன் சித்தத்தில்நினையாதேசிவ
பத்தனென்றறியாமல்பதறிவார்த்தைகள்சொன்னபாவந்துலையாதே

புலையர்கள்பரகதிதேடிடும்படியவர்புண்ணியஞ் செய்வாரேஉன்னை
கலிதீரக்கண்ணாற்கண்டபேர்களெல்லாங் காட்சிபெருவாரே
ஒருவன்மனதறியவொருவனலாகாதென்றுலக மொழியாரோஅது
திறமாச்சுதினியுந்தன்சென்மசபலமாச்சு தெய்வமுமிறங்காதோ
ஜாதியிருகுலஞ்சாத்திரங்கிடையாதுசந்தேகப்படலானேன் இப்போ
ஆதிசிதம்பரரகசியம்பாரென்று அனுப்பிடலானேன்

வசனம்.

இப்படி மிகவும்வணங்கி வரலாற்றைக்கேட்க நாளைப்போவார் கனவிலே ஈசன்வந்து கருணைசெய்தாரென்றார் அதற்குநாளைப்போவாரைப்பார்த்து வேதியர்சொல்லுகிறார்.

கீர்த்தனம்-இ-ம்-யமுனகல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

நந்தாவுன்கனவினிலெப்படிவந்தார்
வரந்தந்தாரென்றார் நந்தா
சந்ததமுஞ்சனகாதிமுனிவர்தொழும்
சச்சிதானந்தமூர்த்தியல்லவோ நந்தா
ஆதிமுடிவுகிடையாதபராபரஞ்
சோதியல்லவோநீச்சசாதியென்றறிந்தும் நந்தா
அண்டரண்டநிறைகின்றசபாபதிக்
கொன்றுபேதமில்லையென்று நந்தா

வசனம்.

வேதியர்செய்த பிழையெல்லாம் பொறுத்துக் கொள்ளுவீரென்றுசொல்லியநந்தனார் மறுவுத்தரவுகூறுதல்.

கீர்த்தனம்-இ-ம்-தெண்டகம்-எதுகுலகாம்போதி.

வேதியர்-ஏழைப்பார்ப்பான்செய்திடும்பிழை
யேய்த்துக்கொள்ளாதே
இனமறியாதவன்முன்புத்திக்காரனென்பதுவும்பொய்யோ
நந்தனார்-பொய்யாகியவிந்தவுலகத்தைப்பார்க்கும்
புண்ணியவானே
புலையனுக்காளடிமையல்லவே புத்திசொல்லுமையே

வேதியர்-புத்தியுண்டுவித்தையுண்டு
பத்திகிடையாது வரலால்
புலம்பினதாலென்னமனமடங்காதுபோலக்கிடையாது
நந்தனர்-கிடைக்குஞ்சிதம்பரதெரிசனமென்று
கிருபைசெய்யு மையே
கீழ்குலமல்லவோநாயினுங்கடையேன் கீர்த்திபெறுவீரே

வசனம்.

பரமபக்தனுகியநீயேஎனக்குஅடிமைவேலை செய்பவன்போலவந்தபடியினுலே உன்பிறப்பினிதுலேந்துதென்று சொல்லுவார்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்.

அவப்பொழுதுபோனதன்றிமறைமுடிவையுளங்கனிய
யறிவிலுன்னித்
தவப்பொழுதுங்கணப்பொழுதுங் கண்டறியாப்பாவியெனேச்
சார்ந்தாரன்றோ
சிவக்கொழுந்தினடிமையென்று பெயரிட்டுவேலைகளைச்
செய்ததாக
பவக்கடலைக்குளப்படிபோல் தாண்டிவரச்செய்ததுந்தன்
பத்திதானே.

கீர்த்தனம்-இ-ம்-ஆனந்தக்களிப்பு.

நந்தாநீசிவ பக்தன் உன்னை
நம்பாமலேமோசமானேனுன் பித்தன்
பூமிக்குள்நீயொரு சித்தன் இந்தப்
பூமிக்குநானொருசாஸ்திரப்பிர சித்தன்
காமிக்குள்ளேவெகு மத்தன் உன்னை
கண்டுதெரிசித்தபேர்களே முத்தன்-நந்தா
படித்துமென்னவேதங்கள் வேதம் அதில்
பார்த்ததில்லையிந்தபகவற் கிதம்
எடுத்துச்சொன்னய்சிவ போதம் அது
ஏற்காமல்போச்சுது என்பிடிவாதம்-நந்தா
தெவிட்டாதசோகம் பாணி உந்தன்
தேகமுழுதிலுஞ்சிவன்றிரு மேனி

பகையாகிலொரு கூனிபோலே
பழித்தேனானாலும்நீயாத்தும ஞானி-நந்தா
பவசாகரந்தாண்டிச் சென்றாயேஉள்ளே
பார்த்துணர்ந்துபர மானந்தங்கொண்டாய்
தவமானிபோலே நின்றாய்தில்லை
தாண்டவராயனைக்காணுமல்நீ கண்டாய்! நந்தா

வசனம்.

இப்படிவேதியர்சொல்லும்போது நந்தனார் மனம்நொந்துகை கால்நடுங்கி ஐயரைச்சுற்றிவந்துவணங்கி எனக்கு அன்னங்கொடுத்து ஆடையளித்து இத்தனைநாளுங் காப்பாற்றின பெரியவரே உங்களுக் கடிமைவேலைசெய்யுமென்னை இப்படி பெருமையாய்ச் சொல்லவேண்டாமென்று சொல்லுவார்.

தரு-இ-ம்-கல்யாணி-ரூபகதாளம்.

பல்லவி.

ஐயாசொல்லு வேனேஉம
தடிமைப்பறையன் தானே

சரணங்கள்.

வேம்புக்குயர்ந்தமதுரங்கள் பூட்டினும்
வீறுமதன்குணம்மாறுமென் னூட்டினும்
ஐயனருணையல்லாமலும் வேறுண்டோஐயா
மேவுங்கீரைத்தண்டுமேருவைத் தாங்குமோ
வீசுங்கதிரின்முன்மின்னும்பூச்சி யோங்குமோ
ஆவதழிவதெல்லாமையன் றன்னாலே
ஆச்சுதென்றாலாச்சுது என்னாலேஐயா
முன்னமேசெய்தவினையின் வசத்தாலே
மூடப்புலையனாலமேவி யதனாலே
இன்னம்படுவதுன்னினமும் ஏண்டா
ஏந்திக்கொள்ளுமென்றெனைக்கெடுக்க வேண்டாம்ஐயா

வசனம்.

நந்தனார் தனது ஆண்டையாகிய வேதியரைப் பார்த்து தங்களுடைய குருவாக்கினால் என்னையுமிப்படிப் புகழலாமாவென்றுமிக வும்வணக்கமாய்ச் சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-அமிர்தகல்யாணி.

பல்லவி.

சின்னசாதியல்லோ சிதம்பரம்போய்வருகிறேன்நான் சின்
அன்னைதந்தைபொருவரில்லைஅடைக்கலமென்னையாளவேணும்சின்
ஈரமில்லாநெஞ்சமாகி யிறைச்சிதின்றவுடல்பெருத்த
அல்லும்பகலுமதுவையுண்டு அறிவுமயங்கியாட்டங்களும் சின்

வசனம்.

இப்படிச்சொல்லியநந்தனரைப்பார்த்து வேதியர்சொல்லுவார்

கீர்த்தனம்-இ-ம்-பைரவி-திரிபுடைதாளம்.

பல்லவி.

ஆருக்குப்பொன்னம்பலங்கிருபையிருக்குதோ
அவனேபெரியவனும்

அநுபல்லவி.

பாருக்குள்வீடுகள் மாடுகள் ஆடுகள் ஆரு

சரணங்கள்.

வேதபுராணங்களோதினுலென்ன
வேலைசூழ்பழனிமாதராலென்னகாரியம்
சாதனையாகவராதொருநாளும்
மண்ணுசைபெண்ணுசைபொல்லாது
பாணன்மதங்களடங்கவேசெய்தகோ
பாலகிருஷ்ணன்தினந்தொழுமங்கல
வாணனென்றுதரவாய்விருபாதன்
வானவராகிலுந்தானவன்சின்னவன் ஆரு

வசனம்.

பொன்னம்பலஞ்சிவபத்தியுள்ளவன் பெரியசாதி சிவபக்தியில்லாதவன் பார்ப்பானுயிருந்தாலுஞ்சின்னசாதியானபடியினுலேதிருப்புன்கூரிலுனக்காகப் பரமசிவன்சந்நிதியைவிலக்கி தெரிசனங்கொடுத்துக்குளம்வெட்டினதும் ஒருராத்திரிகாலத்திலேநாற்பதுவேலிநிலமும்நடராஜமூர்த்தியேவந்து நடவுநட்டதும்பார்க்கும்போதுநீரேமகாபுண்ணியபுருஷனென்று சொல்லவேணுமேயல்லாமல் வேறில்லை நீயிதுவரைக்கும் எனதுவார்த்தையைத் தள்ளினதுமில்லை ஆகையாலெனக்குகுருவாகிநின்றுபதேசம்பண்ணென்று பின்னுஞ்சொல்லுவார்.

கீ-ம்-இ-ம்-தண்டகம்-ஆதிதாளம்.

பல்லவி.

ந்தாநீகுருவுபதேசம்நவிலிடவேணும் நான்கடைத்தேறநீ
நாந்தால்நான்கதிபெறமாட்டேன்
ாயெனும்பிறவிக்கடலிடைவீழ்வேன்
தாரம்பூவெடுத்தரனர்மலரடிசாற்றிவாழவென்னறிவு
தாமல்வரந்தரவேணும்சிதம்பரரகசியந்தெரிசித்திடவே
பத்தாகருணைக்கடனுன்மனதிற்சென்றுநீநிர்த்தனம்புரிந்து
ந்தாசைபூதகணங்களுரிமையுடன்வந்தூழியஞ்செய்ய
ற்றுநீபெரியவனுந்தன்பெருமையைநானறிவேனேமூடன்
தாமல்மோசமானேநம்பிக்கைசொன்னேனற்கதிபெறவே நந்தா

கலிவிருத்தம்.

வேதமோடறஞ்செய்திடு நூற்களைவிதித்தும்
ஆதனுதிஎன்னடியவர்க் கடுஞ்சினமடைய
பாதகம்புரிந்தேனென் றுந்தனைப்பரவி
ஏதந்தீரவேதியர்ருபசரித்திருந்தார்.

வசனம்.

இப்படிச்சொல்லிய வேதியர்வார்த்தையைத் தள்ளப்படாமை
ல் சுற்றிவந்து தலைவணங்கி ஒருமூலையைநோக்கிச் சொல்லுகிறுப்
ால்சொல்லுகிறுன்.

கீர்த்தனம்-இ-ம்-புன்னுகவராளி-ஆதிதாளம்

பல்லவி.

ஐயேமெத்தக்கடினம் உனக்கடிமை ஐயேமெத்தக்கடினம்
பொய்யாதபொன்னம்பலத் தையாயிருக்குமிடம்
நையாதமனிதற்கு உய்யாதுகண்டுகொள்ளும் ஐயே

சரணங்கள்.

சியாலேமூலக்கனல் வீசியேசுழன்றுவர
சைபண்ணிப்பணிந்திடும் மாசறக்குண்டலியைவிட்
ட்டுமே மனமூட்டுமே மேலோட்டுமே வழிகாட்டுமே யிந்த
னுபிமானம்விட்டுத் தானுகிநின்றவர்க்குச்
னுதிபதிபோல ஞானுதிபதியுண்டு
ருமே கட்டிக்காருமே உள்ளேசேருமேஅதுபோதுமே அங்கே
கையறவேநின்று பொங்கிவரும்பாலுண்டு

அங்கமிளப்பாறிகொண்டு தங்கபொம்மைபோலவே
நில்லுமேஎதுஞ்சொல்லுமே ஞானம்சொல்லுமேயாதும்வெல்லுமே
அட்டாங்கம்பண்ணினும் நெட்டாங்குபண்ணியது
கிட்டாதுகிட்டவரவொட்டாது முட்டியது
பாயுமே முனேதேயுமே அதுவோயுமே உள்ளந்தோயுமேவேத
மந்திரத்திலேயுமில்லை அந்தரத்திலேபவ
தானமே அதுதானமே மவகீனமே பேசாமோனமே யந்த
முப்பாழுந்தாண்டிவந்து அப்பாலேநின்றவற்கு
இப்பார்வைகிடையாது அப்பாதிருநடன
மாடுவார் தாளம் போடுவார் அன்பர்கூடுவார் இசைபாடுவார்அதைக்
கண்டாருங்கிடையாது விண்டாருஞ்சொன்னதில்லை
அண்டரண்டகோடியெல்லா மொன்றாய்சமைந்திருக்கு
மல்லவோ அதைச்சொல்லவோ பறையன்சொல்லவோ
இன்னஞ்சொல்லவோ நேரமாகுதல்லவோ
பாலகிருஷ்ணன்பணிந்திடு சீலகுருசிதம்பரம்
மேலேவைத்தஆசையாலே காலனற்றுப்போவானென்று
சாத்திரம்நல்லக்ஷேத்திரம் ஞானநேத்திரங்கொண்டு ஐயே

கலிவிருத்தம்.

வானமேவியவும்பர் வாழ்த்தியமறையைக்
கானமேசெய்யும் வேறேயுமக்கடிமை
ஈனமாமிழிகுலத்தினி லெய்தியநந்தன்
ஞானவாரிகொண்டேயவ ரருளுறநனைந்தார்.

வசனம்.

இப்படி நந்தனார்சொல்ல வேதியர்கேட்டு திவ்வியஞானமடைந்து நந்தனைப்பார்த்துச் சொல்லுகிறார்.

கீர்த்தனம்-இ-ம-சாமா.

கண்ணிகள்.

சிதம்பரம்போய்நீவாருமையா நான்
செய்ததெல்லாமபசாரமையா சிதம்
சிதம்பரம்போவீர்பதம்பெறுவீர் வேறே
சிந்தனைவேண்டாம்நந்தனே யினிமேல் சிதம்
எத்திசையினுமுமக்கிணைசொல்லப் போமோ
பத்தியேமுதலென்றுபழகியபெரியவர் சிதம்

சித்தமுந்தெளிந்தது தெய்வமேநீரென்று
புத்தியும்வந்தது கெதியிதுவல்லவோ சிதம்

வசனம்.

இப்படிச்சொல்லியவேதியரைச் சுற்றிவந்து தலைவணங்கி ஒடுக்கவணக்கத்துடனே தூரவிலகிநின்று வேதியரை ஆசீர்வாதம்பண்ணச்சொல்லுவார்.

கீ-ம்-ஓரடியிலிரண்டுவார்த்தை-துக்கடா.

| நந்தனார். | வேதியர். |
|---|---|
| சிதம்பரதெரிசனங்கிடைக்குமோ | கிடைக்கும் |
| ஜென்மசாபல்லியமாமோ | ஆகும் |
| பதம்பெருந்தவநெறியறிகிலேன் | அறிவீர் |
| பரமனருள்செய்வாரோ | செய்வார் |
| ஜாதியில்தாழ்ந்தவனல்லவோ | அல்ல |
| சாத்திரமுறைமைக்குஞாயமோ | ஞாயம் |
| ஆதியம்பலதெய்வம்நாடுமோ | நாடும் |
| ஆனந்தமடைவேனையயரே | அடைவீர் |

வசனம்.

வேதியர் நந்தனாருக்காசீர்வாதம்பண்ணி யனுப்பியபின்பு நந்தனாருடைய குணதிசயங்களைக் கொண்டாடுவார்.

அறுசீரடி யாசிரியவிருத்தம்.

அடியவர்மனமிடியப்பேசினதுண்டபராத
மனந்தங்கோடி
படுநரகில்வீழ்வாரென்றெனவுரைக்கும்பாவமது
பலித்ததென்று
துடிதுடித்துதொடைநடுங்கிநீர்வடிந்துசிதம்பரத்தே
துதிகள்செய்து
படிபுகழுந்திருத்தொண்டர்குணமெல்லாமுலகறியப்
பகருவாரே.

இதுவுமது.

சாஸ்திரக்குப்பையெல்லாந் தள்ளினேன்பதறுபோலே
காத்திரஞ்சுத்தமாச்சு கனிந்திடுமுள்ளம்பத்தி
மாத்திரமிருந்தாற்போது மற்றொன்றுமில்லைசைவ
க்ஷேத்திரமுழுதுஞ்சுற்றிச் சேருவேன்றில்லையென்றார்.

கீ-ம்-இ-ம்-சௌராஷ்டகம்-ஆதிதாளம்.

பல்லவி.

எந்நேரமும் நந்தனைச்சிந்தித்தார்
னந்தனுகியிருந்தனரந்தணர் எந்த
பந்தந்திரவே யிந்தவுருவாகி
வந்துதோவாரந் தந்துதோசிவனென் எந்த

வ-ம். விட்டுதோ இந்த வீட்டுக்கவலைகள் பட்டுதோ பவசாகரச் சேபழிந்திட்டுதோமுத்திவெள்ளம் கரைபுரண்டுதோவென்றுஎத்தித்தொழுபவர் எந்நேரமும் வேதியரிப்படியேசிவபக்திபண்ணிக்கொண்டு ஆனந்தமடைந்திருந்தார் அப்படியிருக்கநந்தனுர் ஆதனூரைவிட்டுச் சிதம்பரம்வருகிறுர்.

கீ-ம்-இ-ம்-லாவணி-ஆதிதாளம்.

நந்தன்சிதம்பரம்வருகிறுர் ஆதனூரைவிட்டு
கொள்ளிடந்தாண்டி யப்பால்வருகையிலே
தொண்டரங்கம்பரவசமாய் எங்கும்பொங்கிச்சிவமாய் நந்த
அந்தக்கருணை விருத்தியழிந்து
அநேகசென்மவாசனையை
யனல்கொண்டுதிகைத்தாரே சஞ்சிதவிரையெனமறுத்தாரே நந்த
குண்டலிசத்தியைக்கொண்டு
கிளம்பிமண்டலம்புகுந்து
சஞ்சரித்துக்கொண்டார்குரைய அமுர்தமுண்டார்கிளையர் நந்த
அனுதிமாய கற்பிதமிந்த
நாமரூபாதிபிரபஞ்சமெல்லா
மழிந்துபோமென்பார்குரைகடலெழுந்தநுரையென்பார் நந்த
சைவத்தலங்களிற்றெய்வமிதுவே
சத்தியம்பண்ணுவேன்நான்பறையன்
சதுர்மறைகேட்டிலையோமிக்கஷண்மதங்கேட்டிலையோ நந்த
ஈசன்கருணனேசமிலாதவ
னெத்தனைவேதங்கள்கற்றுலு
மெட்டாபெருங்கொம்புநெருங்கித்தொட்டால்செங்கரும்பு நந்த

ஆதனூரிலொருபுலையனுக்காக
அம்பலநாடகமாடுவாரோ
வருந்தவம்புரிந்தேனோகனவில்யருந்தியுமிருந்தேனோ நந்த

அரகரசம்பு சதாசிவனேபொன்
னம்பலத்தாடியதேசிகனே
ஐயேயுன்னடிமைமனதுநையேனுனுன்னடிமை நந்த

செழித்துவியனுலகெட்டிச்சிகரங்க
ளேந்துதெரியுதுகாணேயே
தில்லைத்தலமென்பார் அன்புடன்சொல்லப்பலமென்பார் நந்த

குதிப்பாரொருதரங்களிப்பார்கண்ணீ
ரறுப்பாருனந்தலாகிரியால்
கொண்டானடிப்பாரேகுரவை நன்றாய்ப்படிப்பாரே நந்த

பாரளந்தகோபாலகிருஷ்ணன்றுதி
பாடுந்திருவடிபணிவேனே
பரகதியடைவேனேபூமியில் மறுபடிவருவேனே நந்த

வ-ம். நந்தனர்ஆதனூரைவிட்டுகொள்ளிடத்தருகில்வரும்போது சொல்லுகிறது.

கீர்த்தனம்-இ-ம்-முகாரி-அடதாளம்.

பல்லவி.

கொள்ளிடக்கரைபோனான்-நந்தன்
கோபுரங்களைக்கண்டான்

அநுபல்லவி.

பள்ளச்சாதியிலும் பறைச்சாதிநானென்று
உள்ளமுருகியவர் வெள்ளங்கரைபுரள கொள்

சரணங்கள்.

ஓடத்தின்மேலேறி-நந்தன்
ஓங்குமகிழ்ச்சிமீறி
நாடாயெவரும்நல்லநடனக்கூத்தாடி
நண்புடன்கதிபெறலாமென்றுறுதிகொண்டு கொள்

அக்கரைபோனானே-நந்தன்
ஆனந்தங்கொண்டானே
சிக்கெனவேசிதம்பரேசனைக்காண
சிந்தைமகிழ்ந்துசிவதியானஞ்செய்துகொண்டு கொள்

திருவாதிரைத்திருநாள்-செய்யுந்
தினமல்லவோயிந்நாள்
திருநடராஜமூர்த்திதிருமுகநாதனைக்காண
சித்தங்களிப்பேனேவென்றுறுதிகொண்டு கொள்

வசனம்.

இந்தப்பிரகாரந் தோத்திரஞ்செய்துகொள்ளிடக்கரைதாண்டி வரும்போது தில்லைக்கோபுரத்தைக்கண்டு தெரிசனம்பண்ணுவார்.

கீ-ம்-இ-ம்-தண்டகம்-ஆதிதாளம்.

பல்லவி.

கோபுரதெரிசனமே-எந்தன்-பாபவிமோசனமே

தாகங்கள்மூன்றுந்தணித்துவிடும்நல்ல
சோபசனமுண்டாஞ் சோதிவிளங்கிய கோபுர

விண்ணணைத்துமேலோங்கியேகண்டு
கண்ணுளார்க்கெல்லாங் காட்சியளித்திடும் கோபுர

அல்லும்பகலு மமரர்துதித்திடும்
தில்லைக்கிறையோன்றினமுமகிழ்ந்திடும் கோபுர

வசனம்-தில்லைத்தலமிப்படியிருக்குதென்று

கீர்த்தனம்-இ-ம்-நவரோஜ் ஆதிதாளம்.

பல்லவி.

மாங்குயில்கூவியசோலைகளும் வரபீட்சகூபதடாகங்களும்
தூங்கதிர்மண்டலமெத்தைகளுஞ் சொர்னசபேசன்துசமரமும்
நாலுபுரத்திலுங்கோபுரமும் நவமணிசித்திரமண்டபமும்
சிலமுருந்திருவீதிகளுந் தில்லைவேதியர்மாளிகையும்
கண்டேன்கலிதீர்ந்தேன் என் கவலையெல்லாமொழிந்தேன்
மண்டலம்புகழுஞ்சபேசன்சந்நிதி வாழ்த்திப்பணிந்துநின்றேன்
தஞ்சமென்றடைந்தேனிந்தச் சடலத்தால்நொந்தேன்
அஞ்சவேண்டாமென்றொருதரஞ் சொல்லியழைத்தாலாகாதோ
அப்பாவுன்சரணம் தில்லைக்கரசேயுன்சரணம்
ஒப்பாரில்லாநாடகம்பயிலு மொளியேநின்சரணம்

வ-ம். கோபுரதெரிசனமே என்கிறகீர்த்தனமுதற்கொண்டுசிதம்பரவிசாரரென்றுபெயர்.

சிந்து.

சிவன் வேடிக்கைதானென்று நாடிக்கொண்டேஅறியாதுபோ லிருந்த செம்பொன்னம்பலத்தாடியைக்கும்பிடவே ஆதனூர்தனிலி ருந்து விடும் அம்புபோலப்பறந்தையமின்றித் தில்லையருகில்வந்தார் மனந்தேற்றிக்கொண்டார் குறையாற்றிக்கொண்டார்கெண்டாமணி யோசை

திருநாளைப்போவார்புராணம்.

நாளைப்போவென்றார்கள் சொலத்தெரியாது
பூளைப்பூவாம்பிறவிப்பிணிப் பொழியப்போவாராய்ப்
பாளைப்பூங்கமுகொத்தபழம்பதியினின்றுபோய்
வாளைப்பேர்த்தெழும்பனஞ்சூழ் தில்லைமருங்கணைந்தார்.

இதுபொழிப்புரை.

வசனம்.

நாளைப்போவேனென்றுசொல்லிஅனேகநாள்ஒழியச்சபாநாத ரைத் தரிசனம்பண்ணவேண்டுமென்னும் ஆசையைஅடைக்ககூடா தவராய்பூளைப்பூவையொத்த நிலைமையுடைய பிறப்புகளால்உண்டா கியசம்பந்தம் நீங்கும்பொருட்டுபோகின்றவராய் பாளையையுடைய பொலிவாகியகமுகமரங்கள் சூழ்ந்திருக்கும் பழமையுற்றதம்முடை ய ஊரில்நின்றும்புறப்பட்ட ஆண்வாளைமீனானதுஎழும்பிவிளையாடு ம் வயல்களையுடைய சிதம்பரத்தின் எல்லையையடைந்தார்.

கீ-ம்-இ-ம்-கரகரப்பிரியை-ரூபகதாளம்

கெண்டாமணியாடுது கண்டிபிணிவாடுது

| | | |
|---|---|---|
| முத்திமணிதேடுது | நாடுதுகூடுது | கெண்டா |
| பரவசமாகுது | பாவங்கள்போகுது | கெண்டா |
| ஜெனனமரணாதிகள் | மோகமுந்தீர்ந்து | கெண்டா |

சிந்து.

கெண்டாமணியோசைகாதில் கேட்குதென்றாரதைபார்க்கவெ ன்றே கொண்டாட்டமாகிவந்தார் கையைக்கும்பிட்டேன்நமக்கம்பி ட்டதோ வென்றேமனமகிழ்ந் ;ார்தெருவீதியிலேவந்துகாதலுடன் கண்டார்களையாறி இரு கண்களிலானந்தம்பொங்கிடவே நின்றார்ம திற்புறத்தே வெகு நேர்த்தியென்றாரிதைப் பார்த்ததில்லைபணிந்தார் பரவசமாய்நல்லபாக்கியசாலிகளாகுமென்று இதுதானேதில்லைப்பதி.

வ-ம்.நந்தனூர் தில்லையைக்கண்டு ஆனந்தானுபூதியைச்சொல்லுகிறூர்.

பல்லவி.

தில்லைத்தலத்தைக்கண்டார் !அதிசித்திவிலாசமென்றூர்-அந்த
எல்லையிலேநின்றூர் மனதேக்கமாகக்கொண்டார்
இருகண்களிநீர்வடித்தார் கொடுங்காமவலையறுத்தார்
இருகையைத்தூக்கிக்குவித்தார் தன்காலைக்கோணிக்குதித்தார்-இந்த
ஐம்புலன்களைமறந்தார் பரமானந்தக்கடலுறைந்தார்
தன்தேகபாவமறந்தார், தில்லைச்சிவனேயென்றிருந்தார்

கீர்த்தனம்-இ-ம்-பியாகு-ஆதிதாளம்.

இதுதானேதில்லைத்தலம் இத்தனைநாளுமறியேன்
இதுதானேதில்லைத்தலம்
அதுவோயிதுவோவென்று அலைந்திடும்பேயனைக்
கதிதருவேனென்றுகைகாட்டியழைக்குது இது

காசினியிலிந்தைக் கயிலையென்றெல்லோரும்
பேசக்கேட்டதேயுண்டு பேணிப்பார்த்தறிகிலேன் இது

வசனம். நந்தனூர் தில்லையைக்கண்டு கொண்டாடுவார்.

கீர்த்தனம்-இ-ம்-இந்துஸ்தான்-காபி-ஆதிதாளம்

பல்லவி.

தில்லைதில்லையென்றூர்பிறவி இல்லைஇல்லையென்றுமறைமொழியும்
தொல்லைதொல்லையென்றகாடுவினை
வல்லைவல்லையென்றகலுந்திருத் தில்லை

கற்றூருங்கற்றூருங்களங்கமறிந்திட
பெற்றூரும்பெற்றூரும்பேசாப்பெருமையி
லுற்றூருமுற்றூரும்பொன்னம்பலத்தில்
தத்தோந்தத்தோமென்றுநடனமிடும் தில்லை

வாடிவாடிமாலயனீசருக்கும்
கூடிக்கூடிக்கொண்டல்லும்பகலும்
தேடித்தேடித்திருவடிமுடிகளைப்
பாடிப்பாடிக்கோபாலகிருஷ்ணன்தொழும் தில்லை

துண்டு-இ-ம்-தேசிகதோடி ஆதிதாளம்

பல்லவி.

இதுவோதில்லைசிதம்பரக்ஷேத்திர மீசனிருப்பிடமோ
மதுரப்பொழிந்திடும் மறையோரிருப்பிடம்
மாமுனிவர்தாம் வாழும்பெரியிடம்
பதவிபெருந்தொண்டர் பணிந்துவருமிடம்
பரதெய்வமுதலில் பாதியிலுறும்மிடம்-இது

கீர்த்தனம்-இ-ம்-பியாகு ரூபகதாளம்.

ஆடுஞ்சிதம்பரமோ வையன் கூத்தாடும்சிதம்பரமோ
ஆடுஞ்சிதம்பர மன்பர்களிக்கவே
நாடும்சிதம்பரம் நமச்சிவாயபொருள் ஆடுஞ்
ஆருமறியாமல் அம்பலவாணர்
சீரடியார்பார்க்க சேவடிதூக்கியே ஆடுஞ்
பாலகிருஷ்ணன்போற்றும் பான்மதிசடையினார்
தாளமத்தளம்போட தாதெய்தாதெய்யென்று ஆடுஞ்

அறுசீரடி யாசிரியவிருத்தம்.

தில்லையைக்கண்டபோதே தெளிந்ததென்னுள்ளமெல்லாம்
பல்லூழிகாலஞ்செய்த பாழ்வினைதொலைந்துபோச்சு
நல்லருள்நடனங்கார்க்கும் நாயகனார்சிற்சபைக்கு
சொல்லுவார்மகிமைசெப்ப சேடனாலாகாதென்று

வ-ம். இப்படியே தில்லையைக் கொண்டாடி தில்லையைப் பாராதவரேபாவியென்பார்.

கீர்த்தனம்-இம்-சவாயி-சாபுதாளம்

பல்லவி.

மார்கழிமாதத்திருவாதிரைநாளையில் வந்துசிதம்பரதேசிகனை
பாராதபாவிகட்கேதுமில்லையிந்தப் பாரில்வந்துபிறவாதவரே
வானிற்றெடுங்திருமாளிகைமண்டபமாவதிலுந்தில்லைமாநகரம்
காணக்கிடைக்காதயிந்தபாக்கியங்காதில்கேட்டவண்ணங்கடந்து
யாதிபராபரமாகியதில்லைப் பொன்னம்பலவாணர்சந்நிதியில்
நாதமுங்கீதமுங்கேட்குது வானந்த நாடகவேளைநானடியேன்

வசனம்.

கீர்த்தனம்-இ-ம்-சாவேரி ரூபகதாளம்

பல்லவி.

சிதம்பரம்வந்துதெரிசியாதஜென்மம் வீணென்றுபேச
மனதிலெண்ணினர் பாதமலத்தியானம்பண்ணினர்
பறையனுக்குமிந்தத்தலத்தைப் பார்த்தபின்புமோட்சபதவி
பலித்ததல்லவோ பாவிஜெனன மறுத்துதல்லவோ
கொண்டுகொண்டதங்களையர்பெருமையெல்லாம்சொல்லிச்சொல்லி
துள்ளித்தாவினர் ஞானவிசையையள்ளித்தூவினர்
பூதலத்திலிதுவேதெய்வமென்று நந்தனநந்தக்கடல்
பொங்கிப்பாடினர் புண்ணிய தலமென்றுதேடினர்

கீர்த்தனம்-இ-ம்-புன்னுகவ்ராளி ரூபகதாளம்.

அரகராசங்கரவண்ணலேயம்பலத்தானே
நானுந்தனடைக்கலமென்று
உருகித்துதியாரோ வானந்தம்
பெருகிப்பதியாரோ
முத்தியளிக்குந்திருமூலத்தானரைக்கண்டு
பத்திபண்ணுதவன்பாமரனல்லவோ
பாருக்குசுமையாச்சு அவனிருந்து
மாருக்குச்சுகமாச்சு
மங்கையர்மோகமாய் மயங்கித்தினந்தோறும்
மங்களபுங்குவமாயவரின்மேல்
கொண்டழக்கியுழைத்தாரே அன்னியாயமாய்
நாளையுங்கழித்தாரே
வீசிநடைநடந்த மெய்யும்பொய்யாகவே
ஆசையடக்கும்போ தொருவருமங்கில்லை
தூசியும்போகாதே காதறுந்த
ஊசியும்வாராதே
சிவசிதம்பரமென்று தில்லைவெளியுனின்று
பவசாகரமென்று பரமபதமடையுந்
தவநெறிபொருந்தாரோ பொருந்திய
வவரையும்வருந்தாரோ
சாத்திரங்கற்றாலுஞ் சதுர்மறையுணர்ந்தாலும்
சூத்திரம்பெற்றாலுஞ் சொன்னேன்சங்கரா

மாத்திரம்போகாதே-கருணைக்குப்
பாத்திரமாகாதே
சரணாகதியென்று சார்ந்தடிபணியாமல்
வருணாஸ்திரம்விதி வழுவாதிருக்கினுஞ்
ஜனனாதிகள்விடுமோ
மனனாதிகள்படுமோ
அஷ்டசித்திகள்பெற்று ஆண்டாயினுங்காலம்
மட்டிருந்தாலுமென்ன மரணபயமெய்திலா
கஷ்டஜென்மமாச்சே மனிதஜென்ம
மெட்டி வீணாப்போச்சே
முப்பாழுந்தாண்டி மூலத்தீமூட்டிக்கொண்
டப்பாலேநின்று லானந்தங்காணலா
மொப்பாரில்லையடா ஊடுருகி
நிற்பாரில்லையடா
ஆலமிடமிறங்கி யம்பலக்கூத்தன்கோ
பாலகிருஷ்ணன்தொழும்பரமசிவனேயென்று
பாடிப்படியாரோ பருவத்தில்
தேடிப்பிடியாரோ

வசனம்.

நந்தனார் சிவபத்திபண்ணாதவனை நிந்தனைசெய்து இன்னமுஞ் சொல்லுவார்.

கீர்த்தனம்-இ ம்-சுருட்டி-சாப்புதாளம்.

வானோர்புகழுந்தில்லை வனநாதர்வாழுஞ்
ஞானசபையைப்போற்றி நமச்சிவாயமென்று
சொல்லாதவன்கல்வி கல்லாதவன்வெகுபொல்லாதவன்
காசினிபுகழ்சிவ காமவல்லியைக்கண்டு
பாசமகலும்நெறி பாராதவன்சுத்தப்
பதராச்சு ஆட்டினதராச்சு கிருமிக்கெதிராச்சு
ஆட்டுக்காலைச்சற்றேகேட்டுவாங்கியுள்ள
நாட்டிக்கொள்ளாதவன் மாட்டுக்குளவையென்று
நாடாரேகண்டு என்றுந்தேடாரே

அம்பலவாணனு ரருகில்வந்துகையால்
கும்பிட்டிறைஞ்சாத குருடர்களுக்குத்திற
மதியேதுபரசுதியேது பண்ணும்விதியேது
நாக்கிருந்துஞ்சிவ நாமத்தைநவிலாமல்
சாக்குபோக்குப்பேசுஞ் சண்டியவனைக்கால
னடியானே கட்டிப்பிடியானே கையாலடியானே
வேதாகம நூற்களை விரித்துணர்ந்தாலு
மேகாந்தபக்தியொன் றில்லாதவனுள்ள
முருகாது கள்ளங்கருகாது வெள்ளம்பெருகாது
ஆத்திபதியுஞ்சடை யழகனடியதைப்
பார்த்து களிக்காத பாவிமனிதர்க்கொன்றும்
பலியாது வினைசலியாது சினம்பொலியாது
பாலகிருஷ்ணன்தேடும்பாதரசத்தைக்கண்டு
சீலமுட னுண்டு செபிக்காதவன் துன்பம்
துலையாது யின்பம்நிலையாது கன்மம்கலையாது.

வசனம்.

சிதம்பரம்பாராத கண்படைத்தாரை குலத்தைக்கெடுக்கவந்த புண்படைத்தாரென்று சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-ஆனந்தக்களிப்பிலே-ஒருபோகம்.

காணாதகண்ணென்னகண்ணே
வீணானகண்மயிர்க் கண்ணதுபுண்ணே காணா
சொல்லும்பொருளிறந்த துரியவடிவதாகி
யல்லும்பகலுமற்ற வானந்தப்பேரொளி காணா
பசியாமருந்தளிக்கும் பரமரகசியத்தி
லசையாமலேயாடு மம்பலநாதனைக் காணா
ஊராருமறியாமலொளிகண்டுபிசகாமல்
ஈராறுகாற்கொண்டு எழும்பியமண்டபம் காணா
அண்டத்துளடங்காத வாசைவலையைப்பூட்டும்
பிண்டத்துளடங்கிய பேரின்பதெப்பத்தைக் காணா
நடுநடுவிருந்து நாதனே தானென்று
பேசாமற்றுனிருக்கும்பெருமையையொருநாளும் காணா
என்னையானறியேனென் றிகழ்ந்திடும்பேயனைத்
தன்னந்தனியனுகித் தருவனென்றழைத்தாரைக் காணா

சோற்றுத்துருத்தியிதைச் சுமந்ததினலென்ன
ஆத்திமதியுஞ்சடை யடிகனமருங்கோயில் காண

சீலக்கமலமுகச் சிவகாமிமனமகிழ்
கோலக்கனகன்வில்லைக் குழகனடியக்கூத்தைக் காண

பாலகிருஷ்ணன்தொழும் பாதத்தைபணிந்தொரு
நாளும்மறவாத நலமிக்கவழிதேடி காண

வசனம்.

பத்திபண்ணுதவன் முத்திபெறுனென்று சொல்லுகிறர்.

கீர்த்தனம்-இ-ம்-தண்டகம்-ஆதிதாளம்.

வேதம்படித்ததுஞ்சாஸ்திரங்கற்றதுமெய்யினில்நீறுபூசுவதும்
ஆதிசிதம்பரத்தேசிகன்திருவடிக் காளானலன்றனநதம்
உடனேதுலையும்பவபந்தஞ்சொன்னேன்சொன்னேன்சொன்னேன்
ஊனுறக்கமுதலாகியநான்கு முண்டேயுலகில்யாவருக்கும்
ஆணவமலநீத்தார்களறிவாரகத்தைச் சுநதிங்கொள்ளுவாரே.
ஜகத்தைபொய்யாத்தள்ளுவாரே சொன்னேன் சொன்னேன்
அருந்தவமுனியாகிலும் ல்லவராசைபொல்லாதறியாரோ
வருத்தப்படுத்திடுமனதைமயங்கிவனத்திடுமன்னமயங்கோசம்
உற்றுப்பார்த்தாலதுநேசம் சொன்னேன்சொன்னேன்
அரவணேகோபாலகிருஷ்ணனல்லும்பகலும்பணிந்தேற்றும்
திருவடிசரணுகதமென்றெண்ணித்தெளிந்தார்களன்றேபரகதி
ஒழிந்தாராக்கன்றேவரமுத்திசொன்னேன்சொன்னேன்.

திருநாளைப்போவார்புராணம்.

விருத்தம்.

இப்பரிசாயிருக்கவெனக் கோதலறிதென்றஞ்சி
யப்பதின்மதில்புரத்தி னுறுதபெருங்காத
லொப்பரிதாம்வளர்ந்தோங்க வுள்ளுருகிக்கைதொழுது
செப்பரியதிருவெல்லை வலங்கொண்டுசொல்கின்றுர்.

வசனம்.

இந்தபிராமணர்களுடையவீடுகள் இத்தன்மையாயிருக்களனக்
நஅவ்விடத்திற்குப்போகுதலரிதென்றுபயந்து அந்தஸ்தலத்தின்ம

திலிப்புரத்தில் அளவற்றபேரன்பு சமானமில்லாமல்மலரமனமுருக்கூப்பிட்டுக்கொண்டு சொல்லுதற்கரிய எல்லையை வலஞ்செய்துகொண்டுபோவார்.

விருத்தம்.

அம்மையார் தில்லைநகர் மருங்கிடையணிந்து
சும்மைவிட்டுவிழிதனில் நீர்சொரிந்து
விம்மியேசிவனார் சரிதங்களைவிரித்துக்
கொம்மைவிட்டவர்பாடியு மானந்தங்கொண்டார்.

வ-ம். நந்தனார் தனக்கிந்தபாக்கியங்கிடைப்பதென்று கொண்டாடனடிக்கிறார்.

கீர்த்தனம்-இ-ம்-உசேனி-ரூபகதாளம்.

பல்லவி.

கொண்டாடனடிக்கிறார் தில்லைகோயிலைக்கண்டுதாவித்தாவி கொ

அண்டரண்டந்தொழுமம்பலநாதனைக்
கண்டாரைக்கண்டு கொண்டோமென்றுநன்றாய் கொ

அஞ்சலிகொண்டுகதித்து அரகரவென்றுஜெபித்து
குஞ்சிதபாதத்தைதுதித்துக் குரவைகள்பாடிக்குதித்து கொ

அங்கபரவசமடைந்து ஆனந்தக்கடலெழுந்து
பொங்கிச்சிவமெனவறிந்து புவியதிர்ந்துபணிமிகுந்து கொ

இருகண்ணில்நீர்பெருக இறைஞ்சிமனதுருக
அருமைச்சிவன்கதிதருக அம்பலவாணன்வருக கொ

இதுவுமது.

தரு-இ-ம்-சௌராஷ்டகம்-ஆதிதாளம்

பல்லவி.

கொண்டாடனடித்தாரே நந்தனார் கோவிலைக்கண்டு
கொண்டாடனடித்தாரே நந்தனார்

அநுபல்லவி.

அண்டர்மகிழ்ச்சியாலே அரனேயென்றுமென்மேலும் கொ

சரணங்கள்.

பண்டுநான்செய்ததே போகம்அதனாலுருக்
கொண்டுவந்தேன்மானிட தேகம்ஆச்சேவிந்தப்
புண்டரீகப்பதுவை போகங்கண்டேனென்போல்
புண்ணியெவர்க்குளநிப் போகம்என்றுதுதித்துக்

கொண்டாடுமிவர்பிழைக்
கூறுவதுவேயுற்சாகம் கொ

வஞ்சமனத்தையொரு மித்துநினைத்தொழாத
பஞ்சபாதகப்பேய ரெடுத்தவனுத்தர்களைக்
கொஞ்சியவர்களை யடுத்துவுழலாமலே
கஞ்சமலர்ப்பதங் கொடுத்தருளென்று
வஞ்சிசிவகாமிதொழும்
மணவாளனைதுதித்துக் கொ

ஒருநாற்புரமதிர் ஜொலிக்கவெல்லைசுற்றி
வருவார்திரும்புவார் களிக்கசிரசின்மேலே
இருகைதுவித்துவாழ் வளிக்கநடேசரைத்
திருநாளைப்போவார் மினக்கையாலிந்த
பேதமில்லையெயுரைக்கக் கொ

வசனம்.

இப்படிவீதியைச்சுற்றி சந்நிதியில்வந்து அடியற்றபனைவிழுந்தாற்போலுடல்பணியப்பணிந்துபுழுதிபடப்புரண்டு ஆனந்தமடைந்து நிர்த்தசபைதெரிசனமபண்ணுவார்.

கீர்த்தனம்-இ-ம்-லாவணி-ஆதிதாளம்.

சபாதெரிசனங்கண்டான்நந்தனுஞ் சுபாவமுடனேநின்றான்
சபாதெரிசனங்கண்டான்கனித பிரபாவமாகியசபாபதியிருக்கும்
சதாகாலமும்வேதங்கள்மொழிந்திடுஞ்சிரவகாரமாய்செழித்துவளருந்
தில்லைமூவாயிரமுனிவர்கள் கூடுமல்லுமபகலுமவரவர்நாடும் [திடும்

வசனம்.

தெற்குவீதியினின்று சபாபதியைத்துதிபண்ணுவார்.

கீர்த்தனம்-இ-ம்-செஙகலா ஆதிதாளம்.

பல்லவி.

ஜெயஜெகதீசா அதிசுந்தராஞ்சிதபாதா ஜெயஜெகதீசா
தில்லையைக்கண்டேன் தேறிந்தெளிந்தேன்
எல்லையில்நின்றே னினிபிறவேன்காண்

எனக்கினியாரீடு கரும்புபோலினிக்குதுபார்வீடு
ஆசபாசத்தைவேறேவெட்டுமானந்தத்தின்முழுநாட்டு
வைக்கும்துயராருக்குங்கிடையாது இந்தசுகம்பாருக்குளிணையேது
சரணாகதமென்றிங்கேவந்தேன் சாமிபராக்கு
உமையடைந்தேன்ஜெனனாதிகளான்மிகநொந்தேன்
வேறொருதெய்வங்களைவருந்தேன் ஜெய

தென்றிசைக்கோன்வந் தழைத்திடும்வேளையில்
பெண்டுபிள்ளைகள்குன்றேட்டம்
ஓடத்திலேறியபெருங்கூட்டம்
நானும்நமனுந்திண்டாட்டம்ஒருநம்பிக்கைதாரும்
நானுனக்கருள்புரிந்துவாழுவேனென்று
கனவிலாகிலும்வாருந்தட்டியெழுப்பிக்கவலைகள்தீரும்
அடிமையென்றுமனமகிழ்ந்துபாரும்
தில்லைவெளியில்வருவாரோசேரும்ஓம் ஜெய

அரகரசங்கரனேபொன்னம்பலத்தாண்டவனே
பரமதயாமூர்த்தியென்றடிபணிந்தேன்மனங்குளிர்ந்தேன்
ஜாதியில்சின்னவனானாலும்முன்வீதியில்வந்தேனாவாது
பாதகஞ்செய்யினும் சிதம்பரமென்று
பகர்ந்தால்பழவினைபோகாதோ
தீதில்லாதபெருந்தவத்தோர்வந்தால்
தெரிசனைசெய்தேன்போதாதோ
ஆதிபரமாகியிவனைக்கொண்டாடுவேன்
பாடுவேன் நாடுவேன் ஜெய

அபசரமாகியசமுசாரமும் சதாவிஷயகாமதிரோகம்
உபாயமறிந்துசதாயேறப்படாதது ஜெகதீசுரமாயா
விலாசகற்பிதகிந்தஜெகம் அனேகவிதவாசனைகள்
சிவலோகமென்கிறபாவனையால்நிவாரணம்பெரியோர்கள்
பண்ணியதொழிலிற்பயிரறிவார்பாலகிருஷ்ணன்தொழும்கழலை
எண்ணியபடியேதவமுறுவார்எனதுனதென்னுமுறையிடுவார்
சமாதிபண்ணியமர்மமாதி கிருந்தியடாதேடேதகைவிடாதேயு
சபாபதிவெகுகிர்பாநிதியுன் [ம்
பிரதாபமறியேன் சுபாவம்பறையன் ஜெய

விருத்தம்.

வாட்டுவாருடல்வேர்பட கழலிடைவருந்தி
மூட்டுவார்மூலக்கனல் மதிமண்டலமுகத்தில்
மாட்டிறைச்சியருந்திய புலையன்றன்மனத்து
யாட்டுக்காலரற்றே தந்திடுமம்பலத்தரசே.

கீர்த்தனம்-இ-ம்-இந்துஸ்தான்-காபி-ஆதிதாளம்

பல்லவி.

தாதாதாநீயாடியபாதம் தத்தித்தெய்தத்தியென்றாடியபாதம்
ஆதரவாகபதஞ்சலிமாமுனிக் கானந்தநாடகமாடுந்திருவடி
ஆகமவேதபுராணங்களோதியே யோகிகளாலேதிருவடி
சிந்தைமகிழ்ந்துகுவித்திடவேதிய சுந்தரரஞ்சிதகுஞ்சிதபாதம்
பாரளந்திடுகோபாலகிஷ்ணன் துதிபாடிப்பாடிபணியும்பாதரசம் தா

வசனம்.

நந்தனார் பிறவிபிணிக்கஞ்சித் துதிபண்ணுவார்.

கீர்த்தனம்-இ-ம்-லாவணி-ஆதிதாளம்.

அம்பலவாணவன் சரணமடைந்தேனனேழை
ஆதரித்தாளுவதுன்பார மல்லவோசொல்லவோ
எடுத்தசெனனங் கணக்கெழுதத்தொலையாதென்பாடு
இன்னமும்பிறந்திடுவேனோ நடேசனேயீசனே
ஆசையெனும்பெருக் காட்டிலேயாற்றுமுழுமூடன்
அகலவிடாதேயும்நந்தனேனென்றையனேமெய்யனே
பாரளந்தகோபாலகிருஷ்ணன் பணியுமலர்ப்பாதம்
பரவியென்னுள்ளறவே கருணைபாருமேவாருமே.

வசனம்.

அம்பலத்திலாடும் நடனத்தை வர்ணித்துசொல்லுவார்

கீர்த்தனம்-இ-ம்-சங்கராபரணம்-ரூபதாளம்

பல்லவி.

ஆடியபாதா இருவர்கள் நாடும்விநோதா

அநுபல்லவி.

ஆடியபாதா வயனுமாலுந்தினம்
தேடியுங்காணமற் றிறைமறைவாக
தித்தித்தித்தித்தித்தியென

ஆடிய

வீரவெண்டயம்யசைந்திடபேவுஞ்சடையும்புலியன்
காருந்தொடர்கள் பனங்சவித்திடசாலோகாதிபதவியுந்
தந்தோந்தந்தோந்தந்தோந்தந்தோமென்று ஆடிய

வேதமுனிவர்கள்பாடவுஞ் ஜனகாதியோகிகள்
வெகுநாதமெங்கினுமூடவுந் திருநந்திமத்தளம்போடவும்
தகுந்தகுந்தகுந்தகுமென ஆடிய

பாலகிருஷ்ணன் துதிகள்செய்திடப்பண்ணவர்கள்பூமாரிபெய்ய
சீலமுள்ளசிவகாமிமகிழ்ந்திடத் திருச்சிற்றம்பலத்தரசனுந்திட
தாந்தாந்தாந்தாந்தாமென்று ஆடிய

வசனம்.

நந்தனர் அடிமைத்திரங்காட்டிச்சொல்லிவருகிறார்

கீர்த்தனம்-இ-ம்-தெண்டகம்-ஆதிதாளம்.

அறிந்தறியாயலேசெய்ததபராதமையாளன்னை
யாண்டவனேதில்லைதாண்டவங்கள்சடந்திடுமத்தாவுன்சரணம்

பருகியவண்டபகிரண்டவாராய் அடிமைவுன்சரணம்
நடுவுமாதியுமந்தமுமென்றுமிலாதபிரமனேசரணம்
பொங்குமானந்தகடலேவெளியேயறிவின்னறிவேவுன்சரணம்

என்றும்நிஷ்கதிநிற்குணரூபாவுன்சரணம்
கருதிநின்மகிமைகண்டதோரியாதுஎளியேனுன்சரணம்
எள்ளுர்ருளெண்ணெய்போலெங்குங்கண்டமாதாவுன்சரணம்
யானைவெட்டிகண்டுமறியாதவன்யேகராசாவுன்சரணம்.

வ-ம். இப்படியனேகவிதமாய்கொண்டாடி யுட்புகுந்ததாண்டவம்பாராதகுறைகொண்டு சுவாமியைநான் உள்ளேவரலாமோவென்றுகேட்கிறார்.

கீர்த்தனம்-இ-ம்-மாஞ்சை-ரூபகதாளம்

பல்லவி.

வருகலாமோவையா உந்தனருகில் நின்றுகொண்டாடவுநான்

அநுபல்லவி.

பரமகிருபாநிதியல்லவோ இந்தப்பறையனுபசாரஞ்சொல்லவோ
உந்தன்பரமானந்தத்தால்நாடகம்பார்க்கவேநானங்கே வருக

பூமியில்புலையனாகப் பிறந்தேனே-நான்
புண்ணியஞ்செய்யாம லிருந்தேனே
சாமியுன்சன்னிதி வந்தேனே-பவ
சாகரத்தையு மிழந்தேனே
கரைகடந்தேனேசரண மடைந்தேனே-தில்லை
வரந்தரப்பிரதாபமும் பாபமுந்தீரவே-வரு

வசனம்.

இப்படி திருநாளைப்போவாரென்னுங் கீர்த்திபெற்ற நந்தனர் தில்லையில்வந்துகொண்டாடும் பக்திமார்க்கத்தை ஆதிசேடனால் வர்ணித்துச்சொல்லப்படாத ஞானபக்திவைராக்கியசாஸ்திரங்கள் குடியிருக்கும் ஹரன்பேர்சொல்லக்கேட்டறியாதபேதையாகிய கோபாலகிருஷ்ணனென்னும் பெயர்கொண்ட என்னால் சொல்லத்தகுமானதோ உளறிக்கூறியதால் பெரியோர்கள்பிழைபொறுக்கக்கடவையென்றுசொல்லி வணங்குகின்றார்.

சிந்து.

இதுதானே தில்லைப்பதியென்று-எக்கலித்தாராடிகெக்கலித்தார்-ஐயாவுன்சந்நிதியைக்-காண- ஆசைவைத்தேன்மிகநேசமுடன்தெருவில்பொடித்தூளை அள்ளித் தேகமுழுதிலுந்தாகமுடன்,தரித்தார் திருநீரும் நாலு சாஸ்திரவேதங்கள்பார்த்துணரும் பெரியோரிருக்குமிடம்.

வசனம்.

நந்தனர் அந்தத்தில்லைத்தலம் இப்படியிருக்குதென்று சொல்லுகிறார்.

கீர்த்தனம்-இ-ம்-செந்தகடுக்கா-ஆதிதாளம்.

தண்டகம்.

ஆகமங்கள்வேதியர்கள்சிவ னடியார்கள்கூட்டம் நம
தேகமாகியப்போதுவிளைகின்ற யோகிமுனிகளோட்டம் பூ
லோககைலாசமென்றதைப் போற்றுவார்களாட்டம் அதி
வேகமாகவெங்கேயாகிலும் வெளியேபோகவேணுமையே
இங்கிருக்கலாகாதையே இங்கிருக்கலாகாதையே
பாவிப்பறையனிங்கேவரலாமோ சுவாமிதரிசனந்தரலாமோ

பிச

பாதகமலங்களைத் தொடப்போமோ
பாவமெனைப்பிரிந்து தொலைப்போமோ
இங்கேஆகாதாகா தையே
வேள்விசெய்யும்புகைமேலுலக மெழும்பிபோகுதையே
புண்ணியவான்கள்புரியுந்தவம்
அரகரசிவனென்றுஆடிப்பாடிக்கொண்டு
பரிவுடனரனைப்பிரதட்சணம்வருமிடம் ஆகாதாகாதையே
மணிபாடுதுவெகுஜனங்கூடுதுவீதிவலமாகுது திருப்பதம்பாடுது
உள்ளேநடமாடுதுபணிவிடைபோகுது பரவசமாகுது
மெத்தபயமாகுது இங்கே ஆகாதாகாதையே
தீண்டாதேயிங்கேவேண்டாதேசும்மா இரையாதேயிங்கேதரியாதே
என்னைப்பாராதேபடியேறாதேஉள்ளே போகாதேவரலாகாதே
யென்பார்ஆகாதாகா தையே

சிந்து.

பெரியோரிருக்குமிடம் இந்த பேயனிருப்பது ஞாயமல்ல நானேபறைச்சாதிதில்லை நாதன்றெரிசனமாதரவாய்பண்ணுப்படுபாவி இந்தப்பாரிலிருப்பதுசீரலவே என்றேகுளத்தோரம் சுத்தி ஏங்கின்றார் துயர்நீங்கின்றார் ஓங்காப்பெருங்கவலை கொண்டு உள்ளங்குழைந்திடவெள்ளமெனக்,கண்ணீர்கரைபுரள இருகைதொழுதாரவர்மெய்தொழுதார் கீழேபுரண்டழுதார்.

திருநாளைப்போவார்புராணம்.

விருத்தம்.

செல்கின்றபோல்தந்தத் திருவெல்லைப்பணிந்தெழுந்து
பல்குஞ்செந்தீவளர்க்கப் பயில்வேள்வியெழுபதையு
மல்குபெருங்கினமொதுங்கிமடங்கணெருங்கினவந்தண்
ணல்குந்தங்குல்நினைந்தே யச்சியிடைந்துவாடிநின்றார்.

வசனம்.

திருநாளைப்போவார் சிதம்பரத்துக்குப்போனபொழுது அதினெல்லைகண்டு நமஸ்கரித்து எழுந்து விருத்தியாகச்சிவந்தஅக்கினியைவளர்த்தி ஆகுதிசெய்கின்றயாகத்தால்உண்டாகிய புகையும்மிகுந்தபிராமணப்பிள்ளைகளின் நான்குவேதங்களை ஓதும்படியாக அடிக்கடிநெருங்கியிருக்கும் மரங்களைபுங்கண்டு குறைவாகியதம்முடையகுலத்தைநினைந்து உள்ளேபோவதற்குப்பயந்து போகாமல்நின்றுவிட்டார்.

இதுவுமது விருத்தம்.

நின்றவரங்கெய்தரிய பெருமையினை நினைப்பார்முன்
சென்றவையுங்கடந்தூர்க்கு ழெயிற்றிருவாயிலைபுக்கார்
குன்றனையமாளிகைக டொறுங்குலவும்வேதிகைக
ளொன்றியமூவாயிரரக் குவவென்பாராகுதிகள்.

வசனம்.

எல்லையில்நின்றுக்கொண்டிருந்ததிருநாளைப்போவார் தான்உள்ளேயடையக்கூடாத அக்கோயிலின்பெருமைநினைப்பாராகில்முதலில்அந்தஎல்லையைக்கடந்து ஊரைச்சுற்றியிருக்கும்மதிலின் திருவாசலையடைந்தார் அங்கேதிண்ணைகள்பொருந்திய மலைகள்போலுயர்ந்த மூவாயிரம்வீடுகள்தோறும் ஓமங்கள்செய்யப்படுகிறதென்றுசொல்லிக்கொள்ளுவார் சுவாமியைப்பூசிக்கிறதில்லைமூவாயிரவர்களுடையவீடுகள்மாளிகைகள் மூவாயிரமென்பார் வேதவிதிப்படியாகுதிசெய்யும்பிராமணர்களுடையவீதியிலே தாம்போகக்கூடாதபடியால்அதைநினைந்துதங்குலத்தையிகழ்ந்து யிருக்கலாகாதென்று அவ்விடம்விட்டு ஒருகுளத்தருகில்வந்துசுவாமியைப் பாராதஜென்மம் ஏன்படைத்தேனென்று தாழப்புரண்டழுதார்.

கீர்த்தனம்-இ-ம்-சாரசரங்கி-ரூபகதாளம்.

பல்லவி.

இந்தசடலம்வந்தவாரேதென்றறிகிலேன் நானேதென்றறிகிலேன்.

அநுபல்லவி.

சந்ததமுந்தில்லையம்பலத்தானை
சிந்தித்துமாயச்சிணுக்கறுக்காமல் இந்

சரணங்கள்.

அங்கமலர்களைப்போக்கியே சிவ
கங்கையிலாடிக்களங்கமறாமல் இந்

ஆடும்நடனங்கண்டானந்தமாகிப்
பாடிப்படித்துபணிந்துகொள்ளாமல் இந்

அஞ்சரத்தையெடுத்துருவேற்றி
வஞ்சப்பிறவிமயக்கறுக்காமல் இந்த

பாலகிருஷ்ணன்தொழும்பாதத்தைக்கும்பிட்டு
சீலமுள்ளசித்திமுத்திபெறாமல்

கீர்த்தனம்-இ-ம்-தன்யாசி-ஆதிதாளம்.

பல்லவி.

கனகசபாபதிதரிசனம்ஒருநாள் கண்டால்கலிதீரும்

அநுபல்லவி.

ஜனகமாமுனிகைதொழுதேத்திய
தினகரகோடிதேஜோன்மயமாகிய கன

சரணங்கள்.

மனதிலொடுங்கிய கல்மிஷம்போக்கும்
மாயப்பிறப்பறுத்து மறுவடிவாக்கும்
ஜனனமரணசமு சாரத்தைநீக்கும்
திருவடிநிழலிலே கூடியேகார்க்கும் கன

சுருதிமுடிகளில் சொல்லிக்கொண்டாடும்
துய்யவொளியைவெளி யாகவேகூடும்
தருமநெறியுந்தவ ருதுளநாடும்
ததிங்கணத்தோமென்று தாண்டவமாடும் கன

பற்பலயோசனை செய்வதுந்தொல்லை
பரகதியடையவு பாயமுமில்லை
அற்புதமாகவே தானொருசொல்லை
அணியுங்கோபால கிருஷ்ணன்பணியுந்தில்லை கன

கீர்த்தனம்-இ-ம்-கரகரப்பிரியை சாப்புதாளம்

பல்லவி.

கட்டைகடைத்தேறவேணுமே கனகசபாபதிநடனங்
கண்டுகளிக்கவந்த இந்தநந்தனர் கட்

கட்டைகடைத்தேறவொட்டுமோ ஜென்மம்
கெட்டதல்லவோ யிஷ்டமறியேன் கட்

முத்தியளிக்கும் பத்தியிலென்ன
சிற்றம்பலவன் சித்தமறியேன் கட்

வசனம்.

தேகம்படைத்தால் சிவபத்தி பண்ணவேணுமென்று நந்தனர் சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-தெண்டகம்-ரூபகதாளம்

பல்லவி.

தேகம்வந்தவாறு சொல்லவோசிதம்பரேசனடியைத்
தினமுந்தொழுதிருப்பதற் கல்லவோ

இந்தவிஷயசுகத்தை நாடுமோ பாவிமனக்குரங்
கிருப்பிடங்காணும லோடுமோ
தில்லைத்தலத்தைக்கண்டு மாச்சுதேஉள்ளேசென்றுநடன
தெரிசனம்பண்ணுமற் போச்சுதே

பறையனென்றஜென்மம் போகுமோபாழ்வினையாலின்னம்
பாரில்வந்துபிறக்க லாகுமோ
அடிமையென்றுவந்தே னுய்யுமோஒன்றையுநானறியே
னம்பலத்தெய்வமென்ன செய்யுமோ
பார்த்ததெல்லாமழிந்து தோணுமோகோபாலகிருஷ்ணன்
பணியும்பரமசிவன் கருணைவேணுமோ

வசனம்.

சிதம்பரதெரிசனங்கண்டபேர்க்குஜென்மமில்லையென்பார்

கீர்த்தனம்-இ-ம்-ரூபகதாளம்

பல்லவி

தெரிசனங்கண்டவர்க்கு மறுஜென்ம மில்லை
வரிசையுடனம்பலவன்வாழ்கின்ற தில்லை-தெரி

சரணங்கள்.

இரவுபகலிடைவிடாதேகாச பத்தி
இன்பமுறுமானந்தம்பொங்கும் நத்தி
பரவிவருமரனருளாலணிமாதி சித்தி
பணிந்துவந்துசிற்றம்பலத்தைவலம் சுத்தி-தெரி

சொர்ப்பமென்றிவ்வுலகம்தோன்றிவரும் வேதம்
சொன்னத்துரின்படியாகும் போதம்
அற்புதமிர்தங்கமொடுதாளவகை கீதம்
அனவரதத்திருநடனமாடிவரும் பாதம்-தெரி

அல்லும்பகலோயாதுஅடியார்கள் கோஷ்டி
அரகராவென்றமிர்தபானமதைக் கூட்டி
தில்லைவாழந்தணர்கள்கைபிடித்துக் காட்டி
சிக்கெனவேதியரைத்திறந்துபரவெளியைக் காட்டி-தெரி

நஞ்சுண்டகண்டனுக்குக்கொன்றைமலர் சாற்றி
நல்லதிருச்சாந்தணிஅம்பிகையைப் போற்றி
குஞ்சிதவத்தந்தமதுமனதிலூற வேற்றிக்
கோபாலகிருஷ்ணன்தொழும்நடராஜ மூர்த்தி-தெரி

வசனம்.

தனக்குதெரிசனங்கொடுக்க அம்பலவாணர் எப்பொழுது வருவாரோவென்று விசாரப்படுவார்.

கீர்த்தனம்-இ-ம்-செஞ்சுருட்டி

பல்லவி.

எப்போவருவாரோஎந்தன் கலிதீர எப்பவருவாரோ

அநுபல்லவி.

செப்பியதில்லைசிதம்பரதேவர்

சரணங்கள்.

நற்பருவம்வந்துநாதனைத்தேடும்
கற்பனைகள்முற்றக்காட்சிதந்தாள எப்

அற்பசுகவாழ்விலானந்தங்கொண்டேனே
பொற்பதத்தைக்காணேன்பொன்னம்பலவாணன் எப்

கீ-ம்-இ-ம்-செஞ்சுருட்டி ஆதிதாளம்.

வருவாரோ அருள்புரிவாரோயெந்தன்
மனதுசலிக்குதுநானென்னசெய்வேன்
அரகரசங்கரவம்பலவாணனை
ஆதரிக்காதிருப்பாரோ ஒருக்கால் வரு

வசனம்.

நான்சின்னசாதியானதால் வருவாரோ வாராரோவென்றுசஞ்சலப்படுகிறார்.

கீ-ம்-இ-ம்-சுருட்டி ஆதிதாளம்.

பல்லவி.

வாராமலிருப்பாரோஒருக்கால் வருவாரோஅறியேன்
பாராமலிருப்பாரோ பதஞ்சலிமாமுனிக்குப்
பாதங்கொடுத்தயீசன்நானென்று வா

கனவினில்வந்து கழனிமுழுதும்நட்டு
மனதுமகிழ்ந்துயென்னைவாவென்றுசொன்னவர் வா

களங்கமறவேயவர்காலுக்குக்கும்பிட்டு
குளத்தங்கரையில்நின்று கூப்பிடும்வேளையில் வா

அல்லலறுத்துப்பரமானந்தமேதரும்
தில்லைத்தலத்தைக்கண்டுதெரிசனம்பண்ணியும் வா

வசனம்.

இதுவரையில் வாராதபடியினால்இனிமேல் தில்லைத்தலத்தைவிடாமல் சுற்றிவகதுதேகத்தைத்தள்ளுவோமென்று நிச்சயம்பண்ணுவார்.

கீர்த்தனம்-இ-ம்-செஞ்சுருட்டி ஆதிதாளம்

பல்லவி.

இன்னம்வரக்காண்கிலேன் என்னசெய்குவேனவர் இன்
இன்னம்வரக்காண்கிலேன் தில்லைபொன்னம்பலவாணன் பண்ணையும்
நட்டென்னைபுமிங்கேவாவென்றுசொன்னவர்மறந்தாரோ இன்
சொல்லும்பொருளுமிந்தச் சோதியேமகிழ்ந்துவாழும்
தில்லையைவிடாமற்சுற்றித்தேகத்தைமாற்றிக்கொள்வதுநல்லதுஇன்
பாலகிருஷ்ணன்போற்றும்பாதச்சிலம்புகுலுங்கக் கோலமுடன்
நடனங்கொண்டேன்குறைகள்தீர்ந்துதென்றுசொல்லவுந்தான்இன்

வசனம்.

இப்படிசொல்லிக்கொண்டு கண்ணீர்சொரிந்துபுரண்டழுவார்

சிந்து.

கீழேபுரண்டழுவார் என்றுங் கேள்விமுறையில்லையோநாதா
வென்றேதலைகுனிந்தார் எந்தன் வேதனையைககண்டுஆதரிக்கும்
தெய்வங்கிடையாதோ பாவி சித்தந்தெளியவிர்த்தந்து
வாவென்றழையாதோ விண்ணில் வானவர்கள்போற்றுமீனமிலாக்
கனகசபைநடனங் கண்டு காயங்களித்திடநாயடியேன்
வந்தியத்ததியேனோஎந்தன் வாளுளுருகுதுவீணையே
அடடாஇதென்னசென்மம்

வசனம்.

இப்படிபுரண்டழுதுதான்படுகிறதுன்பத்தைக்கண்டுஆதரிக்கும்படியானதெய்வம் எங்கும்கிடையாதோவென்றும்இருந்தால்வந்து என்னையாதரிக்காதாவென்றும் என்மனதுகுளிரஒருவார்த்தைசொல்லாதாவென்றும் மேலாகியதேவர்கள்போற்றும்படியானவனேஎன்னுடையதோத்திரத்துக்கிரங்கிவரக்கூடாதாவென்றும் உனதுநடனசபைக்குளென்னையழைத்துப்போய்க்காட்டிஎன்னுடையஇழிவானகுலத்தைமாற்றக்கூடாதோவென்றும்இப்படிபற்பலவாராகப்பணிந்து துன்பசாகரத்திலாழ்ந்தார்.

விருத்தம்.

சாதிபேதமுங்குணக்குறியாவையுந்தள்ளி
ஆதியாகியென்றரற்றினென்றிசைதனிலனைத்தும்

மாதவம்புரிகொண்டார்கள் பணிதிரன்மரைக்கக்
கோதிலாவுருக்கொண்டுமிப்பிறவிக்குறையோ.

வசனம்.

இப்படிசரணாகதமென்று உன்னைநம்பிவந்து துன்பபடலாமா சுவாமிசிவனேசிவனேயென்று பெருங்குரலிட்டு தனக்கு சென்மம் போதும்போதுமென்று சொல்லுவார்.

கீ-ம்-இ-ம்-நாதநாமக்கிரியை

பல்லவி.

போதும்போதுமையா எடுத்தஜென்மம்போதும்போதுமையா

அநுபல்லவி.

மாதவமாரனைவர்கள்புகழுந்தில்லை
வனத்திலனுதினமும் வளருமம்பலவாணா போ

சரணங்கள்.

கோத்துநெளியும்புழுவூத்தைநரம்புகளும்
நாத்தமலங்களுமூத்திரக்கும்பி போ

சந்ததமுமடியேன்யந்திரம்போலே
வந்தெழுவரையிலும்நொந்துமிருந்தேன் போ

கொழுத்தவாணிகள்போலேயிருந்துவிரும்புமென்னை
வயிற்றிலிருந்துபடும்வருத்தமென்னசொல்வேன் போ

மாதவர்கள்மீதினில்மையல்கொண்டேகிவிடும்
வேதனைகொண்டவெறும்பயலானேன் போ

அண்ணன்கோபாலகிருஷ்ணன்பணியுந்திரு
அம்பலமேவும்பொன்னம்பலவாணா போ

வசனம்.

சென்மமேகஷ்டம் அதிலும்புலையனாகப்பிறப்பது மிகவுங்கஷ்டமென்று நந்தனார்சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-சுரகரப்பிரியை ரூபகதாளம்.

பல்லவி.

இந்தஜென்மம்வேண்டாம் இனிஎந்தசென்மம்வந்தாலும்வரட்டும்

நந்திநடுவினில் மந்திரங்களைச்சொல்லி
வந்தனைகள்செய்து சிந்தைமகிழ்ந்த இந்த
வேதமறிந்தவர் பாதம்பணிந்தவர்
பேதைமறந்திடாத் தீதடைந்தேன்பாவி இந்த
பாவிபறையநீ தூரவிலகென்று
ஆவிதவித்திடப் பாரிலுறைத்திடும் இந்த

கீர்த்தனம்-இ-ம்-ஆகிரி-ரூபகதாளம்.

பல்லவி.

தில்லைவலஞ்சுற்றினார் சிதம்பரத் தெல்லைவலஞ்சுற்றினார்

அநுபல்லவி.

தில்லைவலஞ்சுற்றினார் தேவருமறியாத
எல்லைவாசல்கடந் திருளறவேண்டி தில்லை

சரணங்கள்.

சாதிக்குறையத்தானே சந்ததமுநினைந்து
வேதனைகொண்டுள்ளம் வெதும்பியேவாடி
பாதிப்பிறையணியும் பரமசிவனைக்கண்டு
போதமடைந்து பரிபூரணமாக தில்லை

மோகவலைகட்சிக்கி முழுமூடனாகவே
போகமேநிலையென்று புத்திகெட்டேனே
பாகவனைவேண்டல் பரவசமாகியே
ஏகாரத்திற்றன்னை யிருத்திட்டுச்சகிக்க தில்லை

ஓராறுதாண்டியு மேன்மணிக்கோட்டைகள்
சீராறுகாணாத சிதம்பரரகசியம்
ஈராறுநாள்கொண்டு இருத்திப்புலன்றனையும்
பேராறுபெருகியே பெருவெளிகாண தில்லை

வசனம்.

இப்படித்தில்லைத்தலத்தைவிடாமல்சுற்றிவந்தால் தன்னிடம்சுவாமிவருவாரென்றும் மனதைப்பார்த்துச் சொல்லுகிறார்.

கீர்த்தனம் இ-ம்-பூரணசந்திரிகையாணி-ஆதிதாளம்.

பல்லவி.

வருவார் வருவார் மனமே நீ மயங்காதிரு சொன்னேன் சொன்னேன்
வேணது தருவார் கருணைபுரிவார் திருவம்பலவன்
பரகதியுந்தருவார் சாதி பறையனென்றும் பாரார் நீயதை
உறுதிகொள்ளவேணும் மெய்யன்புடன்
அரகராவென்றுருதரஞ் சொன்னாலும்போதும் வருவார்

வசனம்.

தன்னை இரட்சிக்கும்சமையம் இதுதானென்றுசொல்லுவார்

கீ-ம்-இ-ம்-தனசரி-ஆதிதாளம்.

பல்லவி.

இதுநல்லசமயமையா ரட்சிக்க இதுநல்லசமயமையா

சரணங்கள்.

இதுநல்லசமயமையா யென்னைரட்சித்தாளும்
ஈசமகேசநடேசசபேசா இதுநல்ல
பாலகிருஷ்ணன்போற்றும் பதங்களைக்காண
சீலமுள்ள முத்திசேருவதற்கே இதுநல்ல

வசனம்.

இவ்வளவுசொல்லியும் இரங்காமற்போகவேண்டியதென்ன வென்றுசொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-பியாகு-ரூபகதாளம்.

பல்லவி.

இரக்கம்வாராமற்போனதென்னகாரணம்சுவாமி
கருணைக்கடலென்றுயெந்தன் காதில்கேட்டுநம்பிவந்தேன்

சரணங்கள்.

ஆலமருந்தியண்டருயிரை யாதரித்தவுனதுகீர்த்தி
பாலகிருஷ்ணன்பாடித்தினமும் பணிந்திடும்நடராஜமூர்த்தி
பழியெந்தனைநான்செய்கினும் பாவித்திடுஞ்சிதம்பரமென்று
மொழிகற்றவர்வழிபெற்றவர் கனகசபாபதியிப்படி இரக்

விருத்தம்.

அண்டானதியானவையும் வேள்விகளமைத்தும்
குன்றில்லாத்தவம் புண்ணியமலைகுவித்தும்

வின்றிடலாமேயீசன் றனக்களித்தவிவேகம்
மன்றுளாடியபாதத்திலேமனம்வருமோ

வ-ம். மகாபுண்ணியசாலிகளுக்குமுத்திவருமேயன்றிதனக்குவரா
தென்று சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-தனுசரி ஆதிதாளம்.

சாதியில்தாழ்ந்திடும்புலையனுக்குப்பர கதியா-வேத
சாஸ்திரநான்கினுமோதறியாதது விதியோ
நண்டுநத்தைகளைவதைசெய்தருந்திய தேகம் மன்றுள்
நடனதெரிசனங்காணவென்றாலதி மோகம்
எந்தவழியைக்கண்டேறுவது ஞானம் செக
தீசனுக்கன்றோதெரியுமந்தவு பாயம்
சிதம்பரம்போவேனென்றுரையா யிந்த
ஜென்மமெடுத்துவீணுகத்தவிக்குதென் னுவி

வசனம்.

இப்படி நான் ஈனசாதியாயிருந்தபோதிலும் உம்முடைய சர
ணாரவிந்தத்தில்வைத்தபுத்தியை மறந்தவனல்லவென்று சொல்லுகி
றார்.

துக்கடா இ-ம்-மணிரெங்கு ரூபகதாளம்.

பல்லவி.

எப்படிகெட்டாலுந்தன் பொற்பாதமறவேன்காணும் எப்படி

சரணங்கள்.

அற்புதமாகியதில்லை யம்பலவாணரேநான்
சொற்பனத்திலுமையன்றி யெப்பொருளாகவும்வேண்டேன்
தப்பிதமெத்தனைசெய்கினும்
கைப்பிடித்து ஆண்டுகொள்ளும் எப்படி

திருநாளைப்போவார்புராணம்.

இவ்வண்ணமிரவுபகல் வலஞ்செய்தங்கெய்தரிய
லவ்வண்ணம்நினைத்தழுவ வடித்தொண்டரவரெய்தி
மவ்வண்ணத்திருமிடற்றார் மன்றுநடுக்கும்பிடவே
தெவ்வண்ணமெனநினைந்தே யேசாரினெடுந்துயிலார்.

வசனம்.

இந்தப்பிரகாரம் இராப்பகலாக வலம்வந்துக்கொண்டுஉள்ளே போகக்கூடாததன்மைநினைத்துவருந்தப்பட்டஉயர்வுபொருந்தியய டியவாமேசாரிகரியநிறமுள்ள கழுத்தினையுடைய சுவாமிகனகசபை யிலாடும்ஙின்றகூத்தை எப்படிதரிசிக்கலாமென்றுவிசனத்தோடுநித் திரைசெய்வார் இப்படிநித்திரைசெய்து மறுபடியுமெழுந்து சொல் லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-கண்டா-ஆதிதாளம்

பல்லவி.

விருதாச்சென்மமாச்சேவந்தும் விருதாச்சென்மமாச்சே
சதாகாலமுமையன்சந்நிதானத்திலிருந்துநிதானம்பெறுமல் விரு

சரணங்கள்.

முத்தியளித்திடு மூர்த்தியைக்கண்டு
பத்தியைப்பண்ணி பதமடையாமல் விரு

பொற்கழலசையப் பொதுவிலிருந்து
நக்கராடும்பதந் தனைப்பகராமல் விரு

தில்லைக்கதிபதி தெரிசனங்கொடுத்து
எல்லையில்வாவென் றிரங்கியழைத்தும் விரு

வ-ம். தனதுபதவிக்கியோக்கியநல்லவென்றுதள்ளுவாரோகொ ள்ளுவாரோ அப்படித்தள்ளினாலும் தில்லையிலேதானே என்தேகத் தைவிடுவதேயன்றி திரும்பிப்போகமாட்டேனென்று சொல்லிப் பு லம்புகிறார்.

கீர்த்தனம்-இ-ம்-புன்னுகவராளி-ரூபகதாளம்

பல்லவி.

தள்ளுவாரோ எந்தனைக் கைகொள்ளுவாரோ

சரணங்கள்.

தள்ளிவிட்டால்நான்போகேன் தனித்திருக்குஞ்சமயமல்ல
அள்ளிவிட்டனன்பை அம்பலவாணனொருக்கால் தள்

எனதுனதென்றபிமான மிச்சையறும்நிஷ்டைபண்ணி
மனயற்றதூவெளியில் மருவாதபாவியென்று தள்

நாறுமிந்தப்பொய்யுடலை நானென்றெண்ணிநான்சுமந்து
தூறுபட்டதுன்பமெல்லாந் துலைந்துதென்று இங்கேவந்தும் தள்

பாலகிருஷ்ணன்தேடிவரும் பாதமலர்காணேன்
வேல்விழியார்கோபங்கொண்டு விர்த்தியற்றமூடனென்று தள்

சிந்து

அடா இதென்னஜென்மம்என்று அத்தனதுஎல்லைசுற்றி வலம்வந்தார் இரவுபகலோயார் இவை ஈசன்கண்டுவிசுவாசமுடன்பாலக்ருஷ்ணன்பணியும் திருப்பாதமுள்ள தில்லைநாதனவன் கனவிலுருவாகியது.

திருநாளைப்போவார்புராணம்.

விருத்தம்.

இன்னல்தருமிருபிறவியிது தடையென்றேதுயில்லா
ரன்னிலையேயம்பலத்து ளாடுவா றிந்தினிதில்
மன்னுதிருத்தொண்டரவர் வருத்தமெல்லாந்தீர்ப்பதற்கு
முன்னணைந்துகனவின்கண் முறுவலொடுமருள்செய்வார்.

வசனம்.

இப்படிதிருநாளைப்போவாரென்னும்நந்தனார் இரவுபகலோயாமல் தில்லைத்தலத்தைச்சுற்றிவருவதால் தேகவருத்தமடைந்துவருத்தத்தினால் மயங்கிசோர்ந்து நித்திரையடைந்தார் அந்தநித்திரையில் நடராஜமூர்த்திவந்து காட்சிதந்துசொல்லுவார்எனக்குமிகவும்பிரியமுள்ளநந்தனாரேயும்மிடத்தில் நம்முடையபத்தர்களாகிய வேதியர்களைவரச்சொல்லுவோம் அவர்கள்முன் நீர்அக்கினிப்பிரவேசமாகியெழுந்துமறைபடித்துவேதியர்களுடனே சபாபிரவேசம்பண்ணுமென்றுரைபகர்ந்துஐயன்அந்தரத்தியானமானார் நந்தனார் கனவில் காட்சியானதைக கூடுகளித்து விழித்துதெளிந்து அளவில்லாசந்தோஷங்கொண்டுநன்றியறிந்து சுவாமியைத்தோத்திரம்புரிந்துசொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-தண்டகம்-ஆதிதாளம்

பல்லவி.

சந்நிதிவரலாமோ சுவாமி தெரிசனந்தரலாலோ சந்

இல்லறவாழ்வாம் பனிமுடி
இருந்தேனென்றே மிகவாடி
அல்லும்பகலுங் கொண்டாடி
அறியேன்கனக சபைநாடி சந்

வீதியிலேசற்றே வந்திருந்தேன்
வேடிக்கைபார்த்துகொண் டிருந்தேன்
சாதியிற்றாழ்ந்தவனென் றறிந்தேன்
தனித்திருப்போமென் றிங்கே வந்தேன்

காலால்வீசிக்கனல் — மூட்டி
காலமதிமண்டலமே — லோட்டி
பாலாறுபெருகவேயெனைக் — கூட்டி
பார்த்ததுமில்லைநான் — தோட்டி சந்

வசனம்.

நந்தனார்தான்கண்ட சொற்பனத்தைக் கொண்டாடுவார்

கீர்த்தனம்-இ-ம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்

பல்லவி.

சொற்பனங்கண்டுகொண்டேன் அதிசயமாய்ச்
சொற்பனங்கண்டுகொண்டேன்

அநுபல்லவி.

சொற்பனங்கண்டுகொண்டேனெல்லாம்கற்பனையென்றறிந்தேன்
தற்பதவாக்கியமேயுருவாகி யற்புநடனம்புரிய — சொற்

சரணங்கள்.

அம்பிகைமாணாளமான்மழுவணிந்திடுஞ் செங்கோளன்செம்பொன்
னம்பலந்தனிலதாளமத்தளம்போடமறைகள்பாடகொண்டாட
மண்டலத்தோராசைதீர்ந்துமண்டபமணியோசைநேர்ந்து
மனதுருகமறலிருகவரந்தருகவரந்தரும் — சொற்

மங்கையர்மோகமில்லாதாரையும்வருந்தி யழைக்கும்பொல்லாதாகிய
மாயப்பிணியைவெல்லமருநதுசொல்லவழியிற்செல்லநல்லபண்ணவர்
முரசடிக்கபதஞ்சலிவியாக்கிரம பாதந்துதிக்க மாயன் கோபாலகிரு
ஷ்ணன்களிக்கஉடுக்கையெடுக்கஉலகந்துறக்கசிறக்த — சொற்

வ-ம். நந்தனார் தான்கண்டகனவு நிட்சயமோபொய்யோவென்
றுசந்தேகப்படுவார்.

கீர்த்தனம்-இ-ம்-சூரியகாந்தம்-சாப்புதாளம்

பல்லவி.

கனவோநினைவோ கண்டதுவீணோ
மனதிலுறுதிகொள் வழியொன்றுங்காணேன் — கனவோ

நித்திரைதனிலொரு சித்தனுருவாய்வந்து
முத்திதருவேனென்று நத்திபேசினதுண்டு — கனவோ

ஆருமிகழ்ந்துதள்ளும் நாறும்புலையனென்னை
வாழும்பரமபதஞ் சேருமென்றழைத்தது — கனவோ

கிட்டிநெருங்கிவந்து தட்டியெழுப்பியொரு
வெட்டவெளியைக்காட்டி கட்டளையிட்டது — கனவோ

வசனம்.

தான்கனவில்கண்டதுபோல் சுவாமிவருவாரோவாராரோவென்று சஞ்சலப்படுவார்.

கீர்த்தனம் இ-ம்-சாமாராகம்-ஆதிதாளம்

பல்லவி.

வருவாரோ வரம்தருவாரோஎந்தன்
மனதுசஞ்சலிக்குதையோ வரு

திருவாருந்தென்புலியூர் திருச்சிற்றம்பலவாணன்
சுருநாதனுகவந்துஎந்தன் குறைதீர்க்கக்கனவுகண்டேன்
இருவினைப்பிணிகளைக் கருவறுத்திடுகிறேன்
பயப்படாதேயென்றுசொல்ல வரு

மறைநாலும்வழுத்தரியா மகிமைபெறுநடராஜன்
நரையுறஞ்சேவடியை நாடிநம்பினவனல்லவோ
அனுதினஞ்சிவசிதம்பரமென்றே
வடிமையேற்கருள் புரிந்திடயிங்கே வரு

மணிமார்புஞ்செஞ்சடையும் பார்க்கவெகுமையலானேன்
பணியுங்கோபாலகிருஷ்ணனிடம் பரமதயாநிதியல்லவோ
பவக்கடலடிக்கடி பெருகுதுநிலைக்குமோ
மலைக்குதுகரையேற்ற வரு

வ-ம்.நந்தனர் இப்படி அனேகவிதமாய்வருவாரோவாரூரோவென்று பலவிதமாகக்கொண்டாடுவார்.

திருநாளைப்போவார்புராணம்

விருத்தம்.

இப்பிறவிபோய்நீங்க வெரியினிடைமூழ்கி
முப்புரிநூன்மார்பருடன் முன்னைவாவெனமொழிந்த
வப்பெரியசேர்தில்லைவாழந்தணர்க்குபெரியம்மை
மெய்ப்பொருளாளருமருளியம்பலத்தேமேவினர்.

வசனம்.

நந்தனர் கனவிலேவந்துசொல்லிய நடராஜமூர்த்தி தில்லைமூவாயிரம்பேர்கள் கனவிலேவந்துசொல்லுவார் பக்தர்களே எனக்கு மிகவும் பிரியமுள்ளவனுகிய திருநாளைப்போவாரென்னும் அழகாகியநாமத்தைக்கொண்டு என்னைக்காணவேண்டுமென்று தன்னைக்காணிக்கைகொண்டு சாதியிற்றாழ்ந்தவனென்று மிகவுங்குழைந்துகொ

ண்டிங்கேவரலாகாதென்று பயந்துக்கொண்டுதன்னைத்தவிர மற்றெல்லா மனித்தியமென்று பத்திபண்ணி யடையவேண்டுமென்று தில்லையைசுற்றிக்கொண்டுதெற்குகுளத்தங்கரையில்நின்று ஆடிப்பாடி ஆனந்தங்கொண்டிருக்கிறார் அவரைஎன்னைப்போல்நினைத்து நீங்களெல்லோரும்போய் அழைத்துவாருங்களென்றுசொல்லி சுவாமிமறைந்தார் இப்படிக்கண்டகனவை மூவாயிரம்பேர்களும் பேரம்பலவாசல்வந்து ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்ளுவார்கள்.

தரு-இ-ம்-சங்கராபரணம் அடதாளம்

கண்ணிகள்.

அதிசயமொன்றுகேளப்பா தீக்ஷதரே
யர்த்தராத்திரிப்போது லெண்ணேஎன்றேன்

துதிபரவசமாகத் துதிபரவுமம்பல
வாணன்கனவில்வந்தா ருள்ளே

வாஸ்தவமெனக்குமிந்தவண்ணமாகக்கனவில்
வந்துறைத்தாரதிந்தே நாடிஉத

யாஸ்தமயமாகுமுனவனருட்படிக்கு
அழைப்பதுத்தமமென்று ரோடி

அப்போதங்குவந் தவப்பண்ணுதீட்சதர்
ஆமாமிதுநிச்சயந்தான் எங்கோன்

செப்புயசொற் செந்தீவளர்த்திடச்
செய்யவேண்டுமவ சியந்தான்

அவசியமென்கிறீர் காரியந்தெரியாமல்
யாருக்கடுக்குமோ புலையன்-சிறந்த

தவசிரேஷ்டர்சூழுந் தலத்தினில்வருகத்
தலைபத்தோ அவன்பந்தா லலைவன்

பத்தியுள்ளவனே பரமனுக்குயிர்தோழன்
பதஞ்சலிபுலிப்பாதா காட்சிசிவன்

சித்தத்தின்படிசெய்து செனனங்கடைகடப்போம்
தெளிவீர்நீங்களிந்தச் சூட்சி

என்றுராங்குசிவசங்கரதீட்சதர்
இன்னமுந்தாமச மேதோ-நீச்சன்

என்றுனுந்திருச்சந்நிதிக்குள்வருவ
தொருகானுங்காட்டத் தகாதோ

சொல்லுமென்றுரவராமென்றுருங்கட்குச்
சித்தத்திலுள்ளசந் தேகம்-தெளிய

அல்லும்பகலுமோயாமேசாஸ்திர
மாராய்வதற்குமனோகர சாகரம்
தரும்படிபேசிச்சந்தேகந்தெளிவ
தத்தென்றுரைத்த மொழியேகம்
பெருங்கூட்டமாகவேகூடிச்செல்கிறாரவர்
பேதமறைந்தொரு வழியே

வசனம்.

தில்லை மூவாயிரவர்கள் சாஸ்திரிமார்களிடத்தில் சந்தேகந்தெளிதல்.

விருத்தம்.

மறைக்கிழவரிவ்விதஞ்சென்றார்களங்கே
மனுக்கியானிகளாசீர்வாதஞ்செய்து
வந்தகாரியமேதோவுரைப்பீரென்ன
மற்றுமானவர்தங்கள் கனவிற்றோன்றி
குறைந்தமதிபுலைச்சாதிவந்துதித்தோன்
கோதிலானந்தனென்போனவநல்லன்பன்
கூறமிவ்வூரெல்லைவலம்வருவான்நாளை
கொணர்ந்தவனைத்தீமூழ்கச்செய்தேஅப்பால்
முறையொருசந்நிதியில்நம்முன்னாக
விடுங்களென்றருளிச்செய்தவர்மறைந்தார்
உணர்ந்தோமுன்னிதுதெரியச்சொல்லவந்தோம்
மொழியுமாறுத்தரம்யாதென்றார்நீதி
அறிந்தவனோராமந்தப்படிக்கேசெய்வ
தழகாகுமென்றனர்பின்மகிழ்ச்சியாலே
அந்ததில்லைமாநகரத்தெல்லைசுற்றி
யாடுவார்நந்தனாரைத்தேடுவாரே.

திருநாளைப்போவார்புராணம்.

விருத்தம்.

தம்பெருமான்பணிகேட்குந் தவமறையோரெல்லோரு
மம்பலவர்திருவாயின் முன்பட்சமுடனின்று
எம்பெருமானருள்செய்த பணிசெய்வோமென்றேத்தி
கம்புரிவுபெருகவந்திருத் தொண்டர்பாரச்சார்ந்தார்.

வசனம்.

தமதுபிரானுகிய சபாநாதரிட கட்டளையைக்கேட்டதவம்பொருந்திய பிராமணர்களெல்லோரு மம்பலவாணரது கோயிற்றிருவா

சல்முன்புகூடிபயந்தோடும் நம்முடையஆண்டவரருள்செய்த ஊழியத்தைச்செய்வோமென்றுவணங்கி அன்புமேற்பட்டிருக்குந்திருநாளைப்போவாரைத் தில்லைமூவாயிரவர் தேடவருகிறார்கள்.

கீர்த்தனம்-இ-ம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

தொண்டரைக்காண்கிலமே தில்லையில்வந்த தொண்டரைகாண்கிலமே

அண்டசராசரமெங்கும்படியளந்து
மன்றுளாடியமன்னவர்க்கடிமை — தொண்
சொல்லும்பொருளுமற்றுச்சோதிமயங்கொண்
டல்லும்பகலுமற்றம்பலவாணன் — தொண்
அஷ்டதிசையும்பரிபூரணமாகவே
மட்டில்லாதுவளர்ந்தோங்கியநாதன் — தொண்
வாசியடங்கிநடுவணைவழிகண்டால்
தேசிகவடிவுடன்தெரிசனஞ்செய்வார் — தொண்
பாலகிருஷ்ணன்பணிந்தேற்றியநாதன்
கோலச்சிலம்பணியுங்குண்டலநாதன் — தொண்

கீர்த்தனம்-இ-ம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

திருநாளைப்போவார்தெரிசனங்காணத்
தில்லைமூவாயிரமுனிவர்கள்வருகிறார் — திரு
பத்திவெள்ளமதுகரைபுரண்டோடும்
பரமானந்தக்கடல்முழுகாட்டும் — திரு
அரகரசிவனென்றுமேசொல்லும்
அனித்யசடத்துக்கபாயத்தைவெல்லும் — திரு
அடியவர்மெத்தப்பெரியவரென்று
அம்பலவாணரருள்விடைகொண்டு — திரு

இதுவுமது-சிந்து.

பதம்-இ-ம்-சௌராஷ்டிகம்-ஆதிதாளம்.

பல்லவி.

தேடித்திரிந்தார் பாருமநந்தனார் தம்மைத்
தில்லை மூவாயிரவர்

அநுபல்லவி.

நஞ்சதுவேதப்பிர தாசனே
நடுங்கைசிவகாமிப்பிரா ணேசனே
ஆடும்பதநடன சபேசனே
ஆவலாகத்தொழுதேவரும் நேசனேத் - தே

சரணங்கள்.

தண்டர்மரைமலர் தடமும்மாந்தர்களாடிக்
கொண்டானடித்திடு மிடமும் அன்னமளிக்க
உண்டானந்தக்கூறு மடமும்சோரர்பரவுஞ்
சண்டாளர்வாழும்வா ருடமும்அன் றிச்சூத்திர
சாதிமுதலானபல வாடையும் பல்லாண்டு
ஓதியுலாவிவரு மேடைமனுவிக்கியான
நீதியுணர்ந்தோர்கள் மாடமின்னமும்பல
மாதிரிகளாடுந்திண்ணே மேடைஉன்னதமாகக்

கொங்குமிகுத்தவெங்குமணத்திடுஞ் சோலைகருப்பஞ்சோலை
தங்குமுயர்ந்துகதித்திடும்வாழையின் சோலைதாழையின்சோலை
தெங்குமிலுப்பையுமொன்றுபொருந்திய சோலைகாவனிற்சோலை
துங்கமதானபலாக்கனியோங்கிய சோலைமற்றுஞ்சோலை
எங்குஞ்சுற்றிப்பார்த்துமறையோர்கள் தங்கள்தங்கமேல்

நயிதமும்.

பொங்கரவணிந்தசிவசங்கரன் கிருபையிதன்மேல் ஓங்க

கூக்குரலிட்டுச்.

சங்கை॥'றச்சென்னியிற்கரங்களைக்குவித்தெங்களைத் தாங்க

மனமும்வந்து.

அங்கேயெங்கள்பங்கினிலிருந்து யேழைவருத்தம் நீங்க

கிருபைசெய்வதற்கு.

உன்னதேகடனென்ன உவந்துக்கொண் டாடி
உரியவேதமந்திராதிகள் பாடி
உன்னஞ்சொன்னந்தனர்வர நாடி
மூளுங்கொடைக்காரரெனவிரைந் தோடி
தேடித்தேடித்திரிந்தார் யாரும்நந்தனர்தம்மைத்

வசனம்.

இந்தப்பிரகாரம் தில்லைமூவாயிரவர்களுந்தேடி அலுத்து ஓரிடத்தில்யாவருங்கூடி சுவாமியைத் துதிசெய்கிறதென்று நிச்சயஞ் செய்து தோத்திரஞ்செய்கிறார்கள்.

தரு-இ-ம்-கல்யாணி-அடதாளம்.

பல்லவி.

உனதுமகிமையை யொருவரறிவார்களோ
உலகிலுள்ளோரையனே

சரணங்கள்.

கனவிலேவந்தெங்களுக்குச்சொன்ன அந்த
காரணமறிந்ததிகாலையிலே யெழுந்த
இனத்தார்நாங்கள்யாருமிசைந்தொருமித் திந்த
எல்லைமுழுதுந்தேடியிளைத்தோமெங்களுக் கந்த
இணையில்லாதநந்தனொருவனு மகப்பட
வில்லையென்னசெய்வோம் ஸ்திரப்படஉனது
அடையவர்திரிபுரமனலாகவே முடித்து
வன்பாகமான்மழுவுங்கையிலே பிடித்த
விடப்பாகனேகாளிவெட்கும்படி நடித்த
மெய்யரதுபக்தவிர்த்தாளையாவென்றே படித்த
வாறுநீபறிந்தருள்செய் ஐயனே
வனசநிகபுதசரணத் துய்யனேஉனது
அன்னைசிவகாமியனுதினம்வளர் தில்லை
யம்பொன்னகர்வருவோற்காந்தொருதூய தில்லை
உன்னையன்றியுலகத்துக்குப்பொருளு மில்லை
யுத்தமனேயெங்கட்குரியதுணையு மில்லை
ஓதும்நந்தனார்தம்மைவரச் செய்யும்
ஊழ்வினைதவிர்த்தவர்க்குஅருட் செய்யும் உனது

வசனம்.

இவ்விதமாகச் சுவாமியைத்துதித்து தில்லைமூவாயிரவர்களனைவரும் நந்தனரைத்தேடி யலுத்துவரு மார்க்கத்தில் ஒதுப்புறமாக நின்றுக்கொண்டிருந்த நந்தனர் வேதியரைக்கண்டு தூரவிலகிநின்று தலைவணங்கிச் சொல்லுவார்.

விருத்தம்.

திட்டமுடன் தணிந்துமனமொடுங்கித் தவம்புரியுந்தில்லைமன்றுளாட்டமிடநடராசன் கனவின்கண்டுசொன்னமொழி நம்பிக்கொ

ண்டு இட்டமுடன் திருநாளைப்போவாரிடம்வேதியர்களேகும்போ, கி
ட்டிநெருங்தாரையுமென்றேவிலகியோர்வார்த்தைகேளீரென்றார்.

கீர்த்தனம்-இ-ம்-செங்கலா-ரூபகதாளம்.

பல்லவி.

கிட்டநெருங்கிவருகாதே சுவாமிகாதில்
கேட்டபேர்க்குபாவம்வரு மெனதுசென்மம் கிட்

சிட்டர்புகழுந்தில்லையில் செழித்துவாழும்வேதியர்கள்
இஷ்டமிதுவல்லவென்று சொல்லவேணுமோபுலையன் கிட்

உலகினில்கடைச்சாதியெனக் குவமையாருமில்லையே
பலவிததுஷ்டகருமஞ்செய்து பாரில்வந்தபுலையன் கிட்

வேலைசெய்துஉடம்புவளர்க்க வேணுமிந்தநாயேன்
தோலுமெலும்புமுதுகினில்சுமந்து அலையும்புலையனையே
செத்தமாடிழுப்பதெனது சேவகம்படித்துயெல்லை கிட்

வசனம்.

இப்படிவணங்கிச் சொல்லிய திருநாளைப்போவாரைப்பார்த்து
வேதியர்கள் சோல்லுவார்கள்.

கீர்த்தனம்-இ-ம்-ப்ருட்டி-ரூபகதாளம்.

பல்லவி.

சாதியிலுயர்ந்தாலென்ன இந்தபேருபெருமையுமில்லையே
சாதிப்பேருகொண்டதாலே சங்கரனுருலகில்வந்து
ஆதரவுடன்வரங்களீய்ந்து அழைப்பாரோசேர்ப்பாரோ
அளிபெறவேமீசன்கழலை யறிவிலுன்னியடிபணிந்து
தெளிந்திடாதபேரைமுத்தி தேடகிறனுடுமோகூடுமோசாதியில்

வசனம்.

இப்படிச்சொல்லியபின் தாங்கள் வந்தகாரியம்பேசுவார்

திருநாளைப்போவார்புராணம்.

விருத்தம்.

ஐயரேயம்பலவருட ராவியப்பொழுதணைந்தோம்
வெய்யவழனமைத்துமக்குத் தரவேண்டியெனவிளம்ப
நையுமெனத்திருத்தொண்டர்நானுவந்தேனெனத்தொழுதார்
தெய்வமற்றமுனிவர்களுந் தீயமைத்தோமெனமொழிந்தார்.

வசனம்.

ஐயரே நடேசருடையகட்டளையால்இப்போதுவெவ்விதமாயகி
அக்கினியைமூட்டிஉமக்குஅதில்முழுகும்படி கொடுக்கவந்தோமெ

ன்றுசொல்ல இளகியமனதையுடைய திருநாளைப்போவார் அடியே ன் கட்டைகடைத்தேறினேனென் றவர்களைத்தொழுவார் தெய்வீ கமாகியவேதத்தையுணர்ந்தபிராமணர்களும்தீவளர்த்தினேமென்று சொல்லநந்தனர் கேட்டுச்சந்தோஷமடைந்து நான் இன்றைக்குத் தான்டு த்தனுனேனென்றுவேதியரைப்பார்த்துச்சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-பியாகு ஆதிதாளம்.

பல்லவி.

கண்டேன்கலிதீர்ந்தேன் பவக்கடல்கரையேறிவந்தேன்
சோதிமறைமுடிவாஞ் சொல்லிறந்திடுமீசன்
பாதம்பணிவிடைசெய் பாக்கியவானுமைக் கண்

எல்லையைக்காணுமுன்னே யிருள்விலகுமுங்கள்
சொல்லைக்காணுமுன்னே துன்பங்கள்தீர்ந்திடக்
கண்டங்கருகச்செய்யுங் கண்ணுதலேயுங்கள்
உள்ளங்குடியாய்க்கொண்டா ருங்கள்தரிசனம்

வசனம்.

நந்தனர் நான்சின்னசாதியா யிருந்தபோதிலும் தெய்வமிரங்கி ற்றென்றுசொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-தனசரி-ஆதிதாளம்.

எனக்குமிரங்கிற்றே நான்மெத்தவைசாதியல்லோ
தனக்குள்தானுயிருந் தகிலப்பிரபஞ்சமுந்
தன்னுளடக்கும் பொன்னம்பலவன்கிருபை என

அல்லும்பக்லுமருந்தவஞ்செய்யினு
மறியாரொருவருமம்பலத்தெய்வம் என

நான்குமறைமிகவும் நானறியேன்
றேதியவுண்மைவுலகமறிய என

வசனம்.

நந்தனர் என்னதவஞ்செய்தேனே இவ்வுலகின்கண்யாவருக்கு ங்கிடைக்காதபாக்கியம் கிடைத்ததென்று சொல்லுவார்.

கிர்த்தனம்-இ-ம்-ஆகிரி-ரூபகதாளம்.

அம்பலவாணனைத்தென்புலியூரானை நம்பிப்பணிந்தேனே
அர்ச்சனைசெய்து கும்பிட்டிருந்தேனே
தில்லைப்பதியில்வந்து எல்லைகடந்தேனென்று
அல்லலறுத்தேனேசஞ்சித விரையெல்லாமறுத்தேனே
தாண்டவமாடின ஆண்டவனேசேவடி
வேண்டித்துதித்தேனேமுக்குணங்களைத்தாண்டிக்குதித்தேனே

எந்தனெனதென்றெந்தவேளையுமாயுஞ்
சிந்தைநழுவிற்றேசேர்ந்தவனென்று தந்தைத்தழுவிற்றே
தெள்ளுதமிழ்ப்பாடியுள்ளமுருகியுள்ளில்
கள்ளங்கருகிற்றேகருத்திலெட்டா வெள்ளம்பெருகிற்றே
ஆசைவலையைப்போட்டுமோசம்படுத்துஞ்சில
பாசங்குலைந்தாரேஅளவிடா கிலேசந்தொலைந்தாரே
பெண்ணரிடமாலுக்கொண்ணுதெனச்சடைத்
தண்ணைத்தணைந்தாரேகருணைபோக்கு கண்ணலணைத்தாரோ
அடுத்துவந்தவனென்று பிடித்தபேய்களையோட்டி
கடுத்தாளக்கொண்டாரோ பரமபதங் கொடுத்தாளக்கொண்டாரே

திருநாளைப்போவார் புராணம்

விருத்தம்.

மறையவர்கள்மொழிந்ததற்பின் றென்னியைஞ்சின்மதிபுரத்து
பிரியுருஞ்சுந்திருவாயின் முன்னாகப்பிசகர்தன்
னிறையருளால்மிறையவர்க ணெருப்பமைத்துகுழியேந்தி
பிறையவர்தாண்மனங்கொண்டோ பெரிசூழல்வலங்கொண்டார்.

வசனம்.

அப்படி பிராமணர் சொல்லினபின்பு தென்திசையுள்ளமதிலி ன்புரத்திலே சந்திரனைது தவழ்ந்துபோகும்படி உயர்ந்திருச்கும் திருக்கோபுரவாசலுக்குமுன்னே சுவாமியின் நிறைந்தகிருபையோடுங்கூடியகட்டளையால் பகர்ந்திருக்கின்ற நெருப்பின்குழியையடைந்து நடேசருடைய திருப்பாதத்தை மனதில்தியானித்து அக்கினியைச்சுற்றி வலமாகவந்தார்.

இதுவுமது விருத்தம்.

கைதொழுதுநடமாடுங் கழலுன்னியழல்புக்கார்
எய்தியவம்பொழுதின்க ணெரியின்கண்ணிம்மலமாய்ப்
பொய்தகையருவொழித்தும்புண்ணியராய்முனிவடிவாய்
மெய்திகழ்முந்நூல்விளக்க வேணியனார்முடிக்கொண்டார்.

வசனம்.

கையாற்கும்பிட்டு நடனஞ்செய்கின்ற நடேசரது திருப்பாதங்களை மனதில் உறுதியாய்நினைத்து அக்கினியில்புகுந்தார் அப்படிச் செய்தபோது அந்தநெருப்பில் இந்தவுலகப்பந்தமாகிய நிலையிலாத உடலத்தையொழித்துப் புண்ணியஞ்செய்கின்ற பெருமை பொருந்திய பிராமணமுனிவன்வடிவாய்த் தேகத்தில் பூநூல்விளக்கச்சடைமுடியோடும் எழுந்தருளினார்.

கீ-ம்-இ-ம்-மோகனம்-ஆதிதாளம்
பல்லவி.
யாகோற்பவமானார் நந்தனார் அரனருளால்
யாகோற்பவமானார்
அநுபல்லவி.
சிவனாருரைத்த வாக்கியம்சித்தத்திலெண்ணி
சிறந்ததேமிக சிலாக்கியம்
தவறுவனேக பாக்கியம்
தன்னைக்கொண்டதே யோக்கியம்
தபனனோடுஉயர் கவனமேவிவரு
மேவருங்கந்தருவ ரெவருங்கண்டுதொழ-யாகோ
கையைச்சிரமேற் பதித்து சிவனேயென்று
கனகசபையைத் துதித்து
செய்யகுண்டத்திற் குதித்துகதிரவன்போல்
செனித்துதேவர்புகழ நடித்து
சித்தியாகியபாதம் முற்றும்பாம்புபுலி
பத்தியாய்தொழும் பதத்தைக்கண்டுதொழ-யாகோ
காதிற்குண்டல மிலங்கமுப்பூரிநூலுங்
கதித்தமார்பிட மிலங்க
ஓதுஞ்சடைகள் துலங்க-அவரைவிட்டு
ஓடியேவினை கலங்க
ஏதமற்றசதுர் வேதமோதிவரும்
நீதவேதியர்கள் போதுமென்றுதொழ-யாகோ

திருநாளைப்போவார்புராணம்.
விருத்தம்.

செந்தீமேலெழும்போது செம்மலர்மேல்வந்தெழுந்த
அந்தணன்போற்றோன்றினா ரந்தரதுந்துமிநாதம்
வந்தெழுந்ததிருவிசும்பில் வானவர்மகிழ்ந்தேமார்த்து
பைந்துணர்மந்தாரத்தின் பனியில்லாமாரிகள்பொழிந்தார்.

வசனம்.

சிவந்தநெருப்பில்நின்று எழுந்தபோது செந்தாமரைபுட்பத்தின்
மேல் உதயமாயெழுந்தருளிய பிரமாவைப்போலபிரகாசித்தார்பெரு
மைபொருந்திய ஆகாசத்தில்அந்தரதுந்துமியின் கோஷ்டமானதுஉ
ண்டாயிற்று தேவர்கள்சந்தோஷமாய் ஆரவாரித்து அழகாயிருக்கி
[illegible]

ன்றகற்பகவிருட்சத்தின் குளிர்ச்சிபொருந்திய மலர்களைவருஷமாக
ச்சொரிந்தார்கள்.

இதுவுமது விருத்தம்.

திருவுடையதில்லைவாழந்தணர்களுந்தொழுதார்
தரவரியதொண்டர்களும் பணிந்துமனங்களிப்பயின்றார்
அழகுமறைசூழ்ந்திரு மன்றுளாடுகின்றகழல்வணங்க
வருகின்றார் திருநாளைப் போவாராமறைமுனிவர்.

வசனம்.

ஞானசம்பத்தையுடைய தில்லையில்வாழும் பிராமணர்கள்கைகூப்
பினார்கள் பரவுதற்கரிய மற்றச் சிவபத்தர்களுந்தொழுது மனதில்க
ளிப்படைந்தார்கள் வேதங்கள்முழங்குகின்றகனகசபையில்ஆடுகின்
றபாதத்தை வணங்கும்பொருட்டுத் திருநாளைப்போவாராகிய ஒரு
வேதமுனிவர்வருகையில் ஆனந்தத்தாண்டவத்தை வருணித்துசொ
ல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்தேசிகதோடி-ஆதிதாளம்

பல்லவி.

தாதெய்தெய்யென்றாடுவார் அவர்
தத்தித்தெய்தத்தித்தெய்யென்றாடுவார்
ஆதிபராபரமாகியசித்து
ஆனந்தங்கொண்டொருகாலையெடுத்துத் தாதெய்
அண்டசராசரமெங்கும்நடுங்க
ஆதிசேடனார்முதுகணைருங்க தாதெய்
சீலம்பொருந்தியமுனிவர்கொண்டாட
திங்களைச்சூடியசெஞ்சடையாட தாதெய்
பார்புகழுந்தில்லைச் சிதம்பரநாதன்
பாலகிருஷ்ணன்பணிந்தேற்றியபாதன் தாதெய்

கீர்த்தனம்-இ-ம்-பந்துவராளி-ரூபகதாளம்

பல்லவி.

குஞ்சிதபாதத்தைத்தாரும் மனசஞ்சலபாவத்தைத் தீரும்

அநுபல்லவி.

செஞ்சிலம்பசையக் கனகசபைதனில்
ஜெணுதத்தகஜெணுதத்தமி திமித்தோமென்றாடிய-குஞ்

சரணங்கள்.

நெஞ்சிற்கவலையை யாற்றும்இந்த
வஞ்சப்பிறவியை மாற்றும்நாளும்
வஞ்சிசிவகாம வல்லிமகிழ்ந்திடும்
தஜ்ஜெம்தகிஜெந்தரிகிடதக்கிடதோ மென்றாடிய-குஞ்

சரணமென்றிங்கேநான் வந்தேன் ஜனன
மரணத்தில்மிக நொந்தேன் அந்தக்
கரணக்கல்மிஷங்கள் போக்கியேகாத்திடும்
இந்திரவானவர்மாமுனி வந்துநிதநத்திசெய்திடும்-குஞ்

பாலகிருஷ்ணன்தொழும் பாதா முத்தி
நால்வர்க்குதவிய நாதா யெந்தன்
அத்தனேகர்த்தனேசுத்தனேயித்தனைநிர்த்தனஞ்செய்திடும்-கு

கீர்த்தனம்-இ-ம்-யமுனாகலியாணி-அடதாளம்

பல்லவி.

ஆனந்தக்கூத்தாடினார் அம்பலந்தனிலே பொன்னம்பலந்தனிலே

அநுபல்லவி.

ஆனந்தக்கூத்தாடினார் அயனும்மாலும்பாடினார்
அந்தரங்கமாகச் சிந்தித்தபேர்க்கருள்
தந்தோந்தந்தோமென்று தொந்தொந்தோமென்று

சரணங்கள்.

பதஞ்சலிமா முனியைநோக்கிப்
பார்த்தபேர்கள் குறையைப்போக்கி
இதமகிதமென் றறிவைநீக்கி
ஏகமாக காலைதூக்கி-ஆன

மத்தளதாள மந்திரமுழங்க
வளரும்பிரமத கணங்களிலங்க
தத்திமிதக்கிட தோமென்றிலங்க
சபையுந்துலங்க சதங்கைகுலுங்க-ஆன

பாலகிருஷ்ணன் பணியும்பாதன்
பார்த்தபேர்கள் வரப்பிரசாதன்
ஞாலம்புகழுஞ் சீலபோதன்
சுந்தரர்தூதன் அம்பிகைபாதன்-ஆன

வ-ம். இப்படியாடி தாண்டவ தரிசனங்கொடுக்க இன்றைக்குத்தான் சித்தமிரங்கிற்றேவென்று சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-யமுனாகல்யாணி-ஆதிதாளம்.

சித்தமிரங்கிற்றே யாமுன்செய்த தவமுற்றிற்றே
அத்தாபரிசுத்தா வுன்னுடல்காணவந்தேன்
என்னையாண்டுகொள் இதுவேசமயம் உன்னுடல்காணவந்தேன்

சாதிமுறைமைபோக்குமென்னேச்சதுர்மறையோனுக்கும்
போதாநாதாவுன் னுடல்காணவந்தேன்
என்னையாண்டுகொள் இதுவேசமயமுன்னுடல்காணவந்தேன்
பாலகிருஷ்ணன்போற்றும்பாதா பதஞ்சலியாரேற்றும்
சீலாதிரிசூலாவுன்னுடல்காணவந்தேன்
என்னையாண்டுகொள் இதுவேசமயமுன்னுடல்காணவந்தேன்

சிந்து.

கனவிலுருவாகி வந்து காட்சிகொடுத்துக்கடாட்சித்தபின், எரியினிடைமூழ்கி வெகு இன்பம்பெருகியவன்பருடன், வேதமுனிவடிவாய் தில்லை வேதியர்கைதொழுதாதரவாய், அங்கம்புளகிதமாய்ச் செம்பொன்.

வசனம்.

திருநாளைப்போவாராகியமுனிவர் அக்கினியில்குளித்தெழுந்து கனகசபையில்வந்து மனமுருகி ஆனந்தம்பெருகி எம்மாண்டவராகிய நடேசமூர்த்தியைத் தோத்திரஞ்செய்கின்றது.

தேவாரம்.

பாளையுடகமுகோங்கிப்பன்மாடநெருங்கியெங்கும்
வாளையுடைப்புனல்வந்தெறிவாழ்வயிற்றிலனே தன்னு
ளாடையுடையுடைக்கழச்சிற்றம்பலவனுடல்கண்டாற் [னே
பீளையுடைக்கண்களாற் பின்னைப்போய்த்தொண்டர் காண்பதென்
பொருவிடையொன்றுடைப் புண்ணியமூர்த்திதன்
னுருவிடையன்மலைமங்கை மணாளனுலகுக்கெல்லாந்
திருவுடையந்தணர்வாழ்கின்ற தில்லைச்சிற்றம்பலவன்
திருவுடையைக்கண்கொண்டு மற்றினிக்காண்பதென்னே.
தொடுத்தமலரோடுதூமமுஞ்சாத்துகொண்டெப்பொழுது
மடுத்துவயங்குமயனோடு மாலுக்குங்காண்பரியான்
பொடிகொண்டணிந்துபொன்னாகியதில்லைச்சிற்றம்பலவ
னுடுத்துகில்கண்டகண்கொண்டு மற்றினிக்காண்பதென்னே.
வெச்சபேருணதக்காகு மென்றெண்ணிநமச்சிவய
பச்சமொழிந்தேனின தில்லையம்பலத்தாடுகின்ற
பிச்சன்பிறப்பிலிபேர் பந்தியுந்தியின்மேலசைந்த
கச்சினழகுகண்டாயுன்னைக் கண்கொண்டுகாண்பதென்னே.
நெஞ்சின்றநீலமலர்கின்றதில்லைசிற்றம்பலவன்
மஞ்சின்றவொண்கண்மலைகள்கண்டுமகிழ்ந்துநிற்க
நெஞ்சின்றெரியும்விளக்கொற்ற நீலமணிமிடற்றான்
நெஞ்சின்றவால்கண்டாற்பின்னைக்கண்கொண்டுபார்ப்பதென்னே.

ஊனத்தைநீக்கியுலகறியவென்னையாட்கொண்டவன்
தேனைத்தெனக்கினியான்றில்லைச்சிற்றம்பலவன்
வானத்தவருய்யவன்னெஞ்சேயுண்டகண்டந்துலங்க
மேனத்தெயிருகண்டாற்பின்னைகண்கொண்டுகாண்பதென்னே.

தெரித்தகணையாற்றிரிபுரமூன்றுஞ்செந்தீயின்மூழ்க
வெரித்தவிரைவனிமையவர்கோமானிணையடிக
டரித்தமனத்தவர்வாழ்கின்றதில்லைச்சிற்றம்பலவன்
சிரித்தமுகங்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே.

தருக்கமிசைத்துத்தன்றோள்வலி யுன்னிடத்தடவரைய
வரைக்களாலெடுத்தரப்பமலைமகள்கோன்சிரித்து
வாகன்மணிபத்து மணிதில்லையம்பலவா
னெருக்கமித்தவிதில்கண்டகண்கொண்டு மற்றினிகாண்பதென்னே.

வேற்றாகிவிண்ணாகிநின்றாய்போற்றிமீளாமேயாளென்னைக்கொண்டாய்போற்றி,யூற்றாகியுள்ளேயொளித்தாய்போற்றிவேலாதசத்தத்தினொளியேபோற்றி,பாற்றாகிபங்கேயமர்ந்தாய்போற்றியாற்றதனால்வேமாணுப்போற்றி, காற்றாகியெங்குங்கலந்தாய்போற்றிகைலைமலையானேபோற்றிபோற்றி.

சுற்றுமமரர்சுரபதிநின்றிருப்பாதமல்லார்
பற்றொ[illegible]றிலோமென்றனைப்பா[illegible]வயுணர்ந்சையுண்டாய்
செற்றக்கணங்களைத்தீர்த்தி[illegible]தில்லையம்பலவன்
நெற்றியிற்கண்டகண்கொண்டு[illegible]றினிக்காண்பதென்னே.

சித்தெழுந்தசெழுங்கமலத்தன்சேவடிகள்
மைத்தமனத்தவர்வாழ்கின்றதில்லைச்சிற்றம்பலவன்
முத்தும்வைரமும்மாணிக்கந்தன்னுளங்கிதூவு
முத்துமலர்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே.

பிச்சாடல்பேயோடுகந்தாய்போற்றி பிறவியறுக்கும்பிரானே போற்றி,வைச்சாடலென்னுமுகந்தாய்போற்றி மருவியன்சிந்தைபுகுந்தாய்போற்றி,பெச்சாகபுரமூன்றுமெரித்தாய்போற்றி போகாமதன்சிந்தைபுகுந்தாய்போற்றி, கச்சாரகைமசைந்தாய்போற்றிகைலைமலையானேபோற்றிபோற்றி.

வானத்தாய்போற்று மருந்தேபோற்றி வந்தென்றன்சிந்தைபுகுந்தாய்போற்றி, யூனத்தைநீக்குமுடலேபோற்றி யேங்கியழலாய்நிமிர்ந்தாய்போற்றி, தேனத்தைவார்த்ததெளிவேபோற்றிதேவர்க்குந்தேவனாய்நின்றாய்போற்றி, கானத்திலாடலுகந்தாய்போற்றிகைலைமலையானேபோற்றிபோற்றி.

ஊராகிநின்றவுலகேபோற்றி யோங்கியழலாய்நிமிர்ந்தாய்போற்றி, பேராகியெங்கும்பரந்தாய்போற்றி பேராதென்சிந்தைபுகுந்தாய்போற்றி, நீராவியானநிழலேபோற்றி நேர்வாரொருவரையுமில்லாய்போற்றி, காராகிநின்றமுகிலேபோற்றி கைலைமலையானேபோற்றிபோற்றி.

சில்லுருவாய்சென்றுதிரண்டாய்போற்றி தேவரறியாததேவேபோற்றி, புல்லுயிர்க்கும்புட்சிபுணர்ந்தாய்போற்றி போகாதென்சிந்தைபுகுந்தாய்போற்றி, பல்லுயிராய்பார்த்தோறு நின்றாய்போற்றி, பற்றியுலகவிடவாய்போற்றி, கல்லுறுவாய்நின்றகனலேபோற்றி கைலைமலைநாயகனேபோற்றிபோற்றி.

பண்ணினிசையாகி நின்றாய்போற்றி பாவிபாம்பாய்பாவமறுப்பாய்போற்றி, யெண்ணுமெழுத்துஞ் சொல்லானாய்போற்றி யென்சிந்தைநீங்காவிறைவாபோற்றி, விண்ணுநிலனும்தீயானாய்போற்றிமேலவர்க்குமேலேநீநின்றாய்போற்றி, கண்ணின்மணியாகிநின்றாய்போற்றிகைலைமலையானேபோற்றிபோற்றி.

இமையாதுயிராயிருந்தாய்போற்றி யென்சிந்தைநீங்கா விறைவாபோற்றி, யுமைபாகமாகித்தணைந்தாய்போற்றியூழியேழானவொருவாபோற்றி, யமையொருநெஞ்ச மயர்ந்தாய்போற்றி யந்தியுரானாய்நின்றாய்போற்றி, தமையாகிநின்றகனலேபோற்றி கைலைமலையானேபோற்றிபோற்றி.

மூவாப்பிறைவாயிறைவாபோற்றி முன்னமேதோன்றிமுளைத்தாபோற்றி, தேவாதிதேவர்தொழுந்தேவேபோற்றி சென்றறியெங்கும்பரந்தாய்போற்றி, பாவாயடியேனுக்கெல்லாம்போற்றியல்லாநவிவந்தேன்போற்றி, காவாய்கனகரத்தினமேபோற்றிகைலைமலையானேபோற்றிபோற்றி.

நெடியவிசும்பாடுநண்ணேபோற்றி நீளமுலகமுடையாய்போற்றி, படியமில்லாய்போற்றியங்கென்றடியாமைநின்றாய்போற்றி, கொடியவன்கூட்டிமுறைந்தாய்போற்றி கோயிலாயென்சிந்தைகொண்டாய்போற்றி, கடியவுருவமொடுமின்னேபோற்றி கைலைமலையானேபோற்றிபோற்றி.

உண்ணாதுறங்காதிருந்தாய்போற்றி யோதாதவேதமுணர்ந்தாய்போற்றி, எண்ணுயிலங்கைகோன்றன்னைப்போற்றி யிறைவிலிறமாயவைத்துகந்தாய்போற்றி, பண்ணுரிசையின்சொற்கேட்டாய்போற்றி பண்டேயுன்சிந்தை புகுந்தாய்போற்றி, கண்ணுயுலகுக்கு நின்றாய்போற்றி கைலைமலையானேபோற்றிபோற்றி.

சிந்து.

அம்பலமேவியசிதம்பரத்தைக் கண்டாரறிந்திலரால்

திருநாளைப்போவார்புராணம்.

விருத்தம்.

தில்லைவாழ்ந்தணர்களுடன்செல்லச்சென்றெய்திக்
கொல்லைமான் மழுவுடைத்தார்கோபுரத்தைத்தொழுநின்றஞ்சி
ஒல்லைபோயுட்புக்கா ருலகுய்யநடமாடும்
எல்லையினத்திலைப்பட்டார் யாவர்களுங்கண்டிலரால்.

வசனம்.

சைவபுராணமாகிய பெரியபுராணத்தில்திருநாளைப்போவார்நா யனாரென்னும் இயற்பெயர்சேக்கிழார்சுவாமிகள்சொல்லியிருப்பதா ல்இடையில் நந்தமாமுனியென்று வழங்குகின்றநாளைப்போவார்தில் லைமூவாயிரமுனிவர்களுங்கூடி பொன்னம்பலவந்தார் அதற்கப்பால வரைக் கண்டபேர்களில்லையென்று பெரியபுராணம்பாடியருளியசே க்கிழார்சுவாமிகள்சொன்னது அந்தத்திருநாளைப்போவாரென்னுமு னிவரானவர் புரட்டாசிமாசம்உரோகணிநட்சத்திரத்தில்கனகசபை யில்வந்து கற்பூரஜோதியைப்போல் தோன்றிய சிவசாரூப்பியத்தை யடைந்தாரென்று உபமன்னியமகாரிஷி புண்ணியபத்தர்விலாசத்தி லேயும் சொல்லப்பட்டிருக்கிறது.

இதுவுமது-விருத்தம்.

அந்தணர்களதிசயித்தரர் குருமுனிவர்துதிசெய்தார்
வந்தனைத்திருத்தொண்டர் தம்மைவினைமாசறுத்து
சந்தரைத்தாபரையுந் துணையடிதொழுதேதத்த
வந்தமில்லாவானந்த பெருங்கூத்தரருள்புரிந்தார்.

வசனம்.

மறையோர்கள்ஆச்சரியப்பட்டார்கள்அரியமுனிவர்கள்தோத்திரஞ் செய்தார்கள் முடிவில்லாத்தாண்டவஞ்செய்தருளுகின்றசபாநாதர துகட்டளையால் வந்தடைந்த திருநாளைப் போவாருக்கு தீவினையாகி ய களங்கத்தைநீக்கிய அழகாகியமலரையொத்த தமதிரண்டுபாதங் களையுந் தொழுதிருக்கும்படி அருள்செய்தார்.

விருத்தம்.

மாசுடம்புவிடத்தீயின் மஞ்சனஞ்செய்தருளியெழுந்
தாசின்மறைமுனியாகி யம்புலவர்தானடந்தார்
தேசுடையார்வாழ்த்தத் திருநாளைப்போவாரும்
மாசகலமுயன்று திருநடனங்கண்டுமகிழ்வுற்றார்.

வசனம்.

தனக்குமுன்னிருந்தஉடலமாகியமாசுதீரும்பொருட்டுஅக்கினியாகியதிருமஞ்சனமாடி யெழுந்து குற்றமற்றபிராமணமுனிவராகிய நடேசருடைய திருவடியையடைந்தவராகிய திருநாளைப்போவாருடையபதத்தைப்புகழ்ந்து தீவினையகன்று அறும்படி தில்லைமூவாயிரவர்கள் போற்றிசெய்துக்கொண்டிருந்தார்கள்.

வாழி விருத்தம்.

பங்கயமாதர்வாழி பார்மகளுமையாள்வாழி
செங்கண்மாலரியும்வாழி தேவர்கந்தருவர்வாழி
தங்குநான்மறைகள்வாழி தாரணிதாசர்வாழி
பொங்குநல்வல்லோர்வாழி போதமெந்நாளும்வாழி

மங்களம்.

ஓரடி-தரு-இ-ம்-அசாவேரி-ஆதிதாளம்

பல்லவி.

திருநாளைப்போவாருக்கு ஜெயமங்களம் எங்கள்
தில்லைமூவாயிரவர்க்கு சுபமங்களம்

அநுபல்லவி.

இருடிகள்முனிவர்க ளித்திசையமென
விருகரமுடிமிசை மருந்த்துதிசெய்கென
பரவுமுப்பாகப் பிரமங்கள்துதித்திடும்
பரமனும் பலத்தினில்கதித்திடும் திரு

சரணங்கள்.

திருவாசகமுந்திருக் கோவைபாடினவற்கும்
சீர்காழியிலுதித்துச் சிறந்தசம்பந்தருக்கும்
ஒருமாதிடந்தூதுக் குகந்தவிடுத்தவர்க்கும்
ஒருவரொப்பில்லாத்திரு நாவுக்கரசருக்கும்
உரியமறைக்கு முயர்கலைகட்கும்
உரகபதிக்கும் உவணபதிக்கும்
ஓதுஞ்சந்திரசூரியர் முனிவர்களுக்கும்
ஸ்ரீதிலாபுர வலர்முதலனைவர்க்கும் திரு

நந்தனார்திவ்வியசரித்திரக்கீர்த்தனை

முற்றிற்று.

உ

கடவுள் துணை.



# சிதம்பரக்கும்மி.

விநாயகர் துதி.

சீர்மேவுதில்லையம்பலத்தில் அன்பு
சேரக்கும்மிதமிழ்பாட
கார்மேவுகலைக்கோபுரவாசல்
கற்பகபிள்ளையார்காப்பாமே. க

முக்குருணிவிநாயகர்தோத்திரம்.

சர்க்கரைமோதகந்தேங்காயுங்கொண்டு
சந்நிதிமுன்பாகத்தான்படைத்து
முக்குறுணிபிள்ளையாரைவேண்டி
முழங்கிக்கும்மியடியுங்கடி. உ

சுப்பிரமணியர் துதி

கோலமயிலின்முதுகேரிவந்து
கும்பமுனிக்குவருள்செய்யும்
பாலசுப்பிரமணியன் பீஜாட்சரத்தைப்
பாடிக்கும்மியடியுங்கடி. ௩

சங்காதேவிக்குக்கைகூப்பி யாருங்
கையிலெடுத்துள்ளேபானம்பண்ணி
தங்காமற்சிவகாமிசந்நிதி
சார்ந்துகும்மியடியுங்கடி. ௪

கருதுஞ்சுருதிக்கெட்டாதசிவ
காமசௌந்தரிவாசலிலே
விருதுபேசியேசிறுகுழந்தைகள்
வேதம்படிக்குதுபாருங்கடி. ௫

நாலுபுறத்திலுங் கோபுரமாமதி
நடுவிலெங்கணுமாளிகையாம்
காலோராயிரங்கொண்டொருமண்டபங்
கட்டியிருக்குதுபாருங்கடி. ௬

தூயமறைமுதலாராய்ந்து இங்கே
துலங்கியமூவாயிரவர்
ஞாயம்பொருந்தியதேவசபைவந்து
நாடிக்கும்மியடியுங்கடி. ௭

சாந்துபொட்டுதளதளென்ன நல்ல
சந்தனவாடைகுமுகுமென
கூந்தலழகிகளெல்லோருங்காலே
குவித்துகும்மியடியுங்கடி. ௮

அஸ்தகடகம்பளபளென்ன சொல்லும்
அரைதோள்மாலைதளதளென்ன
விஸ்தாரமாகநின்றுகொண்டுகையை
வீசிக்கும்மியடியுங்கடி. ௯

கைதனில்விபூதிப்பையுங்கொண்டுஅவர்
கண்டத்தில்ருத்திராட்சமாலைபூண்டு
வைதீகபூசைசெய்கின்றதீட்சதர்
வாழக்கும்மியடியுங்கடி. ௰

கோவிலுக்குநாலுபேர்களுண்டாம்அவர்
குறித்தமுறையாய்பூசைசெய்ய
பாவித்தபின்பவர்வேறொருவர்வசப்
படுத்துவாரென்றேகும்மியடியுங்கடி. ௰௧

ஆண்டுக்குள்ளாறபிஷேகமுண்டாம்பின்னும்
அதிலேநடுத்திருநாளாம்
வேண்டிவந்தார்கலிதீருமென்று
விரைந்துகும்மியடியுங்கடி. ௰௨

பூமிபுகழ்ந்திடுந்தில்லைப்பதி அது
பூலோககைலாசமென்று

தாமரைப்பூவில்வாழுகின்றலட்சுமித்
தாயார்சந்நிதிபாருங்கடி. ௰௩

மூலஸ்தானத்தைக்கண்டாயேநல்ல
முத்தியிதுவெனக்கொண்டாயே
காலெடுத்தாடியநிர்த்தநடேசரைக்
கண்டுதெரிசிப்போம்வாருங்கடி. ௰௪

தில்லைமாகாளியோடிவர அவள்
சித்தங்கலங்கிதலைகுனிந்தாள்
வெல்லுவதெப்படியென்றொருகாலை
விண்ணிலெடுத்தார்பாருங்கடி. ௰௫

நெற்றியில்வேர்வைமுத்துதிர்ந்துமெத்த
நேத்தியதாய்ப்பரந்தோடிவர
பத்தியுடன்பொன்னம்பலவாணனைப்
பணிந்துகும்மியடியுங்கடி. ௰௬

தித்தியென்றீசனடம்புரியமெய்த்
தேவர்கள்பூமழைதான்சொரிய
மத்தளங்கொட்டியகோபாலகிருஷ்ணனை
வாழ்த்திக்கும்மியடியுங்கடி. ௰௭

சிதம்பரமென்றுசொல்லாமல்விச்
சித்திரக்கூடமென்றுசொல்லி
நிதங்கொண்டுமறையோர்கள்வந்து
நின்றிருக்கிறார்பாருங்கடி. ௰௮

காணிக்கைகொண்டுவாருங்கடி-இந்தக்
கனகசபையைப்பாருங்கடி
மாணிக்கவாசகர்புகுந்தவாசலை
மதித்துக்கும்மியடியுங்கடி. ௰௯

அன்னமுடன்பால்தேங்கனியும்
அபிஷேகமுங்கொண்டெந்நாளும்
பொன்னம்பலந்தனிற்சந்திரமௌலியைப்
போற்றிக்கும்மியடியுங்கடி. ௨௰

முத்தியளித்திடுஞ்சந்நிதிக்குச் சொல்லு
மேளமுந்தாளமுமேதுக்கடி
சத்தம்பெருகியகண்டாமணியோசை
சந்நிதிக்கோர்வையாம்பாருங்கடி. ௨௧

புட்டுவடையுந்தேன்குழலும் மணப்
புத்துருக்குநேர்சம்பாவும்
சட்டப்படித்தவருமலையன்
சந்நிதிக்கோர்வையாம்பாருங்கடி. ௨௨

சுற்றிவந்துச்சியைப்பாருங்கடி-நல்ல
　சோதிமயக்கம்பமொன்பதடி
தத்துவங்கள்தொண்ணூற்றாருங்கூடிச்
　சமைந்தசபையைப்பாருங்கடி. உ௩

பாவிகள்கண்ணுக்குச்செப்போடுஉற்றுப்
　பார்த்தால்பத்தரைமாற்றுத்தங்கம்
கோவைபாடியமாணிக்கவாசகர்
　கோவிலழகைப்பாருங்கடி. உச

அஞ்செழுத்தாலேமதிலுமுண்டாம்பர
　மானந்தக்கும்பமுமங்குமுண்டாம்
அஞ்செழுத்துப்படிக்கப்பாலேபிரம்
　மானந்தத்தாண்டவம்பாருங்கடி. உரு

கோடியுகந்தவஞ்செய்தாலுமிந்தக்
　கோயிலைப்பார்க்கமுடியாது
ஆடியபாதத்தைக்கண்டாருக்கிணை
　யாரென்றுசொல்லுவோம்பாருங்கடி. உசு

நெற்றியிலேதிருநீரணிந்து என்றும்
　நிஷ்களமாகியசிற்சபையில்
தித்திக்கவேசிவநாமத்தைப்பூசிக்குந்
　தீட்சதர்கூட்டத்தைப்பாருங்கடி. உஎ

வெட்டவெளியில்நிறைதிறந்துபார்க்கும்
　வேதியர்தீபமுங்காட்டிவர
சட்டமுள்ளசிவசிதம்பரமென்று
　சாய்ந்துகும்மியடியுங்கடி. உஅ

தில்லைவெளியைக்கண்டேண்டி அங்கே
　தேகபரவசங்கொண்டேண்டி
அல்லலறவாசல்நின்றேண்டிமிக்க
　ஆனந்தத்தாண்டவம்பாருங்கடி. உகூ

ஆகாசலிங்கத்தைக்கண்டேண்டி அங்கே
　யாருமறியாமல்நின்றேண்டி
ஏகாந்தமாகவிருந்தேண்டிமன
　தேகங்குலைந்ததுபாருங்கடி. ௩௰

சித்தஞ்சிதம்பரமாச்சுதடி முன்
　செய்தவினையெல்லாம்போச்சுதடி
சுத்தப்பிரம்மமயமாச்சுதடி யதைச்
　சொல்லத்தெரியுமோபாருங்கடி. ௩க

சாதிபேதங்களற்றேண்டி இந்தச்
சாஸ்திரமானவைவிட்டேண்டி
போதமயக்கந்தொலைத்தேனடி யின்று
புகுந்துகும்மியடியுங்கடி. ௩௨

நாடுந்தைப்பூரணபூசத்திலே ஏக
நாயகன்றன்குருவாரத்திலே
ஆடிநாடகம்பாம்புபுலிதனக்
காமென்றுகும்மியடியுங்கடி. ௩௩

சஞ்சிதகர்மங்கள்விட்டேண்டி பவ
சாகரத்தையொழித்திட்டேண்டி
குஞ்சிதபாதத்தைத்தொட்டேண்டி மனங்
கூர்ந்துகும்மியடியுங்கடி. ௩௪

சொல்லும்பொருளையுமற்றயே முன்
துன்பமனைத்துமொழித்தாயே
அல்லும்பகலையுமற்றயேதில்லை
யானந்தத்தாண்டவம்பாருங்கடி. ௩௫

விதியெழுத்தைக்கிழித்தாச்சு முன்
விட்டகுறைவந்துதொட்டாச்சு
மதியமிர்தமுண்டாச்சுதென்று
வாழ்த்திக்கும்மியடியுங்கடி. ௩௬

கோவிலுக்குள்ளேயனேகமுண்டு அந்தக்
குறிப்பறிந்ததைச்சொல்லுவீரே
தேவரகசியம்பள்ளியரைவந்து
தெளிந்துகும்மியடியுங்கடி. ௩௭

சண்டேஸ்வரர்தமைப்பாருங்கடி
சங்கிக்கேகைகொட்டுங்கடி
மண்டலம்புகழுமழகர்வாசல்
வாழிபாடுவோம்வாருங்கடி. ௩௮

வீட்டுக்கவலைகள்விட்டொழியார்
வீம்புகள்பேசியேவீணலைப்பார்
பாட்டைப்படித்தாலுஞ்சிதம்பரம்வந்த
பலனிதல்லவோபாருங்கடி. ௩௯

புத்திரபாக்கியம்மெத்தவுண்டாம்பசு
பொன்னுமணிப்பூஷணமுமுண்டாம்
பக்தியுடன்கோபாலகிருஷ்ணன்
பணியக்கும்மியடியுங்கடி. ௪௰

சிதம்பரக்கும்மி முற்றிற்று.



உ

சிவமயம்.

திருநாளைப்போவாரென்னும்

நந்தனர்திவ்விய சரித்திரக்கீர்த்தனைகளின்

# அ க ர ா தி.

அகராதி-முற்றிற்று.

---

